# முன்னுரை



## சைவம்

### தொன்மை

உலகச் சமய வரிசையில், தொன்மைச் சிறப்பும், செம்மை நலமும் சான்றனவாகத் திகழும் சமயங்களில், சிவமெனும் செம்பொருளை முழுமுதற்கடவுளாகக் கொண்டமைந்துள்ள சைவ சமயம் முதலிடம் பெறும் தகுதி வாய்ந்ததாகும். ஆரப்பா, மொகஞ்சதாரோ ஆகிய இடங்களில் அகழ்வாராய்ச்சி மேற்கொண்ட தொல்லியல் ஆய்வறிஞர்கள் தம் ஆய்வு முடிவுகளில் ஒன்றாக, 'சைவசமயம் உலகில் இன்று வாழும் சமயங்களில் மிக்க தொன்மைச் சிறப்புடையது' என்னும் உண்மையினைப் புலப்படுத்தியுள்ளனர்.

காசுமீரம் முதல் கன்னியாகுமரிவரை பரந்துள்ள பாரதப் பெருநாட்டில் சைவ சமயம் பண்டுதொட்டே, பலவாறாக நிலவியிருந்தபோதிலும் அதனைத் தோற்றுவித்த பெருமை பொதுவாகத் தமிழகத்திற்கும், குறிப்பாகப் பழந்தமிழ் மக்கட்கும் உரியதாகும். போப்பையரவர்கள் தம் திருவாசக ஆங்கில முன்னுரையில், ''சைவ சமயம் தென்னிந்தியாவின் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்துச்சமயம் என்றும், அது ஆரியர் காலத்திற்கு முன்பிருந்தே நிலவி வருவது என்றும் குறிப்பிட்டுள்ளார்''.

**சங்க இலக்கியங்களில் :**

தொன்மைச் சிறப்புவாய்ந்த தமிழகச் சமயமான சைவ சமயமும், அதன் கோட்பாடுகளும் பற்றிய நேரான செய்திகள், பழந்தமிழ்க் கருவூலமான சங்க இலக்கியங்களில் காணப்படவில்லையாயினும், சைவ சமய முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானைப் பற்றிய தெளிவான குறிப்புக்கள் பல அமைந்துள்ளன. 'நீலமணிமிடற்றொருவன்', 'முக்கட் செல்வர்', 'இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்' முதலான தொடர்களும்[3], பாரதம் பாடிய பெருந்தேவனாரும் நல்லந்துவனாரும் எழுதியனவாக அமைந்துள்ள சங்கத்தொகை நூற் கடவுள் வாழ்த்துப்பாடல்களும்[4] அக்காலத்தில் தமிழகத்தே சிவநெறி சிறப்புற்றிருந்தமையினைக் காட்டும் சிறந்த இலக்கியச் சான்றுகளாக அமைந்துள்ளன. சைவ சமயம் என்ற பெயரும், சைவ மெய்ம்மைக் கோட்பாடு (சைவ சமயத் தத்துவங்கள்)களும் காணப்படாவிட்டாலும் அக்கால மக்களிடையே சிவநெறி பெற்றிருந்த செல்வாக்குமிக்க இடத்தினை உணர்வதற்கு, இக்குறிப்புக்கள் பேருதவியாகவுள்ளன.

> 'நீல மேனி வாலிழை பாகத்து
> ஒருவன் இருதாள் நிழற்கீழ்
> மூவகை உலகும் முகிழ்த்தன முறையே'

என்னும் ஐங்குறுநூற்றுக் கடவுள் வாழ்த்து, 'பதிபசுபாசம்' எனச் சைவ சித்தாந்தம் சிறப்பித்துப் பேசும் முப்பொருள் உண்மையினை உணர்த்தவல்ல கருவினைக்கொண்டு விளங்குமாற்றை ஊன்றிக் காணவல்லார் உணர்வர்.

**இரட்டைக் காப்பியத்தில் :**

சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய இரட்டைக் காப்பியங்கள் எனப்படும் சிலப்பதிகார - மணிமேகலைக் காலத்தில், சிவநெறியினைப் பற்றிச் சிறிது விளக்கமாக அறியமுடிகின்றது.

''குழவித் திங்கள் இமயவர் ஏத்த
அழகொடு முடித்த .... பெரியோன்''[5] என்றும்,

''நிலவுக் கதிர்முடித்த நீளிருஞ் சென்னி
உலகுபொதி உருவத்து உயர்ந்தோன்''[6] என்றும்,

''தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்''[7] என்றும்,

சிவபெருமானுடைய உருவத் திருமேனியை இளங்கோவடிகள் விளங்கப் பேசுகின்றார். சிவபெருமானுக்கமைந்த திருக்கோயிலைப் 'பிறவா யாக்கைப் பெரியோன் கோயில்'[8] என்று குறிப்பிடுகின்றார்.

பிற்காலத்தில் சாக்தம் எனப்பெயரிய சத்தி வழிபாட்டிற்காம் மூலமெனத்தகும் செய்திகள் பலகொண்ட வேட்டுவ வரியில், கொற்றவை இயல்பு கூறும் வாயிலாகச் சிவபெருமானைப் பற்றிய பல செய்திகளை இளங்கோவடிகள் உய்த்துணர வைக்கின்றார். மக்களிடையே திருக்கோயில் வழிபாட்டுணர்வு சிறந்து நின்ற தன்மையினைச் 'செங்குட்டுவன் படைகொடு வடநாடு செல்லுமுன், சிவபெருமானுடைய திருவடி மலரை நெஞ்சகத்தும், வஞ்சி மாலையை மார்பகத்தும் அணிந்து இறைவனை வணங்கித் திருக்கோயிலை வலம் வந்து சென்றான்' என்று கூறுவதன் வாயிலாகக் காட்டியுள்ளார். அது வருமாறு :-

''நிலவுக் கதிர்முடித்த நீளிருஞ் சென்னி
உலகுபொதி உருவத்து உயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து
இறைஞ்சாச் சென்னி இறைஞ்சி வலங்கொண்டு
... ... ... ...
கடக்கரி யானைப் பிடர்த்தலை யேறினன்''[9]

இவற்றால் அன்று சிவவழிபாட்டு நெறி செல்வாக்குப் பெற்றிருந்த நிலையினை நன்குணரமுடிந்தாலும், அதனைச் செவ்வியதொரு தத்துவ அமைப்புக் கொண்ட சமயமாகக் காணமுடியவில்லை. சிலப்பதிகாரத்தோடு இணைந்து தோன்றியதாக

அமைந்துள்ள மணிமேகலை இக்குறையினை நீக்கிச் சிவநெறி, தத்துவ அமைப்புடையதொரு சமயமாக அமைந்து விளங்கும் தன்மையைத் தெளிவுபடுத்தி விளக்குகின்றது. மணிமேகலை பல்வேறு சமயவாதிகளைச் சந்தித்துத் தெளிவுபெறும் செய்தியினைக் கூறுங்கால், 'சைவ வாதி'யினைச் சந்தித்ததாகச் சாத்தனார் குறிப்பிட்டுள்ளார். இங்குச் சிவநெறி 'சைவம்' என்ற பெயரில் குறிக்கப்பட்டுள்ளது. அச்சமயத்தை மேற்கொண்டதோடு, அதன் கோட்பாடுகளைத் தத்துவ நிலையில் விளக்கும் அறிவாற்றலும் பெற்ற சான்றவர் 'சைவவாதி' எனப்பட்டனர். வாதி என்பதனால், அவர்கள் தம் சமயக் கோட்பாட்டோடு பிறசமயக் கோட்பாடுகளை ஒத்தும் உறழ்ந்தும் நோக்கி வாதிட்டு நிறுவும் மதிநுட்பம் மிக்கவர் என்பது புலனாகின்றது. இவ்விடத்துச் சைவ வாதியின் கூற்றாக அமைந்த பகுதி, பிற்காலத்தில் விரிவாகவும் விளக்கமாகவும் அமைக்கப்பெற்ற சைவ சமயத் தத்துவங்களை நுட்பமாக உணர்த்தும் வித்தாக அமைந்துள்ளது. 'நின் தெய்வம் எப்படி' என்ற வினாவிற்கு விடையாக அமைந்த,

"இருசுட ரோடிய மாணனைம் பூதமென்று
எட்டு வகையும் உயிரும் யாக்கையுமாய்க்
கட்டி நிற்போனும் கலையுருவினோனும்
படைத்து விளையாடும் பண்பினோனும்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும்
தன்னில் வேறுதாவொன்றி லோனும்
அன்னோன் இறைவன்"[10]

என்னும் பகுதி சிவநெறியாகிய சைவ சமயக் கோட்பாடு பற்றித் தமிழில் அமைந்த முதற் செய்தியாகும். சைவம் என்னும் சொல்லும், தமிழிலக்கியங்களில் இங்கு தான் முதன்முதலாக இடம் பெறக்காண்கின்றோம். இதன்கண் சிவன் அட்டமூர்த்தியாக விளங்குந்தன்மை, வேறாய் உடனாய் விளங்குந்தன்மை முதலியன குறிப்பாகவும், சுருக்கமாகவும் சுட்டப்பெற்றுள்ளன. இதனையே இளங்கோவடிகள் மேலும் சுருக்கி, 'உலகு பொதி உருவத்துயர்ந்தோன்'[11] எனக் காட்டியுள்ளார். பிற்காலத்தில் சிறப்பாக வளர்ந்து நிற்கும் சைவத் தோத்திரப்பாங்கில் இளங்கோவடிகளும், சாத்திரப்பாங்கில்

சாத்தனாரும் சைவம் பற்றிய செய்திகளைத் தத்தம் காப்பியங்களிற் காட்டியுள்ளனர்.

**பஃத்தி இலக்கியத்தில்**

தமிழகத்தில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றித் தம் பாசுரங்களாலும் பதிகங்களாலும் பத்தி நெறி தழைத்தோங்கச் செய்தபோது, அவர்தம் படைப்புக்களில் அவ்வச்சமய சாத்திரக் கூறுகள் இலைமறை காயாக இடம்பெற்றுத் திகழலாயின. சைவசமய குரவர்களாய நால்வர்தம் பத்தி நலஞ்சான்ற தோத்திரப்பனுவல்களில், சித்தாந்த சைவக்கோட்பாடுகள் ஆங்காங்கே மணிமிடை பவளமாகத் திகழ்கின்றன. அதன் பின்னர் வந்த சந்தான குரவர் எனப்படும் சான்றோர்கள் சித்தாந்த சைவ சமயக் கோட்பாடுகளை வகுத்தும், வரையறுத்தும், கவினார்ந்த செய்யுள் வடிவில் வடிப்பாராயினர்.

இவற்றால், சைவ சமயத்தின் தோற்ற வளர்ச்சிகளின் உண்மைகளையும் இயல்புகளையும் தமிழ் இலக்கியங்களின் வாயிலாக நேரே உணர்ந்த போப்பையரவர்கள், சைவ சமயம் பற்றிக் கூறுங்கால், அது இந்தியாவிலுள்ள எல்லாச் சமயங்களுள்ளும் மிக்க விரிவானதும், செல்வாக்குடையதும், ஐயமற்ற வகையில் உண்மையான மதிப்புமிக்கதுமாகும் என்றும், மேலுமது தென்னிந்தியாவிற்குரிய தமிழ்ச்சமயமென்றும் கூறியுள்ளார்.[12]

**திருமுறைகள்**

சைவப்பெருமக்கள் சிவபரமான நூல்களைப் பன்னிரு திருமுறைகளாக வகுத்துப் போற்றுகின்றனர். சங்கப்புலவராகிய நக்கீரரின் சிவச்சார்புடைய திருமுருகாற்றுப் படையும், பட்டினத்தடிகளின் பத்திப்பனுவல்களும் அவற்றுள் இடம்பெற்றுள்ளன.

பன்னிரு திருமுறைகளில் முதல் ஒன்பது திருமுறைகள் பத்திப் பனுவல்களாக - தோத்திர நூல்களாகத் திகழ்கின்றன. இறுதியில் பன்னிரண்டாந்திருமுறையாக அமைந்துள்ள

திருத்தொண்டர் புராணம், சிவனடியார்களின் - நாயன்மார்களின் வரலாறுகளைப் பத்திச்சுவை சொட்டச் சொட்டப்பாடும் வரலாற்றுக் காப்பியமாகும். இதன்கண் அமைந்துள்ள அடியார்களில், சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு நெறியாலும் தனித்தனியே சிவப் பேறெய்தியவர்கள் விளங்குவது குறிப்பிடத்தக்கது.

பத்தாம் திருமுறையாக அமைந்துள்ள திருமந்திரம் பத்தி நெறியையும் ஞானநெறியையும் இணைத்துக்காட்டும் தோத்திர, சாத்திரப் பனுவலாகத் திகழ்கின்றது.

பதினோராந் திருமுறை, திருவாலவாயுடையார் முதலாக, நம்பியாண்டார் நம்பி இறுதியாக உள்ள பன்னிரு ஆசிரியர்களுடைய 40 பத்திச் சிற்றிலக்கியங்கள் கொண்டமைந்த தொகுப்பு ஆகும்.

**தோத்திரமும் சாத்திரமும்**

தோத்திரம் என்பது இறையருளனுபவம் எய்திய அருட் சான்றோர்கள், இறைவனுடைய புகழைப்பாடிய பாடல்களாகும். சாத்திரம், இறை, உயிர், உலகு ஆகிய முப்பொருள்களின் இயல்புகளை உணர்த்தி, ஆன்மாக்கள் அடிசேர் ஞானம் எய்துதற்காம் வழிகாட்டும் ஞானநூ லாகும். தோத்திர நெறியும் சாத்திர நெறியும் (பத்தி நெறியும் ஞானநெறியும்) ஆன்மாக்கள் இறையருள் பெற்றுய்வதற்கான இருபெருநெறிகளாகும். இவ்விரு நெறிகளின் சிறப்பையும் பயனையும் திருவள்ளுவர்,

''இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு''

''ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருத லையாப்
பேர்த்துள்ளவேண்டாப் பிறப்பு''

என்னும் குறள்களில் நுட்பமாகப் புலப்படுத்தியுள்ளார்.[13] இக்குறள்களில் 'இறைவன் பொருள்சேர் புகழ் புரிதல்' என்பது

பத்தி நெறியாய்த் தோத்திர வழியையும், 'உள்ளம் உள்ளது உணரின்' என்பது ஞானநெறியாய்ச் சாத்திர வழியையும் சுட்டுவனவாக அமைந்துள்ளன.

இருவினை சேராமையும், பிறப்புள்ள வேண்டாமையும் சொற் பொருளால் வேறுபட்டதுபோலக் காணப்பட்டாலும், வீடுபேற்று வழிசுட்டுவதாகிய கருத்துப் பொருளால் வேறுபடாமையினை உணரலாம். பத்திமார்க்கமாகிய தோத்திர நெறியும், ஞானமார்க்கமாகிய சாத்திரநெறியும் நெறியால் வேறுபட்டாலும், திருவடிப்பேறு என்னும் பயனால் ஒன்றாகவே அமைகின்றன. அதனால் இவ்விரு நெறிகளின் பொருளாக இறைவன் விளங்குகின்றான் என்று, இவற்றின் அபேதத் தன்மையினை அருட் சான்றோர்கள் காட்டியுள்ளனர். இதனைத் திருநாவுக்கரசர் தம் திருவாலங்காட்டுத் திருத்தாண்டகத்தில் 'தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே'[14] என்று குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

### திருமந்திரம்

தவமுனிவராய திருமூலர் அருளிய திருமந்திரம், சைவ தோத்திரத் தொகுப்பிலமைந்த சாத்திரக்கனியாகும். சேக்கிழார் சுவாமிகள் இந்நூலைக் குறிப்பிடுங்கால்,

''ஊனுடம்பிற் பிறவிவிடம் தீர்ந்துலகத் தோர்உய்ய
ஞானமுதல் நான்கு மலர் நற்றிரு மந்திரமாலை''

என்று கூறுகின்றார்.[15] திருமூலரே தன் வரலாறு கூறும் வகையில்,

''மறப்பிலர் நெஞ்சினுள் மந்திரமாலை
உறைப்பொடுங் கூடிநின்று ஓதலு மாமே''[16]

எனக்குறிப்பிடுவது கொண்டு, இந்நூலின் இயற்பெயர் திருவெனும் அடையடுத்த 'மந்திரமாலை' என்பதாகும் என்பது தெளிவு. அதுவே 'திருமந்திரம்' எனச் சுருங்கிய வடிவில் நாடறி நற்பெயராக அமைந்தது.

திருமந்திரமாலை என்ற இதன் முழு இயற்பெயரை அறிந்த வடமொழியாளர் இதனை 'ஸ்ரீ மந்திர மாலிகா' என்னும் பெயரில் மொழி பெயர்த்துக் கொண்டுள்ளனர். எந்தத் தமிழ் நூலுக்கும் வடமொழியில் முதல்நூல் காணவும் காட்டவும் முற்பட்டதொரு சூழலுக்கு ஆட்பட்டவர்கள், வடமொழியாக்கம் செய்து கொள்ளப்பெற்ற 'ஸ்ரீ மந்திர மாலிகா' என்னும் நூலினைத் திருமூலரின் திருமந்திரத்திற்கு முதல் நூல் என்று கூறுவாராயினர். மாவை. வே. விசுவநாத பிள்ளையவர்கள் வெளியிட்ட திருமந்திரக்குறிப்புரை நூலின் நூன்முகத்தில் வேதாரணியம் டாக்டர். வை.வே. ரமண சாத்திரியவர்கள் இக்கருத்தினை வெளியிட்டுள்ளனர். (முழுதும் தமிழ் மொழியிலான இந்நூலின் முன்புற அட்டையின் மேல், ஸ்ரீ மந்திரமாலிகா எனத் தேவநாகரி எழுத்திலும், Tirumantram with Foot Notes என்று ஆங்கிலத்திலும் மட்டுமே பெயர் பொறிக்கப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.) திரு. டாக்டர் சாத்திரி அவர்களின் கருத்தின் பொருந்தாமையினைப் பேராசிரியர் க. வெள்ளைவாரணனாரவர்கள் தம் பன்னிரு திருமுறை வரலாற்றில் தெளிவுற விளக்கியுள்ளார்கள்.[17]

திரு. டாக்டர் சாத்திரி அவர்கள் தம் நூன்முகத்தில், ''மந்திரம்'' என்னும் சொல் வடமொழியில் ஆகமத்தொகையைக் குறிக்கும் காரணம் பற்றியும், ''தந்திரம்'' என்னும் சொல் வடமொழியில் ஆகமப் பகுதிகளைக் குறிக்கும் காரணம் பற்றியும், திருமந்திரம் 9 தந்திரங்களாக வகுக்கப்பட்டிருக்கும் காரணம் பற்றியும், பாயிரம் 72ஆவது செய்யுள் இறுதி அடியில் 'நவஆகமம் எங்கள் நந்தி பெற்றானே' என்று இருத்தல் பற்றியும், இத்திருமந்திரம் அந்நவ ஆகமங்களாகிய கனிகள் பிழிந்த சாறு என்றும், இத்திருமந்திரத்தில் அமரும் 9 தந்திரங்களில் ஒவ்வோர் தந்திரமும் அந்நவ ஆகமங்களில் அமரும் ஒவ்வொரு ஆகமத்தை விளக்கும் என்றும் எண்ணுதற்குப் போதுமான நியாயம் இருக்கின்றது[18] என்று கூறியுள்ளார். வடமொழியிலுள்ள ஆகமத்தொகை, நவஆகமம் என்னும் திருமந்திரத்தொடர், திருமந்திரத் தந்திரங்களின் தொகை ஆகியன ஒன்பது என்னும் எண்ணாக இருக்கும் எண் ஒற்றுமை, திருமந்திரம் வடமொழி நூலின் மொழி பெயர்ப்பு என்று கருதும் திரு. டாக்டர் சாத்திரி அவர்கள் ஊகத்திற்கு அடிப்படையாக உள்ளதுபோலும்.

மந்திரம் என்னும் சொல் வடமொழியில் ஆகமத் தொகையினைக் குறிப்பதாகத் திரு. டாக்டர் சாத்திரி அவர்கள் கூறியுள்ளார்கள். மந்திரம் என்னும் சொல் தமிழில் 'தவத்தோர் மறைமொழி' என்னும் பொருளில் அமைந்துள்ளது.

'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப'

என்று[19] தொல்காப்பியர் இதனை விளக்கியுள்ளார். திருமூலரும் மந்திரம் என்னும் சொல்லை,

" வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்"

எனக்குறிப்பிட்டுள்ளார்.[20]

திருக்குறள், 'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி' காட்டிவிடும் என்று கூறுகின்றது.[20அ] திருமூலரின் திருமந்திரம் என்னும் பெயரிலுள்ள மந்திரம் என்னும் சொல், பொருள் நோக்கில் அமைந்துள்ளது. ஆனால் வடமொழி ஸ்ரீமந்திர மாலிகாவில் அச்சொல் எண் பற்றிய தொகை நோக்கில் அமைந்துள்ளது என்னும் கருத்தினைத் திரு. டாக்டர் சாத்திரி அவர்களின் விளக்கம் கொண்டு அறிய முடிகின்றது.

சேக்கிழார் காலத்திலும் திருமந்திரமாலை என்று வழங்கப்பெற்ற இந்நூல் திருமந்திரம் எனச்சுருங்கிய பெயர் வழக்குப் பெற்றமை, பன்னிரு திருமுறை தொகுக்கப்பெற்ற காலத்திற்கு முன்னராகலாம். திருக்குறள், திருப்புகழ் போன்ற பொதுத்தொடர்கள், முறையே வள்ளுவர் நூலிற்கும், அருணகிரியின் சந்தப்பாடல்கட்குமேயுரிய பெயர்களாய் வழங்குவது போலத் திருமந்திரம் என்னும் பெயரும் திருமூலரின் நூலுக்கே இருவகை வழக்கிலும் வழங்கப்படுகின்றது. வடமொழியாக்கம் பெற்ற ஸ்ரீமந்திரமாலிகா அம்மொழி யாளரிடையே இருவகை, வழக்கும் பெறாமையால், ஸ்ரீமந்திரம் என்னும் சுருக்கப்பெயர் பெறாது, ஸ்ரீமந்திர மாலிகா என்ற நெடும்பெயரோடே நிற்கின்றது போலும் என்று நினைக்கத்

தோன்றுகிறது. திருமூலரின் நூல் திருமந்திரம் என்னும் சுருங்கிய பெயரால் வழங்கப்படுவதற்கு முன்னர், ஸ்ரீமந்திரமாலிகா என்ற முழுப்பெயர் நிலவிய காலத்தில் அதனை வடமொழிப் படுத்திக்கொண்டனர் என்றும் உய்த்துணர முடிகின்றது.

தோத்திர சாத்திரமாக அமைந்து விளங்கும் செந்தமிழ் ஞானப் பனுவலாகத் திகழும் திருமந்திரம், சைவத்திருமுறைகளுள் ஒன்றாகச் சேர்க்கப் பெற்றமையால் திருமுறைக்கோயிலாக அமைத்து வழிபாடு செய்யப்பெறும் சிறப்புப் பெற்றுள்ளது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நானெறி காட்டி நானில மக்களை உய்விக்க அமைந்த இந்த நூல் சித்தாந்த சைவக் கோட்பாடு பற்றிய முதல் தமிழ் நூலாகும். சைவ சமயம் என்னும் பொருளில் சித்தாந்தம் எனும் பெயரைத் தமிழ் நூல் வழக்கில் திருமந்திரத்தின் கண்ணும், சைவ சித்தாந்தி என்னும் பெயரைச் சாசன வழக்கில் இராச சிம்ம பல்லவன் கல்வெட்டிலும் முதன் முதலாகக் காணமுடிகிறது.[௨௪]

**காலம்**

பிற தமிழ் நூல்களுக்கிருந்தமை போலக் காலம் பற்றிய சிக்கல் திருமந்திரத்திற்கும் இருந்த போதிலும், அறிஞர்களின் முயற்சியால் அஃதோராற்றான் முடிவு செய்யப் பெற்றுள்ளது. 'தமிழ் மண்டலம் ஐந்தும் தாவிய ஞானம்' என்பதில் இடம்பெற்றுள்ள தமிழ் மண்டலம் ஐந்து என்னும் தொடரை வரலாற்று நோக்கில் கண்டு. தமிழ் மண்டலம் ஐந்தாவன சேர, பாண்டிய, சோழ, தொண்டை, கொங்கு மண்டலங்கள் என்று பொருள் கொண்டு அதனைத் திருமூலர் காலக்கணிப்பிற்கு மேலெல்லையாகும் குறிப்பாக அமைந்துள்ளவற்றை அறிஞர் காட்டியுள்ளனர். மும்மைத் தமிழகம் இவ்வாறு ஐந்து மண்டலங்களாக அமைந்தமை கடைச்சங்க காலத்திற்குப் பின் கி.பி. மூன்றாம் நூற்றாண்டினை ஒட்டியதாகலாமென்றும் கூறி, அதனால் திருமூலர் வாழ்ந்த காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என்று எல்லை சுட்டுகின்றனர். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டினராய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் திருத்தொண்டத்தொகையில் திருமூலரைக் குறிப்பிடுகின்றமையால் அவருடைய காலம் ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது

என்றும் காட்டியுள்ளனர். திருஞான சம்பந்தருக்கு முந்தியவர் என்று திருமூலரை மறைமலையடிகள், கா.சு.பிள்ளை, டாக்டர் ரமண சாத்திரிகள் முதலியோர் காட்டியுள்ளமையால் அவருடைய காலம் கி.பி. 3-ஆம் நூற்றாண்டிற்கும், ஏழாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டது என்று முடிவு செய்யப்படுகிறது.

### மூவாயிரம் ஆண்டு

திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தாரெனக் கூறப்படுகின்றது. தன் வரலாற்றுக்குறிப்புகள் அடங்கியதாகக் கூறப்படும் பகுதியில் 3000 ஆண்டுகள் வாழ்ந்தமைக்கான நேரான சான்று கிடைக்கவில்லை.

‘ ஒப்பில் எழுகோடியுகம் இருந்தேனே’ என்றும்,

‘ ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பாலர்ட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன் நற்போதியின் கீழே’ என்றும்,

‘ இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி’ என்றும்,

வரும் தன்மைவாசகங்கள்[21] அவர் பன்னெடுங்காலம் ஊனுடம்பொடு மண்ணுலகில் வாழ்ந்தார் என்பதன்னையே குறிப்பனவாக உள்ளன. ஆனால் சேக்கிழார் திருமூலரைப்பற்றிக் கூறுங்கால் அவர் மூவாயிரம் ஆண்டுகள் திருவாவடுதுறையில் யோகநிலையில் வாழ்ந்தார் என்பதனைக் காட்டியுள்ளார். அது :-

‘ஊனுடம்பில் பிறவிவிடம் தீர்ந்துலகத் தோர்உய்ய
ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந் திரமாலை
பான்மைமுறை ஓராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்
ஏனஎயி றணிந்தாரை ஒன்றவன்தான் எனவெடுத்து,

முன்னியஅப் பொருள்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிமதி அணிந்தார்தம் திருவருளால் திருக்கயிலை
தன்னில்அணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார்’[22]

யோகநிலையில் அரச மரத்தடியமர்ந்து ஆண்டுக்கொரு பாடலாக மூவாயிரம் பாடல்கொண்ட திருமந்திரமாலையினைப் பாடி முடித்துப் பின்னர்க் கைலையில் சிவபெருமான்பால் சென்றணைந்தார் என்று கூறியுள்ளார். சேக்கிழாருக்குப் பின் வந்தவர்கள் இவருடைய கருத்தைப் பின்பற்றித் திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தார் எனக்கூறியுள்ளார். ஏழுகோடி, ஒன்பது கோடி எண்ணில் கோடியுகங்கள் வாழ்ந்தேன் என்னும் தன் வரலாற்றுக்குறிப்பும், சார்வு மூவாயிரம், பூர்வத்து மூவாயிரம் மூவாயிரம் தமிழ் என்னும் திருமந்திரப் பாடற்றொகைக் குறிப்பும் சேக்கிழாரின் கருத்திற்கு அடிப்படையாக அமைந்தனபோலும்! மூவாயிரம் என்னும் பாடற்றொகைச் செல்வாக்கு மூவாயிரம் ஆண்டுகள் என்னும் கருத்திற்கு அடிப்படையாக அமைந்தது எனலாம். அதனால் மூவாயிரம் ஆண்டுகள் என்பது திருமூலரின் வாணாள் நெடுமையையும், ஆண்டுக்கொரு பாடல் என்பது திருமந்திரப் பாடலருமையையும் உணர்த்துதற்கெழுந்த கருத்தாகும் என்று கொள்வது தவறாகாது. வடமொழிச் சிவாகமங்கள் இருபத்தெட்டு என்பதனைத் திருமூலர்,

> ‘ அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
> அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்’[23]

என்று காட்டியுள்ளார். அந்தி மதிபுனை அரனடி நாள்தோறும் சிந்தை செய்து தமிழில் ஆகமம் செப்பலுற்ற திருமூலர் வரலாற்றினைச் சேக்கிழார் இருபத்தெட்டு விருத்தங்களில் முடித்திருப்பது நினைந்து மகிழத்தக்கது.

சிவாகமங்கள் இருபத்தெட்டுள்ளும், ஒன்பது ஆகமங்களை நவ ஆகமம் என்று சிறப்பிப்பர். அவற்றை இறைவன்பால் திருமூலர் அருளப் பெற்றார் என்று கூறப்பட்டுள்ளது. இதுகொண்டு திருமூலரின் திருமந்திரம் கொண்டுள்ள ஒன்பது தந்திரங்களும் அந்த நவ ஆகமங்களின் சாரமாகும் என்னும் கருத்துத் தோன்றியுள்ளது. அதுகொண்டு திருமந்திரத்தின் தந்திரம் ஒவ்வொன்றும் இன்னின்ன ஆகமங்களின் சாரம் என்று குறிப்பிட்டு விளக்கும் நிலையும் உருவாகியது. திருமந்திரத்து ஒன்பது தந்திரங்களும் முறையே

காரணம், காமிகம், வீரம், சிந்தம், வாதுளம், வியாமளம், காலோத்தரம், சுப்பிரம், மகுடம் ஆகிய ஆகமங்களின் சாரமாகக் கூறுவர்.

**திருமந்திரம் மூவாயிரம்**

'மூலன் உரைசெய்த மூவாயிரம் தமிழ்' என்றும்,

'முத்திமுடிவிது மூவாயிரத்திலே
புத்திசெய் பூர்வத்து மூவாயிரம்பொது' என்றும்

வரும் இந்நூற்றொடர்களால்[24] திருமூலர் செய்த திருமந்திரப் பாக்கள் 3000 என்பது தெளிவாகின்றது. ஆனால் கிடைத்துள்ள திருமந்திரப் பதிப்புக்கள் அனைத்தும் மூவாயிரத்திற்கும் மிகுதியான பாடல்களைக் கொண்டுள்ளன. இதனால் ஏனைய சில அருட்பனுவல்களில் இடைச்செருகல் (வெள்ளிப்பாடல்) சேர்ந்தவாறு திருமந்திரப்பாடலுள்ளும் இடைச்செருகல்கள் சேர்ந்துள்ளன என்பது தெளிவு. இடைச்செருகல்களைத் தவிர்த்து மூவாயிரம் பாக்கள் இவையெனக் காணமுற்பட்ட பதிப்பாளர் பலரும் கருத்தில் வேறுபடுவாராயினர். திரு. டாக்டர் சாத்திரியவர்கள்

| | |
|---|---|
| *2 முதல் 50 வரை (பரசிவப்பிரபாவம்)* | *49* |
| *51 முதல் 60 வரை (திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்டமுறைமை)* | *10* |
| *61 முதல் 66 வரை (வேதச்சிறப்பு)* | *6* |
| *67-ம், 68-ம் (ஆகமச்சிறப்பு)* | *2* |
| *113 முதல் 3045 வரை (9 தந்திரங்கள்)* | *2933''* |

என்று வகுத்துக்காட்டி இந்த 3000 பாடல்களே[25] திருமந்திரப் பாடலாகும் என்று ஒரு முடிவு செய்தார். இதனைப் பின்வந்த பதிப்பாளர் 'இம்முடிபுகட்குப் போதிய ஆதாரங்களில்லை' என்று புறக்கணித்து விட்டார். அதனால் மூவாயிரம் பாடல்கள் இவையென்று காணமுடியாத நிலையில் இடைச்செருகல்கள் என்று கருதப்படும் பாடல்களையும் சேர்த்தே இன்று திருமந்திரப் பதிப்புக்கள் விளங்குகின்றன.

## திருமந்திரப் பதிப்புக்கள்

தோத்திரக்கூறுகள் மல்கிய சாத்திரமாகத் திகழும் திருமந்திரம், பிற திருமுறைகளைப் போலத் திருமுறைக் கோயிலாக வழிபடும் சிறப்புப் பெற்றிருப்பினும், தேவார திருவாசகங்கள் சைவப் பொதுமக்களிடத்தே பெற்றிருக்கும் செல்வாக்கினை இந்நூல் பெற்றிருந்ததாகக் கூறவியலாது. புல மக்கள்பாலும், குறிப்பாகத் தவயோகநெறி நாட்டமுடையவர்பாலுமே இந்நூல் செல்வாக்குப் பெற்றிருந்தது. யோக நுட்பங்களையும், யந்திர மந்திர உபாசனை முறைகளும், மறைத்து மொழி கிளவிகளும் மிக்குள்ளமையால் பத்திநெறி முயலும் எளியமக்கள் பயில்வதற்கு அரிதாயிற்று. இயற்புலஞ் சான்ற அறிஞர்க்கும் பொருளுணர்வது கடினமாக அமைந்தது. இதனை, ''இத்திருமுறையின் பொருள் வடமொழிக் கலைகளையும், தென்மொழிக் கலைகளையும், உள்ளங்கை நெல்லிக்கனி போலுணர்ந்து, யோகானுட்டான முதலியன கைவரப்பெற்றுத் திருவருட் கண்ணுடையராயுள்ள சிவஞானிகளது நுண்ணறிவிற்கே இனிது புலப்படூஉம் என்க; கலைப்புலமை மாத்திரம் நிரம்பப் பெற்ற பண்டித சிரோமணிகட்குப் பெரும்பாலும் விளங்காதென்பது வெள்ளிடைமலையே'' என்று இந்த நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் எழுதப்பெற்ற ஒரு பதிப்புரைப்பகுதி உணர்த்துகின்றது.[25]

19- ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் தமிழ் நூல்கள் பல அச்சுவாகனமேறும் வாய்ப்பினைப் பெற்றன. அவ்வகையில் ஏட்டிலும், தாளிலும் இடங்கொண்ட திருமந்திர நூல் அச்சுருப் பெற்றுப் புத்தக வடிவில் வெளிவந்தது. இவ்வாறு வெளிவந்த திருமந்திரப் பதிப்புக்கள் பல பிரதிகளை ஒப்பிட்டு நோக்கி, நல்ல பாடம் தேர்ந்து, பிழையின்றிப் பதிக்கப்பெற்ற பதிப்புக்களாக அமையவில்லை. பாடபேத மிக்கும், பிழை மலிந்தும் அமைந்த இப்பதிப்புக்களால் திருமந்திரப் பயிற்சிக்கும் ஆராய்ச்சிக்கும் பெரும் பயன் ஏற்பட்டதாகக் கூறமுடியாது. பொதுமக்கள் வாங்கிப் பயிலுவதற்குத் திருமந்திரம் அச்சில் கிடைத்தது என்னும் பயன் அப்பதிப்புக்களால் கிட்டியது. நல்ல பாடம் தேர்ந்து, பிழையின்றிப் பதிக்கும் திருமந்திரப் பதிப்பு முயற்சியில் 1909- ஆம் ஆண்டில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

(திரு.வி.க.) பார்வையில் திரு. வி. உலகநாத முதலியாரவர்களும், திரு.வ.மு. துரைசாமி முதலியாரவர்களும் சேர்ந்து பதிப்பித்த கையடக்கப் பதிப்புக் குறிப்பிடத்தக்க சிறப்புடையதாகும். செய்யுட்களின் தொடரெண், செய்யுள் முதற்குறிப்பகரரதி போல்வன அதன்கண் இல்லாவிட்டாலும் பிழையின்மையும், யாப்பு வடிவம் போல்வனவற்றில் செப்பமும் பெற்று விளங்கியது.

இந்நிலையில் திருமந்திரம் ஓதும் நூலாக அமைந்ததேயன்றி, உரைகாணும் நூலாக அமையவில்லை. தேவார திருவாசகங்கட்கு உரைகாண முற்படுவது அவற்றின் பெருமைக்கு ஊறு செய்வதாகும் என்று கருதப்பட்ட கருத்தும், திருமந்திர உரை காணும் முயற்சிக்குத் தடையாக இருந்திருக்கலாம். பதவுரை எழுதமுற்பட்ட ஓரறிஞரின் முயற்சியைத் திரு.வி.க. பார்வையில் வந்த பதிப்பின், பதிப்பாசிரியர்கள் குறை கூறும் குறிப்புக் கொண்டு அக்கால நிலையினை உணரமுடிகின்றது. அக்குறிப்பு வருமாறு : ''இவ்வருணூற்கும் பதவுரை வரையமுயன்று அயர்ந்தார் சிலர்; முயல்கின்றார் சிலர். அவ்வுரை வெளிவரின், அஃது அறிஞர்களால் எள்ளப்படுமென்பது திண்ணம்''[27]. இது தேவார திருவாசகங்கட்கு உரை வரைதல் வேண்டும் என்று வற்புறுத்திய பட்டாபிராமபிள்ளையிடம், வித்துவான் தியாகராசச் செட்டியாரவர்கள் 'மேலும் வற்புறுத்துவீராயின் காவிரியில் விழுந்து உயிர்துறப்பேன்' என்று கூறியதாக அமையும் செய்தியினை நினைவூட்டுகிறது.

திருந்திய திருமந்திரப் பதிப்பு முயற்சியிலும், உரைகாணும் முயற்சியிலும் திரு. மாவை. வே. விசுவநாதபிள்ளையின் தொண்டு குறிப்பிடத்தக்கதாகும். அவர் தாமெழுதிய குறிப்புரையோடும், டாக்டர். வை.வே. இரமணசாத்திரி எழுதிய நூன்முகத்தோடும் 1912-ஆம் ஆண்டில் வெளியிட்ட திருமந்திரப் பதிப்புப் பெரும் பயன் விளைப்பதாக அமைந்தது. அதன் சிற்சில விடத்துப் பாடபேதங்களும் காட்டியுள்ளார். அவர் வரைந்துள்ள குறிப்புரை திருமந்திரப் பயிற்சியாளர்க்கும் ஆய்வாளர்க்கும் நல்ல துணையாக அமைந்துள்ளது. நூல் முழுவதற்கும் பதவுரையோடு கூடிய விளக்கவுரையினை எழுதமுற்பட்டும் அது நிறைவுறாதும் எழுதப்பெற்றன அச்சுருப்பெறாதும் போனமை பேரிழப்பாகும்.

சைவ சித்தாந்த சமாசம் 1933-ஆம் ஆண்டில் பல ஏடுகளையும் பதிப்புக்களையும் ஒப்புநோக்கிப் பல்வேறு பாடபேதங்களுடனும் ஆய்வுக் குறிப்புக்களுடனும் செம்மை சான்ற ஒரு மூல நூலை அடக்கவிலையில் வெளியிட்டது. அடுத்துத் தமிழகத்திலுள்ள சைவ மடங்கள் மூலநூலை வெளியிடலாயின. திருமந்திரம், திருமூலர் பற்றிய தனி நூல்களும் தோன்றலாயின. மாநாடுகள் கூட்டியும் அதன் புகழ் பேசப்பெற்றது.

திருமந்திரத்திற்கு உரை காணல் அரிது என்றும், உரை காணலாகாது என்றும் நிலவிய சூழலை மீறி அதற்குப் பதவுரை விளக்கவுரை காணும் முயற்சி அறிஞர்களால் மேற்கொள்ளப் பெற்றது.

திருமந்திரப்பாடல்களுக்குக் கட்டுரை வடிவில் விளக்கம் எழுதப்பெற்று, ஒவ்வொரு தந்திரமாகத் தொடர்ந்து வெளியிடும் பணியினைத் திருவாவடுதுறை ஆதீனம் மேற்கொண்டது. அவ்வாறே மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகரவர்கள் வரைந்த பதவுரையோடு விளக்கவுரையும் கூடிய திருமந்திரப் பகுதிகளையும் அவ்வாதீனம் வெளியிட்டுள்ளது. திருமந்திரத்தின் பெரும்பகுதிக்கு அவருடைய உரை அமைந்துள்ளது. திருமந்திரக்கட்டுரைகள் என்னும் தொடரிலும் நூல் முழுதும் வெளிவந்துள்ளது.

நூல் முழுவதற்கும் அமைந்த உரைகளில் திரு. ப. இராமநாதபிள்ளை எழுதிய விளக்கமும், துடிசைகிழார் திரு. அ. சிதம்பரனார் எழுதிய குறிப்பும்கொண்டு திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ள திருமந்திர உரைப்பதிப்பு குறிப்பிடத்தக்கது. இஃது இரண்டு பகுதியாக வெளியிடப்பட்டுள்ளது.

திருத்தவத்துறை அறிஞர் ஜி. வரதராசபிள்ளையவர்கள் நூல் முழுவதற்கும் உரையும் விளக்கமும் எழுதி மூன்று பகுதிகளாக வெளியிட்டுள்ளார். இவ்வுரை பெரும்பாலும் யோகநெறி தழுவி எழுதப்பெற்றதாகும்.

## சொல், தொடர், தொகை விளக்கத்தேவை

### சைவ சமய கலைச்சொல்

சைவ சமய சாத்திர நூல்கள் தமிழில் உருவாவதற்கு முன்னரே தோன்றிய திருமந்திரத்தில், பின்வந்த சைவ சமய சாத்திர நூல்களில் இடம் பெற்றுள்ள சமயக்கலைச்சொற்கள் பல இடம் பெற்றுள்ளன. அவை பெரும்பாலும் வடமொழிச் சொற்களாக விளங்குகின்றமை கொண்டு, அக்காலச் சமய உலகில் - குறிப்பாகச் சைவ சமயத்தில் விளங்கிய வடமொழிச் செல்வாக்கினை உணரலாம்.

சமயம், சோதிடம், மருத்துவம் முதலியவற்றில் அவ்வக் கலைத்தொடர்பான செய்திகளை உணர்த்த மொழி வேறுபாடு கருதாமல் தமிழ் மக்களும் வடமொழியினைப் பயன்படுத்தி வந்துள்ளனர். அத்தகைய கருத்துக்களைத் தமிழ் நூல்களில் வடமொழிச்சொல், சொற்றொடர் கொண்டு வெளியிட்டதோடு, வடமொழி நூலாகவே எழுதியும் வெளியிடுவாராயினர். அதனால் மொழியால் வடமொழிக்குச் சொந்தமாயினும் கருத்தால் தமிழ்மொழிக்குரிய நூல்கள் பல இருந்தன என்பது காலப்போக்கில் மறக்கப்பட்டது.

இந்நிலையில் வடசொற்களின் துணைகொண்டு வெளியிடப்பெற்றுள்ள சமயக்கருத்துக்களை நன்கு புரிந்து கொள்வதற்கு அச்சொற்களின் பொருளை உணர்ந்து கொள்ள வேண்டியது இன்றியமையாததாகிறது. அதற்குத் துணையாக அத்தகு சொற்களைத் தொகுத்து, அகர நிரல் படுத்திப் பொருள் தருவது பயனுடையதாகும் என்னும் கருத்தில், திருமந்திரத்திற்கான இவ்விளக்க நூல் முயற்சி மேற்கொள்ளப் பெற்றது. மேலும் திருமந்திரத்திற்கு. வெவ்வேறு உரைகள் வெளிவந்தபோது வேறுபாடுள்ள விளக்கங்களும் எழலாயின. அவ்வாறு தோன்றிய பல உரைநூல்களிலும் காணப்படும் வேறுபட்ட உரைக் குறிப்புக்களை ஒருங்கு காணும் போது தெளிவான விளக்கம் கிடைத்தலும் கூடும், கலைச்சொல், பொருள் தெளிவிற்கேயன்றி, பிறதொடர், கருத்து விளக்கத் தெளிவிற்கும் இத்தகு தொகுப்புப் பயன்படுவதாகும். இவ்வகையில் திருமந்திரத்தில் இடம்பெற்ற சில அரிய தொடர்களுக்கும் விளக்கம் தருவது பயன்தரும் என்ற எண்ணத்தால் அவற்றையும் இந்நூலில் சேர்க்க நேர்ந்தது.

தமிழ்மொழியில் பின்னர்த் தோன்றிய சைவ சித்தாந்த சாத்திரங்களில் ஆளப்பெற்றுள்ள சைவ சமயக் கலைச்சொற்கள் அனைத்தும் திருமந்திரத்தில் இடம் பெற்றிருக்கும் என்று எண்ணுவதற்கில்லை. பல சொற்கள் ஆளப்பெற்றுள்ளன. பிற்காலத்தில் வேறு தனிச்சமயமாகக் கருதப்பெற்ற சாக்தம் போன்ற பிரிவுகளைச் சார்ந்தனவாகலாமென்று கருதப்படும் சில சொற்களும், எந்தக் குறிப்பிட்ட ஒரு சமயத்தையும் சாராது பொதுவாகச் சமயப்பொருள் உணர்த்தும் சில சொற்களும் திருமந்திரத்தில் இடம்பெற்றுள்ளன. அத்தகு சொற்களும் இந்தத் தொகுப்பு நூலில் இடம் பெற்றுள்ளன.

**தொடர்கள்**

சிலதொடர்கள்சிவச்சார்புடையபொருளைஉணர்த்துவனவாக அமைந்துள்ளன. 'அஞ்சனமேனி அரிவையோர் பாகத்தன்' (57), 'கமலம் மலர் மேலே உடந்திருந்தான்' (26) ஆகிய தொடர்களில் முன்னது நேரே சிவபெருமானையும், பின்னது அஃதடைந்த இடஞ்சுட்டும் சிறப்புக் காரணத்தால் அச்சிவபெருமானையும் குறிக்கின்றன. 'சித்தசித்தன்றிப் பெரு நெறியாய பிரான்' (54) என்னும் தொடர் தத்துவப் பொருள் அடிப்படையில் சிவபெருமானைக் குறிக்கின்றது. 'கந்தமலரில் இரண்டிதழ்க் கன்னி' (2662) இது ஆக்ஞையில் விளங்கும் சத்தி என்னும் தத்துவப்பொருளைத் தந்து நிற்கின்றது. நேராகவும், உருவக வகையாகவும், சார்புநிலையிலும் பிறவாறும் பொருளுணர்த்தி நிற்கும் இத்தகைய தொடர்கட்கு ஏனைய பொது அகராதிகளில் பொருள் காணல் இயலாது. அதனால் திருமந்திர நூலுணர்ச்சிக்கு உதவும் கருவி நூலாகிய இவ்விளக்க நூலில் இவை போன்ற தொடர்களுக்குப் பொருள் தரவேண்டியது இன்றியமையாத தேவையாதலின் அவையும் சேர்க்கப்பெற்றன. அடல் விடை (299), கண்காணி (2067) போன்ற தொடர்கள் முறையே கொல்லும் தன்மை வாய்ந்த காளை, கண்காணிப்பவன் என்னும் பொதுப் பொருளைக் கொண்டனவாயினும் இவை சார்ந்துள்ள இடச்சிறப்பால் சிவன் ஊரும் இடபத்தையும், சிவபெருமானையும் குறித்து நிற்பதால் இத்தகைய தொடர்களும் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

**எண்ணுப்பெயர்**

நாலஞ்சு (475) என்னும் தொடர் பொதுவாக உறழ் பொருளில் ஆளப்பெற்று இருபது என்னும் பொருள் தருவதாகும். திருமந்திரம் 475-ஆம் பாடலில் இது உம்மைத் தொகையாக அமைந்து நான்கும் ஐந்தும் - அஃதாவது ஒன்பது என்னும் பொருள் தந்து நிற்கின்றது. இவ்வாறே ஐயஞ்சு (1263) என்பதும் (ஐந்தும் ஐந்தும்) பத்து என்ற எண்ணினைச் சுட்டி நிற்கின்றது. இவைபோன்ற தொகைச் சொற்கள் திருமந்திரத்தில் தாம் அமைந்துள்ள இடங்களில் மட்டுமே இத்தகு பொருளைத் தரும். பிறவிடங்களுக்கு இப்பொருள் பொருந்தாது. இப்பொருளையும் பொது அகராதிகளில் காணுதல் இயலாது. அதனால் இத்தகைய தொகைச் சொற்கள் வேறு தனி அகரா்தியில் இடம்பெறும் வாய்ப்பின்மையால் இங்குச் சேர்க்கப்பெற்றன.

**உருவகங்கள்**

உருவகத்தைப் பயன்படுத்திக் கருத்தினை விளக்குவது கவிஞர் கொண்ட இலக்கிய உத்திகளில் ஒன்றாகும். ஒருவர் கொண்ட உருவக அமைப்பினை இவ்வாறே பிறரும் மேற்கொள்ள வேண்டியதில்லை. அதனால் ஒவ்வொரு உருவகமும் அஃது ஆளப்பெற்ற இடத்தில் அதற்குரிய பொருளில் உணருந்தன்மையதாகும். இவற்றையும் பொது அகராதிகளில் பொருள் கண்டுணர்வது அருமையே. ஆமை (2304) ஆன்மா என்ற பொருளும், எலி (2891) சீவன் என்ற பொருளும் தருமாறு உருவகப்படுத்தப் பெற்றுள்ளன. இப்பொருள் அவ்வப் பாடலிற்கு மட்டுமே பொருந்துவதாகும். இடம் நோக்கித் தம் அனுபவ அறிவினால் உணரத்தக்க இத்தகு சொற்களுக்கும் பொருள் தருவது இன்றியமையாதது என்று கருதி இவை போன்ற உருவகச் சொற்களும் இந்நூற்கண் சேர்க்கப் பெற்றுள்ளன.

இவ்விளக்க நூல் திருமந்திரத்திற் காணப்படும் சைவ சமயச் சார்பான சொற்கள், தொடர்கள், சமயப் பொதுவான சொல், தொடர்கள், உருவகச் சொற்கள் ஆகியவற்றை அகர வரிசையில் கொண்டு விளக்குவதளால் திருமந்திரப் பயிற்சிக்கு நல்ல துணையாக

அமையுமென்பது நூலாசிரியனின் நம்பிக்கை. திருமந்திரத்திற் காணும் சைவ சமயச் சார்பான சொற்களைத் தொகுத்து அகர வரிசையில் வெளியிடும் இந்தப் புதிய முயற்சி, இத்துறையில் பலர் முயன்று மேலும் பல கருவி நூல்களை உருவாக்கத் துணையாக அமையும் என்பதில் ஐயமில்லை.

விளக்கங்கள் கட்டுரைப் பாங்கில் அமையாமல், அகராதிப் பொருள் விளக்க இயல்பில் அமைக்கப் பெற்றுள்ளன. வேறுபட்ட கருத்துக்களைச் சுட்டும்போது அவற்றிற்குரியவர்களின் பெயர்கள் சுட்டப் பெறவில்லை. கருத்தினைக் கூறியவர்களைப் பற்றிக் கருதாமல், அவற்றின் வன்மை மென்மைகளை மட்டும் கொண்டு நோக்கி உண்மை உணர்வதற்கு இது உதவியாக அமையும்.

தமிழ் நூல் ஒன்றில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொல்லாட்சி, குறிப்பாக வடசொல்லாட்சி, அந்நூல் தோன்றிய காலத்தினை மொழி நூலடிப்படையில் முடிவு செய்வதற்கு உதவியாக அமையும். திருமந்திரத்திற்காணும் அத்தகு சொற்களை இந்த நூல் அகர நிரல்படுத்திக் காட்டுவதால் திருமந்திரத்தின் கால ஆராய்ச்சியில் ஈடுபடும் ஆய்வாளர்க்கு இஃதோர் அருந்துணையாகும்.

திருமூலரைப்பற்றி மேலும் ஆய்ந்தறிவதற்கு உதவும் வகையில் பெரிய புராணத்திலுள்ள திருமூலநாயனார் புராண்ப்பாடல்களும் அவருக்கு மூலநூலாகக் கருதப்படும் திருத்தொண்டத்தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி ஆகியவற்றிலுள்ள திருமூலர் பற்றிய பகுதிகளும், திருமந்திரத்தில் அமைந்துள்ள தன் வரலாற்றுப் பாடல்களும் பின்னிணைப்பாகக் கொடுக்கப் பெற்றுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. Dr. T.B. Siddalingaiah - 'Origin and Development of Saiva Siddhantam upto 14th Century' - மேற்கோள் - பக். 2.

2. G. Subramania Pillai - 'Introduction and History of Saiva Siddhanta' - மேற்கோள் - பக். 2.

3. புறநானூறு - 91 - 6; 6 - 18; கலித்தொகை - 38 - 1.

4. பாரதம் பாடிய பெருந்தேவனார் - புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு; நல்லந்துவனார் - கலித்தொகை.

5. சிலப்பதிகாரம் - 2 : 38 - 41.

6. மேலது - 26 : 53, 54.

7. மேலது - 26 : 64.

8. மேலது - 5 : 169.

9. மேலது - 26 : 54 - 60.

10. மணிமேகலை - 27 : 89 - 95.

11. சிலப்பதிகாரம் - 26 : 54.

12. Dr. T.B. Siddalingaiah - 'Origin and Development of Saiva Siddhantam upto 14th Century' - மேற்கோள் - பக். 1.

13. திருக்குறள் - 5 ; 357.

14. திருநாவுக்கரசர் தேவாரம் - 6 - 78 - 5.

15. பெரியபுராணம் - திருமூலர் - 26.

16. திருமந்திரம் (சமாசம்) - 86

17. க. வெள்ளைவாரணனார்
பன்னிரு திருமுறை வரலாறு - பக். 435, 436.

18. திருமந்திரம்
(விசுவநாதபிள்ளைப்பதிப்பு) நூன்முகம் - பக்.24

19. தொல்காப்பியம் - செய்யுளியல் - 171.

20. திருமந்திரம் - 85.

20. அ. திருக்குறள் - 28.

ஆ. திருமந்திரம் - 1421
தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி - 1 எண். 25

21. திருமந்திரம் (சமாசம்) - 74, 82, 80.

22. பெரியபுராணம் - திருமூலர் - 26, 27.

23. திருமந்திரம் (சமாசம்) - 57.

24. மேலது - 99, 100.

25. திருமந்திரம்
(விசுவநாதபிள்ளைப்பதிப்பு) நூன்முகம் - பக். 23

26. திரு.வி.கலியாணசுந்தர முதலியார் பார்வையில் 1909இல் வெளிவந்த திருமந்திர மூலப்பதிப்பின் முன்னுரை - பக். 2.

27. மேலது - பக். 2. (அடிக்குறிப்பு)

# சொல் விளக்க நூலின் அமைப்புமுறை

சைவ சித்தாந்த சாத்திரங்களிலும் அவற்றின் உரைகளிலும் பயன்படுத்தப் பெற்றுள்ள சமயக் கலைச்சொற்கள் பெரும்பாலும் வடமொழிச் சொற்களும் தொடர்களுமேயாகும். அவற்றின் பொருளை உணர்ந்தாலன்றி அச்சாத்திரச் செய்திகளை நன்குணர்வது அரிதாகும். திருமந்திரத்திலும் அச்சொற்களிற் பல இடம்பெற்றுள்ளன. இச்சொற்கள், இப்போதுள்ள சைவ சித்தாந்த சாத்திரங்கள் உருவாவதற்கு முன்னர்த் தமிழ்மொழியில் இடம்பெற்ற சைவ சமயக் கலைச்சொற்களில் சிலவாம். இந்நூலில் அத்தகு சொற்களுக்குப் பொருள் தொகுக்கும் பணி முதன்மையாகக் கொள்ளப் பெற்றுள்ளது.

சைவ சமயக் கலைச்சொற்களோடு சைவ சார்பாகப் பொருள்படும் பிறசொற்களும் பொருள் விளக்கத்திற்கு எடுத்துக்கொள்ளப்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாகக் கண்ணன் என்னுஞ்சொல் பொதுவாகத் தமிழ் இலக்கியங்களில் திருமாலைக் குறிப்பதாக அமைய, இத்திருமந்திரத்தில் அது மூன்று கண்ணுடைய சிறப்புக்கொண்டு சிவபெருமானைக் குறிப்பதாக அமைந்துள்ளது. பன்னிரு திருமுறைத் தொகுப்பிற்குப் பின்னர்ச் சைவச்சார்புடைய நூல்களில் நால்வர் என்னுஞ்சொல் பொதுவாகத் திருஞானசம்பந்தர் முதலிய சைவ சமய குரவர்களைக் குறிக்க இங்கு வேறுபொருளில் ஆளப்பெற்றுள்ளது.

சிவ சமயம் பற்றிய சொல் தொடர் விளக்கத் தொகுப்பாயினும் இதன்கண் ஒரு வகையால் சிவனொடு தொடர்புடைய திருமால், பிரமன், சத்தி போன்றவர்கள் பற்றி அமைந்த சொற்களும் விளக்கத்திற்கு எடுத்துக்கொள்ளப் பெற்றுள்ளன.

ஒன்று இரண்டு முதலிய பொதுவான எண் பற்றிய சொற்களும், ஐந்தெழுத்து போன்ற எண்ணடிப்படையிலமைந்த தொகைச் சொற்றொடர்களும் சைவ பரமாகப் பொருளுணர்த்தி நின்றால் அவையும் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

சமயச் சார்பில்லாத பொதுச்சொற்கள் உருவகம் போன்ற இலக்கிய உத்தியாக அமைந்து சமயச்சார்புடைய பொருள்படுமாயின், அத்தகு சொற்களும் விளக்கத்திற்கு எடுத்துக்கொள்ளப்பெற்றுள்ளன.

பொருளருமையும் இலக்கணநுட்பமும் உடையவாயினும் இலக்கிய பரமாக அமைந்துள்ள சொற்களும் தொடர்களும் பொருள் விளக்கத்திற்கு எடுத்துக்கொள்ளப்பெறவில்லை.

சமயச் சொற்களுக்குப் பொருள் விளக்கந் தருங்கால் கட்டுரைப் போக்கினை மேற்கொள்ளாது, அகராதிப்பொருள் முறையே மேற்கொள்ளப் பெற்றுள்ளது. இதனால், சொற்களுக்கு அறிஞர்கள் கண்ட பொருள்களைத் தொகுத்துக் காட்டுவதும், கருத்துவேறுபாடுகளுட் புகுந்து மயங்காமையும் பயன்களாயின.

பொருள் தருங்கால், ஒரு சொல் அதன் பொருளில் திருமந்திரத்தே முதற்கண் இடம்பெற்றுள்ள பாடல் எண்ணினைச் சுட்டிக் குறிக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டு :

''அகண்ட ஒளி – 2806 : சிவப்பேரொளி''.

ஒரு சொல் அல்லது தொடருக்குப் பரியாயப் பெயரோ வேறு கருத்தோ இருப்பின் அவை தொடர்ச்சியாக எழுதிக்காட்டப் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டு :

"அஞ்சுமுகமுளநாயகி – 697: ஐந்துமுகமுள்ளசதாசிவ நாயகி. அஞ்சுடன் அஞ்சு முகமுள நாயகி எனக்கொண்டு பத்துத் திசைகளிலும் முகமாயுள்ள நாயகி என்றும் கூறுவர்."

ஒரு பாடலில் ஒரு சொல் வெவ்வேறு பொருளில் ஆளப்பட்டிருப்பின் அவை பாடவெண்ணிற்குப்பின்னர் 1, 2 என்று எண்ணிட்டுக் காட்டப் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டு :

"கண்காணி – 2067 : 1 – மேற்பார்வையிடுவோன்
2 – இடமெல்லாம் தமக்குரிமை".

ஒரு சொல் வெவ்வேறு பொருளில் வெவ்வேறு பாடல்களில் ஆளப்பெற்றிருக்குமாயின், முதற்பாடற்பொருள் முடிந்த பின்னர், அடுத்துப் பாடல் எண் குறித்து அவ்விடத்திற்குரிய பொருள் காட்டப்பெற்றுள்ளது. எடுத்துக்காட்டு :

அங்கி – 87 : தீ. உடலினகத்தே விளங்கும் சாடராக்கினி [சடல அக்கினி]
கடலின்கண்ணே அமைந்துள்ள வடவைத் தீயுமாம்.
337 : அக்கினி
2630 : ஞானாக்கினி.

திருமந்திர நூற்பாடற் பொருளனைத்தையும் உணர்த்தும் உரை நூலாக இந்நூல் அமையவில்லை. அருஞ்சொற்களுக் கெல்லாம் பொருள் கூற முற்படும் அரும்பத உரை நிரலுமாகாது. அதன்கண் அமைந்துள்ள சைவ சமயச் சார்பான சொற்கள் - தொடர்கள் - தொகைச் சொற்கள் ஆகியவற்றின் பொருளை அகராதி போன்று தொகுத்துக்காட்டுவதே இந்நூலாகும். திருமந்திரப் பொருளை ஆய்ந்து கற்கமுற்படுவோர்க்கு, சமயச்சார்பான சொற்களை விளக்கும் ஒரு கையேடாக இந்நூல் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

பொருள் விளக்கஞ் செய்யுங்கால் அப்பொருள் உரைத்த ஆசிரியர்களின் பெயர் சுட்டப்பெறவில்லை. விருப்பு வெறுப்பின்றிக் கருத்தின் பொருத்தமுணர்ந்து வாசகர்கள் மேற்கொள்வதற்கு இது

துணைபுரிவதாகும். தேவையான இடங்களில் உரையாசிரியர்களின் விளக்கம் அவர்களுடைய சொற்றொடர்களிலேயே கொடுக்கப் பெற்றுள்ளது.

**பாடல் எண்**

இதுகாறும் வந்துள்ள திருமந்திரப் பதிப்புக்கள் அனைத்திலும் பாடல் எண்கள் வேறுபட்டே வந்துள்ளன. சில பாடல்களை விடுத்தும், சில பாடல்களைக் கூட்டியும் சிலவற்றை இடம் மாற்றியும் கொண்டமையால் இவ்வேறுபாடு அமைந்துள்ளன.

இவ்விளக்க நூலில் பாடல் எண், சைவ சித்தாந்த மகா சமாச வெளியீட்டினைப் பின்பற்றியே கொடுக்கப்பட்டுள்ளது. இந்த எண்ணினைக் கொண்டு பிற மூலநூல் - உரை நூல் பதிப்புக்களிலுள்ள அதற்குரிய பாடல்களை அறிவதில் இடர்ப்பாடு ஏற்படுவதியல்பே. அவ்விடர்ப்பாட்டினை நீக்கி எளிதில் தங்கள் பதிப்பிலுள்ள உரிய பாடலைக் கண்டறிவதற்கு வாய்ப்பாக இந்நூலின் பின்னிணைப்பில் எண் வரிசையில் பாடல் முதல் நினைப்புத் தரப்பெற்றுள்ளது. அதில், சைவ சித்தாந்த சமாசப் பதிப்பிலுள்ளவாறு பாடல் எண் முதற்கண்ணும், அதனை அடுத்து அதற்குரிய செய்யுள் முதல் நினைப்புத் தொடரும் கொடுக்கப்பட்டுள்ளன. இதன் உதவியால் பயில்வோர் தங்களிடம் உள்ள பதிப்பில் குறிப்பிட்ட சொல் இடம்பெற்றுள்ள பாடலை அறிந்து கொள்வது எளிதாகும்.

எண் வரிசையில் செய்யுள் முதற்குறிப்புக் கொடுக்கப் பட்டுள்ளமையால் அச்செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசையில் அமைவதற்கில்லை. திருமந்திரப் பாடல்களிற் சில அப்படியே மீண்டும் நூலில் இடம்பெற்றுள்ளன. சில பாடல்களின் முதலடி அல்லது முதலிரண்டடிகள் மாறாமல் வேறு பாடலின் முதற்பகுதியாகவும் அமைந்துள்ளன. தேவையேற்படுமிடங்களில் செய்யுள் முதற்குறிப்பு இரு சீராகவோ, மூன்று நான்கு சீர்களாகவோ கொடுக்கப்பட்டுள்ளன. இதற்கு மேலும் தொடர்ந்து செய்யுட்பகுதி ஒத்து நின்றால் முதலிரு சீரும் அடுத்து மூன்று புள்ளிகளும், அவற்றை அடுத்து, வேறுபடும் பகுதியின் முதற்சொல்லும் காட்டப்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டு வருமாறு :

ஒரு சீர் : '' 1 – ஒன்றவன்''

இரு சீர் : '' 32 – தேவர் பிரான்''

முச்சீர் : '' 92 – நந்தி அருளாலே மூலனை''

நாற்சீர் :'' 58 – அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்''

நான்கின்மிக்கசீர் : '' 99 – மூலன் உரை ... ஞாலம்''

முழுதும் அப்படியே திரும்ப வந்துள்ள பாடல்கட்கு, ஏனைய பாடல்களுக்குப்போல முதலிரு சீர்களே காட்டப்பட்டுள்ளன. மிகச்சிறிய பாடபேத வேறுபாட்டொடு முழுப்பாடல் வந்தாலும் அப்பாடல் அச்சிறு வேறுபாடுகொண்ட சொல் முப்புள்ளிகளுக்குப் பின்னர் இட்டுக்காட்டப் பட்டுள்ளது.

### பாடல் எண் ஒப்புநோக்கு

மூலமாகவோ உரையுடனோ நூல் முழுவதுமாக அமைந்துள்ள பதிப்புக்கள் சிலவற்றில் பாடல்எண் வரிசையில் மாறுபாடு உள்ளது. சில பதிப்புக்கள் பாயிரப்பகுதியில் அமைந்துள்ள மாற்றம் தவிர ஏனைய பாடல்கள் ஒத்த எண் கொண்டுள்ளன. பின்வரும் பட்டியல் கொண்டு பெரிதும் மாறுபடாத பதிப்புக்களின் பாட்டெண்களை ஒப்புநோக்கின் மூலம் கண்டுகொள்ளலாம். மிக்க வேறுபாடுள்ள பதிப்பின் பாடல்களைப் பின்னிணைப்பில் தரப்பெற்றுள்ள செய்யுள் எண் முதற்குறிப்பின் துணைகொண்டு அறிந்து கொள்ளலாம்.

| சமாசப் பதிப்பு | விசுவநாதபிள்ளைப் பதிப்பு |
|---|---|
| காப்பு | காப்பு |
| *1* | *2* |
| *2* | *1* |
| *3 - 50* | *3 - 50* |
| *51 - 94* | *61 - 104* |
| *95 - 98* | *109 - 112* |

| | |
|---|---|
| *95 - 98* | *109 - 112* |
| *99 , 100* | *107 , 108* |
| *101 , 102* | *105 , 106* |
| *103 - 112* | *51 - 60* |
| *113 - 3047* | *113 - 3047* |

திரு. ஜி. வரதராசபிள்ளையவர்களின் பதிப்பு, சைவ சித்தாந்த சமாசப்பதிப்பின் பாடல் வரிசையினை அப்படியே பின்பற்றி அமைந்துள்ளது. சிற்சில இடங்களில் பாட வேறுபாடுகள் காணப்படுகின்றன.

| வரதராச சமாசப் பதிப்பு | திரு. ஜி. பிள்ளைப் பதிப்பு |
|---|---|
| காப்பு | காப்பு |
| *1 - 3047* | *1 - 3047* |

திருப்பனந்தாள் திருமடம் வெளியிட்டுள்ள திருமந்திரமூலப் பதிப்பும் சைவ சித்தாந்த மகா சமாசப் பதிப்பினையே பின்பற்றி விநாயகர் காப்பொடு *1* முதல் *3047* பாடல்களைக் கொண்டு நூலை முடித்துள்ளது. பின்னர் அதிகப்பாடல் என்ற தலைப்பில் 61 பாக்களைப் பிற்சேர்க்கையாகத் தந்து, அவற்றிற்கு *3048* என்ற எண் தொடங்கித் தொடர் எண் கொடுத்துள்ளது. இச்சொல்விளக்க நூல் பின்பற்றிய பாடல் எண் வரிசையினையே அப்பதிப்பும் கொண்டுள்ளமையால் அதன்கண் பாடல்களைக் கண்டறிவதில் சிரமம் ஏதும் இராது.

# கலைச்சொல் விளக்கம்

அ

**அக்கணி கொன்றையன் - 395 :** உருத்திராக்கத்தையும் கொன்றை மாலையினையும் அணிந்துள்ள சிவபெருமான். அக்கு எலும்பு மாலையுமாகும்.

**அக்கரம் எட்டு - 464 :** ஐம்பூதங்களுக்குரிய எழுத்துக்களாகிய ல, வ, ர, ய, ஹ என்பனவும், அ, உ, ம் என்னும் பிரணவ எழுத்துக்கள் மூன்றும் ஆக எட்டெழுத்துக்கள்.

**அகத்தியம் - 337 :** அகத்தியனைப் பற்றிய செய்தி. இதனை, அகத்து இயம் எனக்கொண்டு, உடம்பின் கண்ணே விளங்கும் நாதம் எனப்பொருள் காண்பாருமுளர். இந்நிலையில் இதனையும் இதனைப்போன்ற பிற சொற்களையும் முற்றிலும் யோக பரமாகக் கொண்டும் உரை கூறுவர். அதனால் அண்டத்தில் அமைந்தனவாகக் கூறப்படும் எல்லாவற்றையும் பிண்டத்திலும் கண்டு அவற்றை யோக நிலைக்காம் அகவிளக்கமாகக் காட்டியுள்ளனர்.

**அகத்தியன் - 337 :** திருக்கயிலாயத்தில் சிவபெருமான் இமவான் மடந்தையாகிய உமையம்மையாரைத் திருமணம் புரிந்த காலை, விண்ணவர் முனிவர் மண்ணவர் அனைவரும் அதனைக்கண்டு மகிழ அங்குத் திரண்ட அள்வில், உலகம் சமனிலை மாறித் தென்பாலுயர்ந்து வடபால் தாழ்ந்தது. அதுகண்ட தேவரும் மற்றையோரும் இறைவனிடம் வேண்டிக்கொள்ள, அவரும் தம்மை ஒத்தார் தென்றிசை சென்றால் உலகம் சமனாகு

மெனக்கருதி, அதற்குரியார் அகத்தியரே எனக்கண்டு அவரைத் தென்பகுதி செல்லுமாறு பணித்தார். அவர் தென்பகுதி அடைந்த அளவில் உலகம் சமனிலையெய்தியது என்பது புராண வரலாறு. இவ்வாறு இறைவனால் ஏவிக்கொள்ளப்பெறும் தகுதியும் தலைமையும் சான்ற சிறப்புடைய முனிவர் அகத்தியராவார்.

**அகண்ட ஒளி - 2806 :** சிவப்பேரொளி.

**அகராதி ஆறு - 1307 :** ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ என்னும் ஆறெழுத்துக்களாகும்.

**அகளம் - 2396 :** அருவம் ; உருவமற்றது.

**அகார உகாரம் இலிங்கம் - 1753 :** சிவ சத்தியாகிய அகார உகாரங்களே ஆன்மலிங்கம்.

**அகாரண காரனி - 1114 :** தனக்கொரு காரணமில்லாதவளும், உலகிற்கொரு காரணமானவளும் ஆகிய தேவி.

**அகிலமும் உண்டவன் - 1025 :** உலகங்கள் அனைத்தையும் தன்னகத்தே ஒடுக்கிக் கொண்ட சிவபெருமான்.

**அகோசர வியம் - 90 :** (அகோசர பீஜம்) பொறியுணர்விற்குப் புலப்படாது விளங்கும் வித்துப்போன்ற பரம்பொருளாகிய சிவன்.

**அகோசரி - 1048 :** வாக்கு மனங்கட்கு அப்பாற்பட்டவன்.

**அங்க நியாசம் - 1311 :** கிரியைவழி அங்கங்களைத் தொட்டு அவற்றைச் சிவாங்கமாகப் பாவிப்பது நியாசம் எனப்படும். அங்கங்களை நியாசம் செய்வது அங்கநியாசம். உபலக்கணத்தால் கரநியாசமும் கொள்ளப்படும்.

**அங்கப்புணர்ச்சி - 828 :** பரியங்கயோகம். யோக வகையுள் ஒன்று.

**அங்க முதல்வன் - 342 :** வேதாங்கங்கள் ஆறினுக்கும் தலைவனான சிவபெருமான். ஆறு சமயங்களுக்கும் முதல்வன் என்றும், அங்கங்களில் முதன்மையான கண் போன்றவன் (சிவன்) என்றும் கூறுவர். சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோவிசிதி, சோதிடம் ஆகிய ஆறும் வேதாங்கங்கள் ஆகும்.

**அங்கி - 87 :** தீ. உடலினகத்தே விளங்கும் சாடராக்கினி. கடலின் கண்ணே அமைந்துள்ள வடவைத் தீயுமாம்.

**337 :** அக்கினி.

**2630 :** ஞானாக்கினி

**அங்கி அப்பு - 452 :** அகட்டுத் தியும் நீரும் நிறைந்துள்ள கருப்பை.

**அங்கி ஈசற்குக் கையம்பு - 421 :** முப்புர அழிப்புக்காலத்தில் போர்க்கோலம் கொண்டு புறப்பட்டபோது கொள்ளப்பட்ட அக்கினியாகிய அம்பு.

**அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன் - 338 :** 1) நாள் தோறும் எரியோம்பி ஓமம் செய்யும் அகத்திய முனிவன். 2) அக்கினி கலையின் சொரூபமாகிய நாதத்தைச் சிரசின் முன் பக்கம் விளங்கச் செய்யும் சாதகனாகிய அகத்தியன். யோக சாதனையில் ஒன்றினைக் குறிக்கும். 'நடுவுள அங்கி அகத்திய நீ போய் முடுகிய வையத்து முன்னிர்' (337) என்னும் பகுதியும் இதனைக் குறிப்பதாக அமைந்து இறைவன் அகத்திய முனிவரைப் பொதிய மலையிற் சென்று உறையுமாறு பணித்த புராணக் கதையின் தத்துவத்தை உணர்த்துவதாக விளங்குகின்றது.

**அங்கி மிகாமை வைத்தமை - 365 :** கடல் பொங்கி மிக்கு அழிக்காதவாறு சிவபெருமானால் வடவைக் கனல் வைக்கப்பெற்றமை. இது வடவாமுகாக்கினி எனப்படும்.

**அச்சுதன் - 88 :** திருமால், அழிவில்லாதவன்.

**அசத்து - 1420 :** மாற்றமுள்ளது. இல்லது. உடல். மாயை. பாசம்.

**அசத்து என்னும் ஆறாறு - 617 :** நிலையில்லாதனவென்று கருதப்படும் முப்பத்தாறு தத்துவங்கள்.

**அசபை - 884** : ஓரெழுத்து மந்திரமாகிய இது மந்திரங்களுக் கெல்லாம் அடிப்படையானது. செபிக்கப்படாமல் பிராணனுடன் இழைந்தியங்கும் மந்திரமாதலின் அசபை எனப்பட்டது. ஹம்சம் என்னும் இதனை அம்சமந்திரமென்றும், அன்னமந்திரமென்றும், அஜபா மந்திரம் என்றும் வழங்குதலுண்டு.

**அசற்குரு - 2044 :** சற்குரு ஆகும் தகுதியில்லாதவன். சன்மார்க்கம் உபதேசிக்கும் தகுதியிலாதார். அவர் அனுபவ ஞானமில்லா மூடன், உண்மை உணராதான், வேதநெறி காணான், பணிவிலான், பரநிந்தை செய்வோன், சிவபோதமே உடையவன் முதலியவராவர்.

**அசித்து - 54 :** அறிவில்லது. அறிவில்லாப்பொருள். சடப்பொருள்.

**232 :** இருள் மலத்தால் கட்டுண்டு எதனையும் அறியாதநிலை.

**1420 :** அறியாமை / அஞ்ஞானம்.

**அசிபதம் - 2388 :** ஒன்றாக ஆகின்ற பதம். சிவசிவர் ஒன்றாகு நிலை.

**2437 :** தத்துவமசி என்னும் மகாவாக்கியத்தில் அமைந்துள்ள அசி என்னும் சொல், அசிபதம் எனப்படும். ஆகிறாய் என்பது அதன் பொருள்.

**அசுத்த சைவம் - 1423 :** திருமூலர் பாகுபாடு செய்த சைவ சமய வகைகள் நான்கனுள் இரண்டாவதாக அமைந்தது. அசுத்தம் என்பதிலுள்ள அகரம் தலைமை அழ்கு முதலிய சிறப்புப் பொருளை உணர்த்துவதாகும் என்றுங் கூறுவர்.

திருமூலரின் இப்பிரிவுகளைப் பின்வந்த சித்தாந்த சாத்திரங்கள் பின்பற்றவில்லை. இப்பிரிவுகள் திருமூலர் கருத்திற்கு ஏற்றனவல்ல என்று கருதுவாருமுளர்.

திருவேடப் பொலிவோடு சரியை கிரியை ஆகிய இரண்டு நெறிகளில் மட்டும் நிற்கும் நிலை அசுத்த சைவம் என்று கூறப்படும். (இங்கு இவ்விளக்கம், அசுத்தம் என்பது சுத்தமல்லாதது என்னும் பொருளில் அமைந்தது).

அசுத்தம் என்றமைக்குக் காரணமாகச் 'சத்தும் அசத்தும் சதசத்தும்' தான் கண்டிருக்கின்ற ஞானி நிலையினும் வேறுபட்டதாய், சுத்த சைவத்திற்கு வாயிலாய் இருக்கின்றது என்பதனைக் காட்டுவர். அன்னோர், 'மேலான தற்பரம் கண்டோர் சுத்த சைவராகவே, சரியை கிரியையின் நிற்பார் அசுத்தராவதற்கு இழுக்கில்லை' யென அமைதியும் காட்டுவர். அசுத்த சைவத்தைப் பிறவாறும் விளக்குவர்.

**அசுத்தம் - 1420 :** அசுத்த மாயை. தூவா மாயை. இங்கு அகரம் எதிர்மறைப்பொருள் தரும்.

*2267* : ஆன்ம தத்துவமாகிய இருபத்து நான்கு தத்துவங்களும் அசுத்த தத்துவமாகும். அசுத்த மாயையாவது, நித்தியமாய், வியாபகமாய், அருவமாய், சடமாய், சொல்வடிவமும் சுத்தமாகிய பொருள் வடிவமும் தோன்றுதற்கு முதற்காரணமாய், மயக்கம் செய்யாததாயிருப்பது.

**அசுத்தா சுத்தம் - 2267 :** மிசிர மாயையொடு கூடிய வித்தியா தத்துவங்கள் ஏழும் அசுத்தா சுத்த தத்துவங்களாகும்.

**அசுரர் - 44 :** சுரர் ஆகிய தேவர்களுக்கு மாறுபட்ட இராக்கதர்.

**அசேதனம் - 2033 :** அறிவற்ற சடப்பொருள். தானாயியங்கும் தன்மையில்லாதது.

**அஞ்சமுது - 1827 :** பழம், தேங்காய், தேன், நெய், சர்க்கரை ஆகிய ஐந்து அமுதுகள். பஞ்சாமிர்தம்.

**அஞ்சலி - 57 :** கரங்குவித்துத் தொழுகை.

**அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன் - 57 :** மை போலும் நீல நிறங்கொண்ட திருமேனியொடு விளங்கும் உமாதேவியை இடப் பாகத்திலுடைய சிவபெருமான். 'நீலமேனி வாலிழை பாகத்தொருவன்' என்பது சங்க இலக்கியம் (ஐங்குறு நூறு - கடவுள் வாழ்த்து).

**அஞ்சாமுகம் - 57 :** சிவபரம்பொருள் இலிங்கத் திருமேனி கொண்டு சதாசிவ மூர்த்தமாக விளங்குங்கால், சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடன், ஈசானம் என்னும் ஐந்து திருமுகங்கள் கொண்டு விளங்கும். அவற்றில் ஐந்தாவது திருமுகம் உச்சியினை நோக்கி அமைந்துள்ள ஈசானம் ஆகும்.

**அஞ்சிட்ட கோலம் - 1034 :** ஐந்து திருமுகங்களோடு கூடிய சதாசிவம். இதனை, ஆன்மாவுக்கமைந்த அன்னமய கோசம், ஆனந்தமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம் சாதாக்கிய வகைகள் ஆகிய ஐந்து கோசங்களைக் குறிப்பதாகவும் விளக்குவர்.

ஐந்து திருமுகங்களோடு கூடிய சதாசிவம். சிவசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், கன்ம சாதாக்கியம் என்று ஐந்து வகைப்பட்டதும், சிவன், முத்தன், சாதகன், ஞானி இவர்கள் தியானிப்பதற்காக ஈசானன், தத்புருடன், அகோரன், வாமதேவன், சத்தியோசாதன் என்ற மூர்த்தத்தை அடையுமாறு சத்தியுடன் சேர்ந்ததுமான பரசிவம் சாதாக்கியமாகும். அதன் வகைகளைச் சுட்டுவதாக விளக்கப்பெறும்.

**அஞ்சிலமுது - 2299 :** சிவதத்துவத்தின் ஈறாகிய சிவம்.

**அஞ்சு ஐயும் - 1300 :** திருவைந்தெழுத்தும், சத்தி பீஜமான 'ஐ' யும்.

**அஞ்சு முகமுள நாயகி - 697 :** பஞ்சமுகமுள்ள சதாசிவ நாயகி. அஞ்சுடன் அஞ்சுமுகமுளநாயகி எனக்கொண்டு பத்துத் திசைகளிலும் முகமாயுள்ள நாயகி என்றும் கூறுவர்.

**அஞ்செரி கொள்ளி - 193 :** உடலகத்துள்ள தீயினுக்குப் பிராணன் அபானன், சமானன், உதானன், வியானன் என்னும் ஐந்து வாயுக்களும் விறகாகும்.

**அஞ்செழுத்து - 576 :** பஞ்சாக்கர சொரூபன். திருவைந்தெழுத்தினைத் திருமேனியாக உடைய சிவன். ஐந்தெழுத்து ந, ம, சி, வ, ய என்பனவாகும்.

**அஞ்சொடு இருபத்து மூன்றுள ஆகமம் - 57 :** ஆகமங்களின் தொகை இருபத்தெட்டாகும். அவை வருமாறு :
(1) காமிகம்; (2) யோசகம்; (3) சிந்தியம்; (4) காரணம்; (5) அசிதம்; (6) தீப்தம்; (7) சூட்சுமம்; (8) சகசரம்; (9) அம்சுமான்; (10) சுப்ரபேதம்; (11) விசயம்; (12) நிசுவாசம்; (13) சுவாயம்புவம்; (14) அலைம்; (15) வீரம்; (16) இரௌரவம்; (17) மகுடம்; (18) விமலம்; (19) சந்திரஞானம்; (20) பிம்பம்; (21) புரோகிதம்; (22) இலளிதம்; (23) சித்தம்; (24) சந்தானம்; (25) சர்வோக்தம்; (26) பாரமேசுரம்; (27) கிரணம்; (28) வாதுளம்.

**அஞ்சொடு நான்கு - 2272 :** மெய் வாய் கண் மூக்குச் செவி எனும் ஐந்து ஞானேந்திரியங்களும், மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்களும்.

**அட்டதேசப்பொருள் - 974 :** பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், (நிலம், நீர், தீ, வளி, வான்) சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய எட்டு.

**அட்டவித்தேசுரர் - 494 :** அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகவுருத்திரர், திரிமூர்த்தி, சிகண்டர், சிகண்டி ஆகிய எண்மர்.

**அட்டாங்க யோகம் - 549 :** இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டுவகை உறுப்பினைக்கொண்ட யோகம்.

**அடல்விடை - 299 :** கொல்லும் தன்மையுடைய காளை. மறத்தைக் கொல்லும் அறத்தின் வடிவம்.

**அடி. - 108 :** திருவடிசேர் ஞானமாகிய சிவஞானம்.

**அடிகள் - 20 :** முடிவிற்குப்பின் சத்தியையும் தன்னுள் அடக்கித் தானொருவனாக நிற்கும் கடவுள். சிவபெருமான்.

**அடிதலை அறியும் திறம் - 2425 :** (1) இறைவன் திருவடி ஆன்மா தன் தலையில் பொருந்தியவற்றை உணர்தல். இது திருவடி தீட்சையாகும். (2) ஆன்மாவும் சிவமும் வேறறக்கலந்து, இன்பமாய், நிற்கின்ற நிலையை அறியுமாற்றைச் சுட்டுமென்றும் விளக்குவர். இதனைத் 'தாடலைபோற்கூடி அவை தான் நிகழாவேற்றின்பக் கூடல்' என்று திருவருட்பயன் குறிப்பிடும் (திருவருட்பயன் 74). (3) காலுந்தலையும் அறிதலாவது மூலாதாரத்திலுள்ள குண்டலினிசத்தி ஊர்த்துவ சத்தியாக மேலே சிரசுக்குச் செல்லும் உபாயம் அறிதல் என்று யோக பரமாகவும் விளக்கப்பெறும்.

**அடிமுடி தேடியமை - 372 :** சிவபரம்பொருளின் வியாபகத்துட்பட்டிருந்தும் பிரமனும், திருமாலும் தம் அறியாமையால் தாங்களே தலைவர் எனக்கருதித் தருக்குற்றிருந்தனர். அதற்கு முடிவு காணும் கருத்தில், சிவபெருமானுடைய அடியையும் முடியையும் காணமுற்பட்டுத் திருமாலும் பிரமனும் முறையே பன்றியாகவும், அன்னமாகவும் உருவங்கொண்டு அடி முடி காணமுற்பட்டனர். பேரொளிப்பிழம்பாய் வானுற வளர்ந்து நின்ற சிவபெருமானுடைய அடியையும் முடியையும் காணமுடியாது அவர்கள் அயர்ந்து மீண்டனர். அடி காணாத் திருமால், தான் அடி கண்டிலேன் என்று உண்மை உரைக்கப் பிரமன் தான் முடி கண்டதாகப் பொய் மொழிந்து வடுப்பட்டனன் என்பது புராண வரலாறு.

**அடி மேதினி - 1974 :** பாதம். உடலில் பாதம் முதல் இடைவரை உள்ள பகுதி. உடம்பில் பஞ்சபூதங்களின் இடங்கூறுங்கால் பாதம் பிரகிருதிப்பகுதி யாகும்.

**அடியுடை ஐவர் - 2165 :** கீழ்நிலையிலுள்ள பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் எனும் ஐவர். இதனை ஞானேந்திரியங்கள் ஐந்து என்றும் கூறுவர்.

**அடி வைத்தல் - 1778 :** திருவடி தீட்சை. ஞான குருவாக அமையும் ஆசாரியன் ஆன்மாக்கள் உய்தற்பொருட்டுச் செய்யப்பெறும் தீட்சை வகையில் ஒன்று. ஆசாரியன் தன் திருவடியினைச் சீடன் முடியில் பதித்தல். சிவதீட்சை பிறப்பறுதற்கும், திருவடிப்பேற்றிற்கும் வாயிலாகும்.

**அடுக்களை - 359 :** அவிசு ஆக்கும் குண்டம்.

**அடுப்பு - 799 :** மூன்று நாடி கூடுமிடம். அது திரிபதாகை எனப்படும்.

**அண்ட ஒளி - 2806 :** சூரியன் ஒளி.

**அண்டத்தாணு - 374 :** உலகினைத் தாங்கும் தூணாக விளங்கும் சிவபெருமான்.

**அண்டத்து வித்து - 4 :** உலகங்கள் அனைத்தும் தோன்றுவதற்கு மூலமாக - விதை போன்று விளங்கும் சிவபெருமான்.

அனைத்தும் தோன்றிய முறையே மாயையில் ஒடுங்க, மாயை சிவசத்தியில் ஒடுங்க, சிவசத்தி சிவத்தில் ஒடுங்க, அவை மீண்டும் தோன்றுங்கால், 'தோற்றிய திதியே' ஒடுங்கியினின்றும் உளதாகுமாதலின் சிவபெருமான், அண்டங்கள் தோற்றுதற்கான வித்து எனக்கூறப்பெற்றான்.

**அண்டம் - 524 :** பிரணவம் ; அ, உ, ம, விந்து, நாதம் ஆகிய ஐந்தும் பிரணவமாகும்.

**406 :** உடம்பைச் சுற்றியுள்ள அண்டகோசம்.

**735 :** பீசம் (விதை).

**1362 :** உலகுகள்.

**1572 :** சிதாகாசமாகிய சிவம்.

**2728 :** உலகம். அவை பூதாண்டம் (ஐம்பூதங்களாலாகிய அண்டம்) முதலாகத் தாகாண்டம் (வேட்கையுடையோர் வாழும் அண்டம்) ஈறாக ஒன்பது வகைப்படும்.

**அண்ட முதலான் - 59 :** அனைத்து அண்டங்களுக்கும் முதல்வனாக விளங்கும் சிவபெருமான்.

**அண்ட லிங்கம் - 1712 :** உலகமே சிவபெருமானுடைய அடையாளமாகிய இலிங்கம் என்பதனை உணர்த்துவது. அண்டம் முழுவதும் சிவலிங்கமாகக் காணும் காட்சி.

**அண்டாதித்தன் - 1975 :** அண்டத்தில் விளங்கும் சூரியனுடைய நிலை.

**அண்டாதிபேதம் - 2297:** அண்டத்தின் வகை.

**அணிமா - 672 :** அணுப்போன்று சூக்குமமாதல். எண்வகைச் சித்திகளுள் ஒன்று.

**அணிமாதி சித்திகள் - 2361 :** அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராந்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவன் ஆகிய எட்டு சித்திகள். அட்டமாசித்திகள்.

**அணு - 2065 :** சிவான்மா. உயிர்.

**அணு மூன்று - 2414 :** மூன்று வகைப்படும் ஆன்மாக்கள். விஞ்ஞானா கலர், பிரளயாகலர், சகலர் என ஆன்மாக்கள் மூவகையினராவர். அவர்கள் முறையே ஒரு மலமுடையார், இருமலமுடையார், மும்மலமுடையார் எனப்பெறுவர்.

**அணுவன் - 2455 :** ஆன்மா.

**அணைந்தோர் தன்மை - 2957 :** மோனத்தில் பொருந்தியவர் இயல்பு, சிவத்திற்பொருந்தினோர் இயல்பு, சிவன் முத்தரியல்பு.

**அத்தம் - 2424 :** 1) பொருள் (வேதப்பொருள் முடிபு) ; 2) கை, கைவிரலாற் காட்டும் உண்மை; சின்முத்திரை. கையில் கண்ணுள்ள பெருவிரல் பதி; ஆட்காட்டிவிரல் பசுவாகும்; நடுவிரல் ஆணவமாகும்; அணிவிரல் கன்மமாகும்; சிறு விரல் மாயையாகும். சுட்டுவிரல் ஏனைய மூன்று விரல்களின் நீங்கிப் பெருவிரலோடு தொட்டு நிற்க, மற்ற விரல்கள் மூன்றும் தனித்து நேராக நிற்குமாறு அமைப்பது சின்முத்திரையாகும்.

**அத்தத்தினால் அணையப்பிடித்தல் - 2424 :** இறைவன் தன் திருக்கரத்தால் சிரசினைத்தொட்டுத் தீக்கை செய்தல்.

**அத்தி உரி அரன் - 344 :** யானைத்தோலை உரித்துப் போர்த்திய சிவபெருமான்.

**அத்துவா - 1708 :** வழி. அது ஆறுவகைப்படும். அவை மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்பனவாம். ஆன்மாக்கட்கு இவற்றின் வழியே வினைகள் வந்தடையும்.

ஆன்மாக்களுக்குக் கன்மம் ஏறுதற்கும், பரகதியடைதற்கும் காரணமாகிய வழி.

**அத்துவாக்கள் - 2184 :** வழிகள். அவை மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்று ஆறாகும். இவற்றுள் முதலன மூன்றும் சொற்பிரபஞ்சம் என்றும், இறுதி மூன்றும் பொருட்பிரபஞ்சம் என்றும் கூறப்படும். ஆன்மாக்கள் வினைகளை ஈட்டுவதற்கும் நுகர்வதற்குமுரிய வழிகள் இவையாகும்.

**அதி சூக்கும பஞ்சாட்சரம் - 2718 :** சிவய சிவ. 'நம' வென்னும் மல எழுத்துக்களாகிய நம என்பதனை விடுத்து ஆன்ம எழுத்தாகிய யகாரம் இடை நிற்கச் சிவ வென்னும் மொழியை அதற்கு முன்னும் பின்னும் நிறுத்திச் சிவயசிவ என்று ஓதுவது அதிசூட்சும பஞ்சாக்கரமாகும்.

**அதீதத்தன் - 2260 :** அதீதத்திலுள்ள சுத்த ஆன்மா.

**அதீதாதீதம் - 2250 :** அப்பாலைக்கு அப்பாலுள்ள அனுபவம்.

**அதோமுக தரிசனம் - 520 :** சதாசிவமூர்த்திக்கு ஈசானம் (நடுவுநின்று மேல் நோக்கியது). தற்புருடம் (கிழக்கு), அகோரம் (தெற்கு), வாமம் (வடக்கு), சத்தியோசாதம் (மேற்கு) என்னும் ஐந்து முகங்கள் உள்ளன. அதனோடு அவருக்கு அதோமுகம் (கீழ்நோக்கியதாக அமைவது) என்னும் முகமும் உள்ளது. காண்பரிய அதனைக்காண்பது அதோமுக தரிசனமாகும்.

சிவசத்தியாகிய மாயையின் மேல்முகம் விந்து, நடுப்பாகம் மான், கீழ்ப்பாகம் மோகினி (அதோமுக மாயை) எனப்படும். அதனால் அதோமுக மாயையிலும் உருக்கொண்டு சகலாகலராய் ஆன்மாக்களுக்கும் அருள்புரிவன் ஈசன் என்பது அதோமுக தரிசனம் என்பதன் கருத்தாகும்.

**அதோமுகம் - 521 :** பிரகிருதி மாயை.

**அதோமுகன் - 524 :** அதோமுகம் எனப்படும் கீழ்நோக்கிய முகமாகிய ஆறாவது முகத்தை உடைய சிவபெருமான்.

**அந்தகன் தன் போல் அசுரன் - 339 :** அந்தகாசுரன். இரணியாட்சனுடைய வளர்ப்பு மகன். கண்ணில்லாதிருந்த இவன், தவங்கிடந்து நான்முகன்பால் கண்ணும் பிறவரங்களும் பெற்றுப் பின் தேவர்கட்குத் துன்பம் விளைவித்தான். தேவர்கள் சிவனை வேண்டி முறையிடச் சிவபெருமான் மறக்கருணை மேற்கொண்டு முத்தலைச் சூலத்தால் அந்தகனைக் குத்தி அழித்துப் பின்னர், அவனைத் தேவகணத்தில் ஒருவனாக ஆக்கினான் என்பது புராண வரலாறு. இந்நிகழ்ச்சியை இறைவன் திருக்கோவலூரில் செய்ததாகக் கூறப்படுகிறது. அறியாமையாகிய அந்தகனைச் சிவபெருமான் ஞானமாகிய சூலங்கொண்டு அழித்தருள்னான் என்பது கருத்து.

**அந்தணர் - 214 :** செந்தண்மை பூண்டு வேள்வி புரியும் அறவோர்.

**அந்தமில் சத்தி - 525 :** அளவில்லாத மாயாசத்தி.

**அந்தமிலான் - 354 :** இறப்பில்லாத இறைவனாகிய சிவபெருமான்.

**அந்தமும் ஆதியுமாகிப் பராபரன் - 1927 :** இறுதியும் முதலுமாகிய பராபரன். சிவத்திடமிருந்து சத்தி பிரிந்து பரை, மகாமாயை, சுத்தமாயை, மிசிரமாயை,பிரகிருதி மாயை என விரிந்து சிருட்டி தொடங்குகின்றபடியால் சிவம் ஆதியாகவும், பிரகிருதி மாயை மிசிரமாயையிலும், மிசிரமாயை சுத்தமாயையிலும், சுத்த மாயை மகா மாயையிலும், மகாமாயை பரையிலும், பரை சிவத்திலும் ஒடுங்குகின்றமையால் சிவம் அந்தமாகவும் அமைகின்றது.

**அந்தரி - 1046 :** ஆகாய வடிவானவள்.

**அந்திமதி புனை அரன் - 73 :** மாலையில் தோன்றும் பிறை மதியினை முடியிற் சூடிய சிவபெருமான். 'பிறை நுதல் வண்ணமாகின்று' என்பது சங்க இலக்கியம் (புறநானூறு. கடவுள் வாழ்த்து - 9).

**அந்தி வண்ணன் - 46 :** மாலைக் காலக் கதிரவனுடைய செவ்வொளி போலும் நிறத்தையுடைய சிவபெருமான். 'செவ்வானன்ன மேனி' என்பது சங்க இலக்கியம். (அகநானூறு. 8).

**அநுக்கிரகம் - 441 :** அருளல். இறைவன் சீவர்களைப் பிறப்பினிற் செலுத்தி மல நீக்கம் பெற அருள்புரிதல். ஐந்தொழில்களில் ஒன்று.

**அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன் - 343 :** முடியிற் கங்கை நீரினையும் செஞ்சடையினையும் கொண்டு விளங்கும் ஆதி மூர்த்தியாகிய சிவபெருமான்.

**அப்பாலைக்கப்பால் - 1768 :** அனைத்தையும் கடந்து விளங்கும் நிலை.

**அப்பு - 135 :** சிவபெருமானுடைய திருவருளாகிய நீர்.

**அப்பும் அனலும் - 2266 :** விருப்பும் வெறுப்பும். நீரின் குணமான தண்மையும் தீயின் குணமான ஒளியும் என்றும், நீரின் குணமான நெகிழ்ச்சியும், தீயின் குணமான சுடுதல் தன்மையும் என்றும் கூறப்படும்.

**அபக்குவன் - 1680 :** தகுதியில்லாதவன். குருவாக விளங்கும் தகுதியற்றவன்.

**அபாத்திரம் - 505 :** பாத்திரம் ஆகாதது.

**அபானன் - 482 :** மலக்காற்று.

**அபிடேகம் - 1450 :** ஞானதிட்சை. விசேடம், நிர்வாணம், சமயம் ஆகிய மூன்று தீட்சைகளையும் செய்விக்கும் உரிமை நல்குவதாகிய ஆசாரிய அபிடேகம்.

**அபிராமி - 1048 :** பேரழகு மிக்கவள்.

**அபேதம் - 2343 :** வேறுபாடின்மை. ஒற்றுமை நயத்தால் ஒன்றென்று அறிதல்.

**அம் சத்தி - 2321 :** சிறந்த சத்தி நிபாதம்.

**அம்பர நாதன் - 1790 :** பரமாகாயத்துக்கிறைவனான சிவபெருமான்.

**அம்மை - 1571 :** மறு பிறப்பு.

**அம், உற்ரீம், அம், க்ஷம், ஆம் - 910 :** திருவம்பலச் சக்கரத்தின் பீச எழுத்துக்கள். இவற்றொடு ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்பனவும் அதற்குரிய எழுத்துக்களேயாம்.

**அமரர் - 6 :** அமுதமுண்டமையால் மரணமில்லாத தேவர்கள்.

**அமரன் - 2032 :** மரணமற்றவன். அறிவற்றுக் கிடக்கும் உடலில் கிளர்ந்தெழும் இந்திரியங்களை அடக்கவல்லவன்.

**அமராபதி நாதன் - 28 :** தேவருலகத் தலைநகராம் அமராபதிக்கு நாதனாக விளங்கும் இந்திரனுக்கும் தலைவனாய சிவபெருமான்.

**அமலங்கள் பதிபசு பாசங்கள் - 895 :** திருக்கூத்தாடுமிடத்தில் ஆகமங்கூறும் பதி பசு பாசங்கள் நிர்மலமாகும்.

**அமலம் - 894 :** சிற்சபையிலுள்ள நின்மல சிவம்.

**895 :** சுத்தம்.

**அமுத்தன் - 2247** : அமூர்த்தன். வடிவமில்லாதவன்.

**அமுதப்பலாவனம் - 1959** : அமுதத்தில் மூழ்கி எழுந்தது போலும் அனுபவம்.

**அமுதபயோதரி - 1407** : அமுதேசுவரி; வெண்ணிற ஒளியில் விளங்குபவள்.

**அமுரி தாரணை - 845** : வீரியத்தை உடம்பில் தங்கும்படி செய்தல். அமுரி சிறுநீர் என்றும் கூறப்படுகின்றது.

**அயன் - 341** : பிரமன், திருமாலின் உந்திக்கமலத்தில் தோன்றியவன். தன் கல்வியாலும் தொழிலாலும் செருக்குற்றுத் தன்னையே முழுமுதற்கடவுளாகக் கருதிச் செயற்பட்டபோது அதற்குக் காரணமான ஒருதலை சிவபெருமானால் கொய்யப்பெற்றது. அது கண்டு தந்தை முறைமையினராய திருமால் சிவபெருமானொடு சினங்கொண்டார். சினத்தால் பெருகிய குருதியினைச் சிவபெருமான் தன் கரத்துள்ள பிரம்ம கபாலத்தால் ஏந்திக் கரம் கழுவினான் என்பது புராண வரலாறு. இவ்வாறு பிரமன் சிரம் கொய்தது கண்டியூரில் நடைபெற்றதாகக் கூறப்படுகின்றது. ஆன்மாக்களின் இராக துவேஷங்களை விருப்பு வெறுப்புக்களை இறைவன் அகற்றியருளும் குறிப்பு இதன் கருத்தாகும்.

**அர்ச்சிக்கும் - 61** : இறைவன் திருநாமங்களை இசையொடு கூறி மலரிட்டு வழிபாடு செய்யும். 'அற்சனை பாட்டேயாகும்' திருமுறை. (பெரிய புராணம். தடுத்தாட்கொண்ட புராணம் - 70).

**அரகர - 916** : உறரஉறர என்னும் சிவநாமம். அரன் (மலத்தைத்தேயச் செய்பவன்) கரன் (கரப்பவன்) என்னும் சொற்களின் முற்பகுதிகள் சேர்ந்து அரகர என்றாயிற்று என்று இதற்குத் தமிழ் மூலம் காட்டுவாருமுளர்.

**அரநெறி - 1543** : சன்மார்க்க சிவநெறி.

அரன் - 15 : அழித்தற் கடவுளாகிய சிவபெருமான். அடியார்களின் தீவினைகளை அரித்தழித்துக் காப்பவன். போக சிவம்.

அரன் அத்தி உரித்தமை - 344 : தாருகாவனத்து முனிவர்கள் சிவபெருமானொடு மாறுபட்டு அபிசாரயாகம் புரிந்து அதன்கண் தோன்றிய யானையைச் சிவபெருமானை அழிக்குமாறு ஏவினர். அவர் அந்த யானையினை அழித்து அதன் தோலை உரித்து உடம்பில் போர்த்தியருளினார் என்பது புராண வரலாறு. இச்செயல் வழுவூரில் நடைபெற்றதாகக் கூறப்படுகின்றது.

அரனிலை - 2411 : சிவாலயம். அங்குள்ள சிவலிங்கம் பதியாகவும், இடபம் பசுவாகவும், பலிபீடம் பாசமாகவும் கூறப்பட்டுள்ளன.

அரனுக்கு மூன்று மலம் - 2183 : உருத்திரனுக்கு ஆணவம் கன்மம் திரோதாயி ஆகிய மூன்று மலங்கள் உள்ளன.

அரனெறி - 313 : சிவத்துடன் பொருந்தி நிற்றற்காம் சிவநெறி.

அரி ஏறு முப்பது - 2884 : சிங்கங்கள் பதின்மூன்று. (முப்பது =மூன்று + பத்து) ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து; புத்தி சித்தம் அதுகாரம்; மூன்று ஆகிய பதின்மூன்று.

அரு - 1763 : சிவபரம்பொருளின் அருவத்திருமேனி. உருவமில்லாமை.

2647 : அருவமாக உள்ள மாயை.

அருட்சோதி - 15 : சிவபெருமானுடைய பேரொளிப்பிழம்பாய்த் திகழும் திருவருட் பிரகாசம்.

அருணோதயம் - 1993 : சிவசூரியன் உதயம். ஞானாதித்தன் மூலத்தானத்திலிருந்து நாத வடிவாய்த் தோன்றுதலானும், அதன் நிறம் செம்மையாதலானும் அருணோதயம் எனப்பட்டது.

அருத்தி - 277 : இறைவனிடத்தன்பு. பத்தி.

**அருந்தவர் - 2424 :** சனகர், சனாதனர், சனற்குமாரர், சனந்தனர் ஆகிய நான்கு தெய்வ இருடிகள்.

**அருமறையோதி - 342 :** நான்கு மறைகளையும் ஓதியருளியவனாகிய சிவபெருமான்.

**அருவம் - 2481 :** உருவமற்றது.

**அருவினை - 1867 :** சஞ்சிதம். ஆன்மாவால் அனாதியாய்ஈட்டப் பெற்றுள்ள வினைப் பயனில் அனுபவித்துக் கழிந்தன போக எஞ்சி நிற்பன.

**அருவினைப் பாசத்தர் - 2257 :** ஐந்து மலங்களுடைய சகலர், அரிய வினைப்பயன்களைத் துய்க்க வேண்டியவராவர்.

**அருவுரு - 2481 :** உருவமும் அருவமும் அற்றநிலை. சதாசிவ நிலை. சிவபெருமானுடைய இலிங்கத் திருமேனி அருவுருவம் எனப்படும்.

**அருள் ஐந்து - 1805 :** பராசத்தி, ஆதி சத்தி, இச்சா சத்தி, ஞான சத்தி, கிரியா சத்தி ஆகிய ஐந்து சத்திகள்.

**அருள் வழி - 2705 :** ஞானமார்க்கம்: முத்திநெறி.

**அரைக்கின்ற அருள் - 436 :** வருத்துகின்ற திரோபவ சத்தி (மறைப்பாற்றல்).

**அலரோனுக்கு மலம் ஐந்து . . . . - 2183 :** பிரமனுக்கு ஆணவம், கன்மம்,மாயை, மாயேயம், திரோதாயி ஆகிய ஐம்மலங்கள் உள்ளன.

**அலைவாய் - 363 :** அலைமயமான பிரளய கால சமுத்திரம்.

**அவ்வொடு சவ் - 957 :** அம்சம் என்னும் அரன் விளங்கும் மந்திரம்.

**அவகதிமூவர் - 1536 :** பயன் குறைந்த பதமுத்திகட்கு இறைவராகிய பிரமன், விட்டுணு, உருத்திரன் ஆகிய மூவர்.

**அவத்தை - 1734 :** உணர்வுநிலை, கேவலம், சகலம், சுத்தம் என்பன காரண அவத்தைகள். நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம் உயிர்ப் படக்கம் (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்) என்பன காரிய அவத்தைகள்.

**அவத்தை ஈரைந்து- 1734 :** சாக்கிரம், சொப்பனம் , சுழுத்தி, துரியம், துரியாதீதம் ஆகிய ஐந்து நிலைகள் நெற்றி முதல் மூலாதாரம் வரை கீழிறங்கும் முறையில் கீழாலவத்தை ஐந்தும், அவை மூலாதாரத்திருந்து நெற்றி வரை மேலேறும் முறையில் மேலாலவத்தை ஐந்தும் ஆகிய பத்து அவத்தைகள்.

**அவத்தை பேதம் - 2142 :** உயிர் உடம்பின்கண் வாழுங்கால் அடையும் நிலைவேறுபாடுகள். அவை சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் எனப்படும். (நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம்).

**அவாயம் அறல் - 2718 :** துன்பந்தரும் நகார மகாரம் நீங்குதல். 'சிவாய நம' என்பதில் நகார மகாரம் நீங்கிச் 'சிவாய' என நிற்கும் நிலை.

**அவாவறுத்தல் - 2613 :** பொருட்களின் மீது செல்லும் ஆசையை அகற்றல் .

**அவி - 237 :** அவிசு. வேள்வித்தீயில் தேவர்களுக்குக் கொடுக்கப்படும் உணவு. நிவேதனம்.

**அவித்தா நனவு - 500 :** (அவித்து ஆம் நனவு) மறைபட்ட அறிவு.

**அவி மந்திரம் - 359 :** பேசா எழுத்தாகிய பிரணவம்.

**அராகாதி - 2247 :** அராகாதி குணங்கள், தருமம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வரியம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அநைஸ்வரியம் ஆகிய எட்டு புத்தி குணங்களாகும்.

**அருச்சனை - 1003 :** வழிபாடு.

**அழுக்கு - 254 :** அஞ்ஞான அழுக்கு. காம, வெகுளி, மயக்கமென்னும் மலினங்கள்.

**அழுவைகள் ஐந்து - 2304 :** நின்மல அவத்தை பேதங்களில் நிகழும் அனுபவங்கள். நின்மல சாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மல சுழுத்தி, நின்மல துரியம், நின்மல துரியாதீதம் ஆகியன.

**அளகை வேந்தன் - 18 :** அளகாபுரித் தலைவனாகிய இருநிதிக்கிழவன் எனப்படும் குபேரன்.

**அளப்பன ஐயைந்தும் - 1034 :** அதிகரித்து விளங்கும் இருபத்தைந்து மூர்த்தங்கள். விக்கினபிரசாதர், பிரமசிரச்சேதர், பிட்சாடனர், வீரபத்திரர், கச சம்மாரர், கிராதர், காளகண்டர், கங்காளர், சக்ரபிரதர், சண்டேசானுக்கிரகர், சுகாசனர், ஏகபாதர், சபாபதி, சலந்தராரி, திரிபுராரி, தூலாரி, காமாரி, இலிங்கோற்பவர், சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், இடபாரூடர், உமாமகேசர், கல்யாண சுந்தரர், அர்த்தநாரீசர், அரியர்த்தர் ஆகிய இருபத்தைந்து சிவ மூர்த்திபேதங்கள்.

**அளியார் முக்கோணம் - 401 :** கருணை நிரம்பிய முக்கோணம். திருவருள் நிலைக்களம், ஸ்ரீ சக்கரத்தின் நடுவிலுள்ள புள்ளியைச் சுற்றியுள்ள முக்கோணம்.

**அற்று நின்றார் - 253 :** அகப்புறப் பற்றற்று நிற்கும் ஞானியர்.

**அறநெறி - 1544 :** தர்ம மார்க்கம். அறவழி.

**அறப்பதி - 1614 :** முத்தியுலகம்.

**அறம் - 51 :** ஓதி, வாழ்க்கையில் மேற்கொண்டொழுகுதற்குரிய அறநூல்.

**அறவாழி அந்தணன் - 1803 :** பல்வேறு வகைப்பட்ட அறங்களெல்லாவற்றையும் தனக்கு வடிவாகவுடையவன்; சிவபெருமான்.

**அறிவு - 2405 :** ஆன்மா.

**அறிவு நழுவல் - 2443 :** விடயஞானம் ஒழிதல்.

**அறுகோணம் - 1745 :** சுவாதிட்டானம்.

**அறு சமயம் - 1530 :** ஆறுவகையான புறச்சமயம்.

**1561 :** உட்சமயம் ஆறு. அகச்சமயம் (காண்க: ஆறு சமயம்).

**அறு தொழில் - 224 :** அந்தணர்க்குரிய ஆறு தொழில்கள். அவையாவன: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல். இதனை வினைத்தொகையாகக் கொண்டு 'பிறப்பற முயலும் முயற்சி' என்றும் கூறுவர்.

**அறுபத்தறுவர் - 57 :** இருபத்தெட்டு ஆகமங்களை இறைவன் தன் ஈசான முகத்தால் உபதேசிக்க அவ்வுபதேசம் பெற்ற அறுபத்து ஆறு சான்றோர்.
அவர்கள் வருமாறு:
பிரணவர், திரிகலர், உறரர், சுதா, பஸ்மர், விபு, சுதிப்தர், கோபதி, அம்பிகை, காரணர், சர்வருத்ரர், பிரஜாபதி: சுசிவர், சிவர், அச்சுதர் : ஈசர், ஈசானர், உறீதாசனர் ; சூட்சுமர், வைஸ்சிரவணர், பிரபஞ்சனர் ; காலர், பீமர், தருமர்; அம்புசம்யமர், அர்க்கர், ரவி, தசேதர், விக்னேசர், சசி; அனாதிருத்ரர், பரமேசுவரர், தசாரணர், சைலசர், நிதனேசர், பிரமர்; வியோமர், அக்கினி; தேஜஸ், பிரசாபதி, பிரம்மேசர், நந்திகேசர், சிவர், மகாதேவர்; சர்வாத்மகர், வீரபத்திரர்; அனந்தர், கிருஉறஸ்பதி; பிரசாந்தர், ததீசி; சூலி, கவசர்; லயர், ஆலயர்; பிந்து, சண்டேசுரர்; சிவநிஷ்டர், வாயு; சோமதேவர், நிருசிம்மர்; ஸ்ரீதேவி, உசனஸ்; தேவ விபவர்; சம்வர்த்தகர்; சிவர், மாகாளர்.

**அறுபத்தெட்டாக்கை - 2126 :** அறுபதும் எட்டுமாய் அமைந்த உடல். பிருதுவிக்கூறான மயிர், தோல், எலும்பு, நரம்பு, தசை ஆகிய 5; அப்புக்கூறான நீர், உதிரம், மூளை, நிணம், சுக்கிலம் ஆகிய 5; தேயுக்கூறான ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல் ஆகிய 5; வாயுக்கூறான ஓடல், இருத்தல், கிடத்தல் ,

நடத்தல், தத்தல் ஆகிய 5; ஆகாயக்கூறான குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் ஆகிய 5 ஆக 25 உம் கன்மேந்திரியங்கள் 5, வாயுக்கள் 10, நாடிகள் 10, வாக்குகள் 4, ஈஷணை 3, குணம் 3 ஆக அனைத்தும் அறுபதாகும். இவற்றோடு தன்மாத்திரை ஐந்தும் அந்தக்கரணம் மூன்றும் ஆக 68 உம் கூடிய யாக்கை. இதனை அறு+பத்து+எட்டு என்று கொண்டு நீங்கும் படியான பத்து வாயுக்களோடு எட்டும் சேர்ந்த உடல் என்றும் கூறுவர்.

அறுபது யாக்கை - 2126 : தூய உடம்பு. மாயேயமான பூதங்களில் கூறு இருபத்தைந்து, கன்மேந்திரியம் ஐந்து, வாயு பத்து, நாடிகள் பத்து, வாக்கு நான்கு, ஈஷணை மூன்று, குணம் மூன்று ஆகிய அறுபதும் கூடியது.

அறுமுகன் - 520 : முருகன். சிவபெருமானின் ஆறு திருமுக ஆற்றலால் தோன்றியதனால் முருகன் ஆறுமுகங்கள் கொண்ட அறுமுகன் எனப்பட்டான். அதனால் சிவனுக்கும் முருகனுக்கும் பேதமின்மையைக் காட்டும் வகையில் முருகனை அறுமுகச் சிவன் எனவும் குறிப்பிடுவர்.

அறுவகைக் கோசம் - 1572 : பூத ஆன்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சிவான்மா, மந்திரான்மா, பரமான்மா ஆகிய ஆறு.

அன்னம் - 2353 : சிவம். அன்னத்தை உறம்சம் எனக்கொண்டு, உறம்-நான், சம் - அவன் எனப்பொருளுரைத்துச் சிவன் எனக்கூறுவதுண்டு.

அன்ன மயன் - 2005 : அன்னத்தாலாய உடம்பினன். இதனை உறம்சருபன் என்றும் கூறுவர். உறம்சம் என்பது மூலாதாரத்தினின்று சிரசை நோக்கிச் செல்லும் உணர்வு.

அன்னிலம் - 3002 : (அல்+நிலம் ). மயக்கமுடைய உலக மக்கள்.

அனாதி - 115 : என்று தோன்றியது என்று ஆய்ந்துணரமுடியாத தொன்மையுடைத்து. ஆதியில்லாதது. தோற்றமின்மை (அந்(ந) மறுக்கும் இடைச்சொல்).

அனாதி பசு - 2236 : நித்தியமான ஆன்மா.

**அனுக்கிரகத்தொழில் - 888 :** படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து அருட்டொழில்கள். பஞ்சக்கிருத்தியம்.

**அனுக்கிரகம் - 441 :** மலபரிபாகமுற்ற ஆன்மாக்களைச் சிவபெருமான் தன் திருவடிகளில் சேர்த்துக்கொள்ளுதல்.

**அனுசந்தானம் - 1007 :** இடைவிடாது தியானஞ்செய்தல்.

**அனுபூதிகம் - 2940 :** சுவானுபவம் என்னும் நடுநிலை. வாயினால் கூற முடியாத அனுபவ நிலை.

**அனுபோகம் - 306 :** இறை இன்ப நுகர்ச்சி. சிவானந்தானுபவம்.

**அஷ்டதள கமலமுக்குண அவத்தை - 2527 :** எட்டிதழ்த் தாமரையாகிய இதயத்தின் முக்குண நிலை.

**ஆ, ஈ, ஊ, ஏ, ஓ. - 910 :** இவை திருவம்பலச் சக்கரத்திற்குரிய பீச எழுத்துக்களாம். இவற்றோடு அம், உற்ரீம், அம், க்ஷம், ஆம் ஆகிய எழுத்துக்களும் அதற்குரிய எழுத்துக்களாம்.

**ஆகமம் - 57 :** இறைவனிடத்தினின்றும் வருதலையுடையது. ஆகமம் முடிந்த பொருளை உணர்த்துவது. அதனைத் துறைபோகக் கற்று அதன் வழி நிற்பார்க்கு இறைவன் அணுக்கராய் நின்று அருள்புரிவான். ‘ஆகமம் ஞானம்’ என்பது பிங்கலந்தை நிகண்டு. ஆகமம் என்பது ஞானத்தை நல்கி, மலங்களை அழித்து, வீடுபேற்றினை நல்குவது என்றும், பதி பசு பாசங்கள் என்னும் முப்பொருள் உண்மையினை உணர்த்துவது என்றும் விளக்கப்பெறும்.

ஆ - சிவஞானம், க- மோட்சசாதனம், ம - மலநாசம், எனப்பொருள் கொண்டு, ஆன்மாக்களுக்கு மலத்தை நாசஞ்செய்து ஞானத்தை உதிப்பித்து மோட்சம் (வீடுபேறு) கொடுத்தற்காக உபதேசிக்கப்பட்ட நூல் ஆகமம் என்றும் விளக்கப்படும். ஆ - பசு, கம் - பதி, ம - பாசம் எனக்கொண்டு பதி பசு பாசம் ஆகியவற்றின் இலக்கணங்களை விரிக்கும் நூல் என்றும் கூறுவர்.

**ஆகமம் ஒன்பான் - 1429 :** வடமொழியிலுள்ள ஒன்பது ஆகமம். அவை காரணம், காமிகம், வீரம், சிந்தம், வாதுளம், யாமளம், காலோத்தரம் சுப்பிரபேதம், மகுடம் ஆகியன.

**ஆகாசம் ஐந்து - 2749 :** பூதாகாயம், குணமய ஆகாயம், குணரகித ஆகாயம், சூரியாகாயம், சிதாகாயம் ஆகிய ஐந்து.

**ஆகாயமாதி - 400 :** வான் வளி தீ நீர் நிலம் என்னும் பஞ்ச பூதங்கள்.

**ஆகுதி - 214 :** அக்கினியில் மந்திர பூர்வமாகச் செய்யும் ஓமம். ஓமாக்கினியில் நெய் முதலியவற்றைப் பெய்கை.

**1971 :** பிராணாக் கினி அல்லது சிவாக்கினியில் ஓமம் செய்வதற்குரிய அவிசு.

**ஆகுதி வேட்டல் - 215 :** ஆவின் நெய்யைப் பறப்பை (சிருக்கு சிருவம்) யில் இட்டு எரி வண்ணராய் விளங்கும் சிவபெருமானை வழிபடல். 'நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண், வீயாச்சிறப்பின் வேள்வி' என்பது சங்க இலக்கியம். *(புறநானூறு - 15. 19 , 20).*

**ஆகும்சன வேதசத்தி - 719 :** திரோதாயி. ஆகுஞ்சனம் எனக்கொண்டு ஆகுஞ்சன முத்திரை என்றும் கூறுவர்.

**ஆகுமுடம்பு - 1710 :** தூலசரீரம்.

**ஆங்காரம் - 2133 :** ஒரு பொருளைக் காணுங்கால் அதன் இயல்பு, பயன் இத்தகையன என்று நிச்சயிப்பேன் என ஒருப்பட்டெழுதற்குக் கருவியானது. சத்துவ தாமசங்கள் குறைந்து இராசதகுணம் மிக்கு ஆன்மாவின் கண்ணதாய், யான் என்னும் வடிவினதாக விளங்குவது.

**ஆசாபாசம் - 1438 :** ஆசை (பற்று) ஆகிய கட்டு.

**ஆடிய ஐந்து - 1020 :** வியட்டிப்பிரணவமாகிய அகார உகார மகார பிந்து நாதங்களாகிய ஐந்து.

**ஆடிய ஐவர் - 985 :** உலக இன்பமே பெரிதென்று, தம் இட்டப்படி திரிந்தாடிய ஐந்து இந்திரியங்கள்.

**ஆண்மை - 373 :** சிவபெருமானுடைய திருவருளாணை.

**ஆணவ கேவலம் மேவுவோர் - 498 :** ஆணவ மலம் ஒன்று மட்டுமே உடையவர்கள். விஞ்ஞானகலர்.

**ஆணவ சத்தியுமாம் அதில் ஐவர் - 398 :** ஆணவ மல சத்தியில் உதித்தவரான அணுபட்ச சதாசிவர், மாகேசர், உருத்திரர், மால், அயன் ஆகிய ஐவர்.

**ஆணவத்தார் - 2240 :** ஆணவ மலம் ஒன்றுமே உடையவராய் மாயை கன்மங்களை அறியாதவராக உள்ள விஞ்ஞானகலர்.

**ஆணவத்தானவர் - 2232 :** ஆணவமலம் ஒன்றுமேயுடைய விஞ்ஞான கலர். அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திருமூர்த்தி, சிகண்டர், சிகண்டி ஆகிய எண்மரும் அட்டவித்தியேசர் எனப்படுவர்.

**ஆணவம் - 2192 :** நெல்லின் உமியைப் போன்றது. மும்மலங்களுள் ஒன்று. அநாதியானது.

**2421 :** பாசமாகிய மாயையில் தனு கரணங்களோடு கூடி அவைகளே தான் என்று மயங்கியிருப்பது.

**ஆணவம் நீங்காதவர் - 398 :** ஆணவ மலம் முற்றிலும் நீங்கப்பெறாதவர்கள். படைத்தல் முதலிய ஐந்தொழில்களைப் புரிவதற்குரிய அதிகார மலம் மாத்திரம் உடையவர்கள்.

**ஆணிப்பொன்மன்று - 131 :** மாற்றுயர்ந்த பொன்மயமான பரமாகாசம்.

**ஆத்தன் - 755 :** சிவபெருமான்.

**ஆத்திகம் - 557 :** உலகத்தார் உண்டென்பதனை ஏற்றுக்கொள்ளும் உணர்வு.

**ஆத்மலிங்கம் - 1753 :** அருள்பெற்ற ஆன்மாவே இலிங்கமாகுதலை உணர்த்துவது. விந்து நாதங்களின் புணர்ச்சியே ஆன்மலிங்கமாகும்.

**ஆதனம் - 552 :** நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல் என்னும் நான்கொடும் பொருந்தி அமையும் இருக்கைநிலை.

அங்கயோகம் எட்டினுள் ஒன்றாகிய இருக்கை.

**ஆதனம் இருநாலு - 558 :** அங்க யோகத்திற்குரிய எட்டு ஆசனம் . அவையாவன : பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி, சொத்திரம், வீரம், சுகாதனம், சுவத்திகம்.

**ஆதார சோதனை - 1492 :** ஆறு ஆதாரங்களையும் திருவருள் துணையால் கண்டு மேல் நோக்குதல்.

**1707 :** ஆதாரங்களைச் சுத்தி செய்வது. கிரியையில் ஆறு ஆதாரங்களிலும் அவற்றிற்குரிய மந்திரங்களைக் கூறிச் சுத்தியானதாகப் பாவித்தல்.

**ஆதாரத்தோரெழுத்து - 1709 :** பிரணவம்.

**ஆதாரயோகத்து அதிதேவு - 709 :** ஆறு ஆதாரங்களிலும் வைத்துத் தொழுதற்குரிய மூர்த்திகள். மூலாதாரம் - விநாயகன்; சுவாதிட்டானம் - பிரமன்; மணிபூரகம் - திருமால்; அநாகதம் - உருத்திரன் ; விசுத்தி - மகேசன்; ஆஞ்ஞை - சதாசிவன்.

**ஆதாரயோகம் - 709 :** ஆதாரங்களைத் தரிசிக்கும் யோகம்.

**ஆதி - 11 :** யாவர்க்கும், யாவைக்கும் முதல்வனாய் விளங்கும் சிவபெருமான். 'முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி' என்பது திருமுறை. *(6-19-1)*.

**347 :** ஆதிநாதனாகிய சிவபெருமான்.

**ஆதி அறிவு - 2812 :** சிவஞானம்.

**ஆதி சொரூபங்கள் மூன்று - 2856 :** சிவபரம்பொருளின் உருவம், அருவுருவம், அருவம் ஆகிய மூன்று வடிவ நிலைகள்.

**ஆதிப்பிரான் - 104 :** ஆதிமூர்த்தியாகிய உருத்திரன்.

**ஆதிபுராணன் - 1557 :** பிரபஞ்சத்திற்கு ஆதியாகிய அநாதி முதல்வன். சிவபெருமான்.

**ஆதிபுராதனன் - 343 :** மிகமிகப் பழமையான சிவபெருமான்.

**ஆதேயம் - 1754 :** ஆதாரத்தில் நிலைத்துள்ளது.

**ஆமை - 2304 :** ஆன்மா. (உருவகம்).

**ஆயத்தில் நின்ற அறிவு - 1606 :** சத்திசிவ ஐக்கியத்தினால் உண்டாகும் மெய்ஞ்ஞானம்.

**ஆயா உபாதியால் ஏய பரியபுரி - 3026 :** அறிவற்ற வடிவமான அறியாமையால் உண்டாகிய, விஷயானுபவங்களால் பெருத்து நிற்கும் தூல உடம்பு.

**ஆயிர நாமம் - 34 :** ஏகனாக விளங்கும் இறைவனுக்கு இட்டு வழங்கும் ஆயிரம் திருப்பெயர்கள் (சகஸ்ர நாமம்). 'பேராயிரம் பரவி வானோரேத்தும் பெம்மான்' என்பது திருமுறை (6-54-8).

**ஆரணத்தங்கி - 223 :** வேதப்பகுதியில் கூறிய சிவாக்கினி.

**ஆரணம் - 391 :** சொற்பிரபஞ்சம், சொல்லுலகு ; வேதம்.

**ஆரணி - 402 :** வேதப்பொருளாக விளங்குபவள்.

**ஆரழல் - 363 :** எரிகின்ற அக்னிப்பிரளயம்.

**ஆரா அமுது - 36 :** உண்ணத் தெவிட்டாத அமுதம் போலும் இறைவன். சிவபெருமான்.

**ஆராதனை - 1831 :** பூசனை.

**ஆரிய காரண உபாதி ஏழு - 639 :** ஆரியனான சிவத்தினுடைய ஏழு உபாதிகள். அவை: ஈசத்துவம், சர்வஞ்ஞத்துவம், வியாபகத்துவம், மாயாரகிதத்துவம், சர்வசத்தித்துவம், சுதந்திரத்துவம், பரோக்ஷத்துவம் இவற்றை இறைமை, முற்றறிவுடைமை, எங்குந்தானாதல், இயல்பாகவே மாயையின்மை, வரம்பிலாற்றல், தன் வயத்தனாதல், ஒன்றியுணர்தல் என்று தமிழில் கூறுவர்.

**ஆரியன் - 117 :** மேலானவனாகிய சிவபரம்பொருள். எங்கும் நிறைந்தவன் என்னும் கருத்தும் கூறப்படும்.

**134 :** ஆசிரியன்.

**565 :** குதிரைச்சேவகன். மனம். (உருவகம்).

**ஆலயம் - 1823 :** கருவறையை உள்ளடக்கிய திருக்கோயில். ஆ+லயம் எனக்கொண்டு ஆன்மாக்கள் லயிப்பதற்கு - சேர்வதற்குரிய இடம் என்றும், ஆணவ மலம் அடங்குவதற்குரிய இடம் என்றும் பொருள் கொள்ளப்படும்.

**ஆலாலம் உண்டான் - 572 :** ஆலகால நஞ்சுண்டவனாகிய சிவபெருமான்.

**ஆவடு தண்டுறை - 78 :** திருவாவடுதுறை என்னும் திருப்பதி. ஆ+அடு+தண்டு+உறை எனக்கொண்டு ஆன்மாக்களைப் பக்குவஞ்செய்யும் நெறியாகிய வீணா தண்டில் உறையும் என்றும் கொள்ளப்படும்.

**ஆவாகனம் - 1315 :** எழுந்தருளும்படி மந்திரத்தால் தெய்வத்தை அழைத்தல்.

**ஆவின் கிழத்தி - 1121 :** ஆன்மாக்களின் தலைவி.

**ஆவுக்கு நாயகி - 1387 :** உயிர்களுக்கிறைவி.

**ஆவுடையாள் - 2384 :** சிவான்மாக்களை உடைமைப் பொருளாகவுடைய தேவி.

**ஆவுடையான் - 1700 :** பசுபதி. சிவான்மாக்களை உடைமைப்பொருளாகக் கொண்டவன்.

**ஆழ்வினை - 1867 :** ஆகாமியம். பிராரர்த்துவத்தை நுகருங்கால் உண்டாகும் விருப்பு வெறுப்புக்களால் ஈட்டப்படுவதும், மேல்வரும் சஞ்சிதத்திற்கு மூலமாக இருப்பதுவுமாகிய வினை.

**ஆழிவலங்கொண்ட அயன்மால் - 349 :** கடலைக் காப்புச் சூழலாகக்கொண்டு, பிரணவ சக்கரத்தை வலமாகச் சுழலவிட்டு உலகினைப் படைக்கும் பிரமனும், சக்கரப்படையினை வலக்கரத்தேந்தியுள்ள திருமாலும்.

**ஆறங்கம் - 55 :** வேதத்தினை ஆராய்வதற்குரிய ஆறு அங்கங்கள். அவை : சிட்சை, கற்பம், வியாகரணம், சந்தோபிசிதம், சோதிடம், நிருத்தம் எனப்படும்.

**1197 :** ஆறு ஆதாரங்கள். அவை : மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை.

**2004 :** இருதயம், சிரசு, சிகை, கவசம்,நேத்திரம், அத்திரம் ஆகிய ஆறு.

**ஆறதுவாகும் அமிர்தத் தலை - 695 :** அலைவீசும் அமிர்த நதி.

**ஆறந்தம் - 1709 :** ஆறு அத்துவாக்கள். அவை : மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை ஆகும்.

**2129 :** ஆறு ஆதாரங்கள். அவை : மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை ஆகும்.

**2370 :** ஆறு முடிவுகள் அவை : வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம்.

**ஆறாதாரம் - 1704 :** உடம்பகத்தே உயிர் நிற்கும் ஆறு நிலைகள். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை. இவை அகநிலை எனப்படும். இவற்றை முறையே மூலம், கொப்பூழ், மேல் வயிறு, நெஞ்சு, மிடறு, புருவநடு என்று கூறுவர். இவை முறையே நான்கு, ஆறு, பத்து, பன்னிரண்டு, பதினாறு, இரண்டு இதழ்களுடைய தாமரை மலர் வடிவுடையனவாகக் கூறப்படும்.

**ஆறாம் உபாதி - 2461 :** ஆறு ஆதாரங்களின் வேறுபாடு.

**ஆறாறு - 1608 :** முப்பத்தாறு தத்துவங்கள்.

**2271 :** 1) ஆறு வழிகள் (அத்துவாக்கள் ஆறு) 2) ஆறு ஆதாரங்கள். (மூலாதாரம் முதலியன).

**ஆறாறுக்கு அப்புறமாகி நின்றான் - 2020 :** முப்பத்தாறு தத்துவங்களுக்கு அப்பாலவனாக விளங்கும் இறைவன்.

**ஆறிய ஞானம் - 2478 :** நன்மையில் மகிழ்வும், தீமையில் வெறுப்பும் இல்லாது இரண்டையும் ஒப்பக்கருதும் ஞானம்.

**ஆறிரண்டொன்று - 106 :** (6+2+1= 9) சிவம் சத்தி நாதம், விந்து (அருவநிலை), சதாசிவம் (அருவுருவ நிலை), மகேசுரன், உருத்திரன், திருமால், பிரமன் (உருவநிலை) நவந்தருபேதம் எனப்படும். இவை நிலையால் வேறாயினும் பொருளால் ஒன்றாகும்.

**ஆறு - 1 :** ஆறு ஆதாரங்கள் எனப்படும் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகியவற்றைக் குறிக்கும். இவ்வாதாரங்கட்கு முறையே விநாயகர், பிரமன், திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகிய மூர்த்திகளாகச் சிவபரம்பொருள் விரிந்து நிற்கின்றது.

மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை ஆகிய ஆறு அத்துவாக்களைச்சுட்டி அவ்வாறத்துவாக்களாகவும் விளங்கும் பரசிவம் என்றும் கொள்ளப்படும் (குறிப்பு மொழி).

**2733 :** ஆறு கூத்துக்கள். படைத்தல் முதலிய பஞ்சகிருத்திய நடனமும் பிரளய கால ஆனந்த நடனமும் ஆகிய ஆறு நடனங்கள்.

**ஆறு ஒட்டகம் - 2893 :** காமம், குரோதம், மோகம், லோபம், மதம், மாற்சரியம், என்று விஷயங்களில் கலந்துள்ள ஆறு மனநிலைகள் (உருவகம்).

**ஆறு கோடியில் தாமான மந்திரம் - 1045 :** ஆறாதார மந்திர எழுத்து.

**ஆறு சமயம் - 1533 :** ஆறு சமயங்களின் தத்துவக்கொள்கைகளை விரித்துக் கூறும் நூல்கள். இங்குக் கருதப்பட்ட சமயங்கள் ஆறும் புறச்சமயங்களாகும். புறச்சமயங்கள் ஆறினையும் வெவ்வேறாக எண்ணுவர். அவை பைரவம், ஜைனம், பாஞ்சராத்திரம், பட்டாசாரியம், உலோகாயதம், சூனியவாதம் என்று கூறப்படும்.

வைசேடிகம், நையாயிகம், மீமாம்சை, ஆருகதம், பௌத்தம், உலோகாயதம் என்பன திவாகரத்துட் கூறப்பட்டன. பிங்கலந்தையில் உலகாயுதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பட்டாசாரியம் ஆகியன கூறப்பட்டுள்ளன. சூடாமணி நிகண்டு பிங்கலந்தை கூறியதில் பட்டாசாரியத்தை விடுத்து, மாயாவாதத்தைச் சேர்த்துக் கூறும்.

**1561:** அறுசமயம். இங்கு ஆறு உட்சமயங்கள் கூறப்படுகின்றன. அவை பாடாணவாத சைவம், சங்கிராந்த வாதசைவம், அவிகாரவாதசைவம், பரிணாமவாதசைவம், சுத்த சைவம், பேதவாத சைவம் ஆகியன.

**ஆறு தெருவில் அகப்பட்ட சந்தி - 2868 :** ஆறு ஆதாரங்களில் முதலாவதாக அமைந்த மூலாதாரம்.

**ஆறு பறவைகள் - 2905 :** காமக் குரோத மோகலோப மத மாற்சரியமாகிய ஆறு பறவைகள் (உருவகம்).

**ஆறுமுகம் - 1569 :** சிவபெருமானுக்குரியன ஆறுமுகங்கள். அவை: தத்புருடம், அகோரம், சத்தியோசாதம், வாமதேவம், ஈசானம், அதோமுகம் என்பன.

**ஆறெழுத்தால் அவ்வாறு சமயங்கள் - 994 :** ஓம் சிவயநம. பிரணவத்தால் காணாபத்தியமும் சிகாரத்தால் சைவமும், வகாரத்தால் சாக்தேயமும், நகாரத்தால் அகம்பிரமவாதமும், மகாரத்தால் மாயாவாதமும் ஆகிய ஆறு சமயங்கள் ஆயின என்று கூறப்படும்.

**ஆறெழுத்து - 962 :** பிரணவத்தோடு கூடிய திருவைந்தெழுத்து ஓம் நமசிவாய. ஓம் சிவாய நம.

**ஆறே அருவி - 2979 :** அருவிகள் ஆறு. அவையாவன : ஆறு ஆதாரங்கள் (உருவகம்).

**ஆன் ஐந்து - 1832 :** பசுவினிற்றோன்றும் ஐந்து பொருட்கள். அவை: பால், தயிர், மோர், நெய், கோசலம் ஆகும். பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்றும், பால், தயிர், நெய், வெண்ணெய், மோர் என்றும் கொள்வர்.

**ஆன்மா - 2192 :** தண்டுலம் போன்றது. தண்டுலம் = அரிசி. ஆணவ நீக்கம் நிகழ்கின்ற வரையில் ஆன்மாவுக்கு மாயையும் கன்மமும் வேண்டப்பெறும், முளைக்கின்றவரையில் அரிசிக்குத் தவிடும் உமியும் வேண்டப்படுவது போல. உயிர் அறிவுடையது. அனாதியானது.

இறைவனால் படைப்பிக்கப்பெற்றது, ஓர் உடம்பொடு கூடித் தான்செய்த வினைகளுக்கேற்ப அனுபவம் உடையதாய்ச் சிற்றறிவினால் சிற்றின்பங்களை நுகர்வதாய்த் தனக்கென ஒரு கடவுளை உடையதாய் இருக்கும் உயிர்.

**ஆனந்தக் கூத்தன் - 91 :** ஆனந்தத்திருநடம் ஆடும் சிவபெருமான்.

**ஆனந்தஞ்சிவாய - 892 :** ஆனந்த வடிவான சிவாய, இது சத்தி, சிவம், ஆன்மா என்னும் முப்பொருள் குறித்தது.

**ஆனந்தப்போத அமுது - 335 :** சிவானந்தமாகிய ஞானாமுதம்.

**ஆனந்தம் இரண்டு - 2813 :** கனவு நனவு நிலையில் எய்தும் ஆனந்தம் ஒன்று, அவை கடந்த அறிவுநிலையில் எய்தும் அப்பாலை ஆனந்தம் ஒன்று ஆகிய இரண்டு ஆனந்தம். இவற்றை விஷயானந்தம் என்றும், சிவானந்தம் என்றும் கூறுவர்.

**ஆனந்தம் மூன்று - 892 :** பிரணவ வியட்டியான அகார உகார மகாரங்கள்.

**ஆனந்தி - 1804 :** ஆனந்த வடிவினன். இடப வாகனத்தையுடைய சிவபெருமான். பசுபதியாகிய சிவசாருப நிலை.

**ஆனை - 1418 :** *1)* பிரணவ சொரூபியான ஆன்மா. *2)* பிரணவ சொரூபியான சிவபெருமான்.

**2215 :** (ஆன் + ஐ) பசுபதியாகிய தலைவன் சிவபெருமான்.

**2870 :** சிவன் (உருவகம்)

**ஆனை இருபத்தைந்து - 2147 :** ஆன்ம தத்துவங்கள் இருபத்தைந்து (உருவகம்).

**ஆனைக்கன்று ஐந்து - 2214 :** மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் பொறிகள் (இந்திரியங்கள்) ஐந்து (உருவகம்).

**ஆனைகள் ஐந்து - 2316 :** மெய், வாய், கண், மூக்குச் செவியெனும் ஐந்து பொறிகள் (உருவகம்).

**ஆனைந்து - 1832 :** ஆனிடத்துண்டாகும் ஐந்து பொருட்கள். அவை: பசும்பால், தயிர், நெய், மூத்திரம், சாணம் ஆகிய ஐந்துங்கொண்டு மந்திர பூர்வமாகச் செய்யப்பட்ட அபிடேகப்பொருள்.

**ஆனை பதினைந்து - 2888 :** நிலம் நீர் தீ வளி வான் என்னும் ஐந்தும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தும், மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐந்தும் ஆகிய பதினைந்து.

**இச்சை - 1136 :** இச்சாசத்தி. ஆன்மாக்களுக்கு மலத்தை நீக்கிச் சிவானுபவம் தருதற்பொருட்டுச் சிவம் கொண்ட கருணை.

**இச்சையில் வந்தெழும் விந்து - 382 :** இறைவனுடைய இச்சை காரணமாக அனைத்தும் சுத்த மாயையினின்றும் தோன்றும்.

**இடக்கை - 801 :** இடைகலை.

**இடம் வலம் சாதிப்பார் - 773 :** பிராணாயாமத்தை முறையாகச் செய்து முடிப்போர்.

**இடை கலை - 665 :** இடப்பால் மூக்கின் வழி உயிர்க்கும் நிலை.

**இணையார் திருவடி - 1423 :** சிவபெருமானுடைய, பர அபர ஞானங்கள் எனப்படும் ஒப்பற்ற இரண்டு திருவடிகள். இறைவனுடைய ஞானசத்தி, கிரியா சத்தி என்னும் திருவருளின் உருவே திருவடி என்று கூறப்படுவது.

**இதோப தேசம் - 2102 :** உயிருக்கு உறுதி பயக்கும் குருவின் நல்லுரை.

**இந்திரியம் - 228 :** மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகள் - இந்திரியங்கள்.

**இந்திரன் - 69 :** திருமூலர்பால் திருமந்திர உபதேசம் கேட்ட எழுவருள் ஒருவர்.

**இம்மை - 247 :** இப்பிறப்பு.

**இயங்கும் மடவார் - 380 :** தம்மைச் சார்ந்தாரைப் பிறப்பு இறப்புக்களில் உழலச்செய்யும் பெண்டிர்.

**இயமம் - 506 :** அட்டாங்க யோக உறுப்பினுள் ஒன்று. தீதகற்றல். அஃதாவது பொய், கொலை, களவு, காமம், பொருளாசை நீக்கி ஒழுகுதல்.

**இரண்டு - 1 :** இரண்டாவதாக எண்ணப்படுவது (திருவருளாகிய சத்தி). அறக்கருணை மறக்கருணை எனலுமாம். ஏகமாக நிற்கும் சிவபரம்பொருள் அருள்புரிநலையில் சத்தி சிவம் என இரண்டாக விளங்கும் தன்மை. (குறிப்புமொழி).

**1437 :** இறைவன் வேறு சிவன் வேறு என்றெண்ணும் துவைதக் கோட்பாடு.

**இரண்டு ஓமம் - 573 :** பூரகம் ரேசகம் (காற்றினை உள்வாங்கல் வெளிவிடல்) ஆகிய இரு தொழில்களையும் செய்தலாகிய வேள்வி.

**இரண்டுடல் - 426 :** தூல சூக்கும உடல்கள் (பருவுடல், நுண்ணுடல்).

**இரண்டு பெருவாய் - 594 :** எருவாய், கருவாய் ஆகிய இரண்டு வாய்கள்.

**இரண்டெட்டு மூன்றைந்து - 465 :** ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு. வித்தியா தத்துவம் ஏழு ஆக முப்பத்தொரு தத்துவங்கள்.

**இரதம் - 737 :** ஆக்கினையிலுள்ள முக்கோணம். அது தேர் போன்றுள்ளமையின் இவ்வாறு கூறப்பட்டது.

**இராசதோடம் - 238 :** மன்னனுக்குரிய குற்றங்கள்.

**இராசி - 549 :** பன்னிரண்டு என்னும் எண்ணைக் குறித்தது.

**இராசி ஈராறு - 1734 :** மேடம், இடபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விரிச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம், என்னும் பன்னிரண்டு இராசிகள்.

**இராப்பகல் அற்ற இடம் - 318 :** இரவும் பகலும் இல்லாத இடம். பாவமும் புண்ணியமும், மறப்பும்,நினைப்பும் போல்வன இராப்பகல் என்று உருவகப் படுத்தப்படும். இரவு பகல் என்ற வேறுபாடற்றுத் தன்னை மறந்து நிற்கும் சாக்ராதீதநிலை என்றும் கூறுவர்.

**இராப்பகல் அற்ற இறை - 318 :** இரவு பகல் என்று கருதும் காலத் தத்துவங்கடந்த இறைவன்.

**இருக்கு - 53 :** இருக்கு என்று சொல்லப்படும் சுலோகங் களையுடைய வடமொழி வேதம். முற்றிலும் மந்திர வடிவமானது.

**இருகைத்தாயர் - 475 :** இரண்டு வளர்ப்புத் தாய்மார்.

**இருதய மந்திரம் - 1092 :** இதயாலயம். இதயத்தில் செபிக்கும் மந்திரமும் ஆகும்.

**இரு பக்கம் - 851 :** வளர்பிறை, தேய்பிறை ஆகிய இரு பக்கம்.

**இருபத்தஞ்சு - 451 :** நிலம் முதலிய பூதங்கள் ஐந்து, சுவை முதலிய தன் மாத்திரைகள் ஐந்து, மெய் முதலிய ஞானேந்திரியம் ஐந்து, வாய் முதலிய கன்மேந்திரியம் ஐந்து, மனம் முதலிய அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று ஆக இருபத்தைந்து தத்துவங்கள்.

**இருபத்தெண்கோடி நூறாயிரம் - 58 :** கோடி நூறாயிரம் என்றது எண்ணற்ற அளவினது என்னும் மிகுதிப்பொருள் உணர்த்து வதாகும். ஆகமங்கள் இருபத்தெட்டுக்கோடி இலட்சம் கிரந்தங்களைக் கொண்டமைந்தன வென்றும், அத்துணைப் பாடல்கள் கொண்டனவென்றும் கருதப்படுகின்றன.

**இருபத நன்நெடு ருத்திரம் - 1207 :** இருசொற்களாயமைந்த நல்ல நெடிய உருத்திரமந்திரம். ஸ்ரீருத்திரத்திலுள்ள சிவ என்னும் இரு சொற்கள். இதில் சி சிவத்தையும் வ சத்தியையும் குறிக்கும்.

**இருபதம் - 2788 :** தற்பதம், தொம்பதம் ஆகிய இரண்டு சொற்கள். இவை தத்துவ மசி என்னும் மகா வாக்கியத்தில் அமைந்துள்ளன.

**இருபாதி - 2312 :** ஆண் பெண் என்னும் இருபகுதியான அர்த்தநாரி சொரூபம்.

**இருபானேழு - 1151 :** இருபத்தேழு நட்சத்திரங்களைக் குறிக்கும் என்றும், இருபத்தேழு ஆண்டுகளைக் குறிக்குமென்றும் கூறப்படும்.

**இரும் பொறியாக்கை - 433 :** சிறந்த பொறி புலன்கள் அமைந்த உடம்பு. 'மாயாஇயந்திர தனு' என்பது சிவஞான போதம். (நூற்பா -3).

**இருமல பெத்தர் - 495 :** இருமலங்களையுடைய பிரளயாகலர். இவர் பக்குவர் அபக்குவர் என இரு வகைப்படுவர். அவருள் பக்குவர் பர முத்தர் அபரமுத்தர் என்று இருவகைப்படுவதனால் பிரளயாகலர் மூவகையினராகின்றனர்.

**இரு மாயா - 492 :** சுத்த மாயை, அசுத்த மாயை ஆகிய இரண்டு மாயை (தூ மாயை, தூவா மாயை).

**இரு மாயா கூட்டம் - 1771 :** சுத்த அசுத்தம் என்னும் இரண்டு மாயைகளின் சம்பந்தம்.

**இரு மூன்று - 1704 :** ஆறிதழ்த் தாமரை வடிவினதாகிய சுவாதிட்டானம்.

**இருவினை - 105 :** பயன் விளைக்கும் நல்வினை தீவினை ஆகிய இருவகை வினைகள்.

**இருவினை நேரொப்பு - 1527 :** இருவினையொப்பு. ஒருவன் தான் செய்த நல்வினைப் பயனாகிய இன்பத்திலும், தீவினைப் பயனாகிய துன்பத்திலும் உள்ளம் வேறுபடாது, அஃதாவது, இன்பத்தில் விருப்பமும், துன்பத்தில் வெறுப்புமில்லாது இரண்டையும் சமமாக நுகரும் நிலை. ஓடும் செம்பொன்னும் ஒக்கநோக்கும் நிலை.

**இல்லது - 383 :** உலகு உடல் உண்பொருள்களாகிய காரியங்கள் தோன்றுவதற்கு இல்லமாக உள்ள மாயை.

**இல்லம் - 269 :** வீடுபேறு.

**இலக்கணாத் திரயம் - 2566 :** மூன்று வகையான இலக்கணைகள். அவை: விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும் விடாத இலக்கணை ஆகியனவாகும். இலக்கணையென்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது. மனம் சென்றது விட்ட இலக்கணை. புலித்தின்றான் என்பது விடாத இலக்கணை. 'பாயிருள் பருகிப் பகல் கான்று எழுதரும் பகுதி' என்பது விட்டும் விடாத இலக்கணை. மனம் போதல் இன்மையால் சென்றது என்பது விட்ட இலக்கணை. புளியம் பழத்தைத் தின்பது உண்மையால் விடாத இலக்கணை. இருளைப்பருகுதலும் பகலைக் காலுதலும் சூரியனுக்கு இல்லாமையாலும் இருளைப்போக்குதலும், பகலைத்தருதலும் உண்மையாலும் இது விட்டும் விடாத இலக்கணை. இந்த இலக்கணச் செய்தியை ஆன்மாவுக்குப் பொருத்தி உரைப்பதனால் இப்பகுதி இலக்கணாத்திரயம் எனப்பட்டது.

**இலயங்கள் மூன்று - 422 :** இலயம் என்பது பிரளயத்தை (ஒடுக்கம்) குறிக்கும். அது மூவகைப்படும். அவை வருமாறு: தினப்பிரளயம், மத்தியப்பிரளயம், மகாப்பிரளயம். சீவர்கள் உறக்கத்தில் உடற் பிடிப்பில் நீங்கி நிற்கும் நிலை தினப்பிரளயம் என்றும், அவை இறப்பினால் உடலின் நீங்கி நிற்கும் நிலை மத்தியப் பிரளயம் என்றும், உலகத்திலுள்ள எல்லா உயிரினங்களும் ஒரு சேர அழிந்து நிற்கும் நிலை மகாப்பிரளயம் என்றும் கூறப்படும்.

**இலிங்க புராணம் - 347 :** பரம்பொருளின் அருவுருவத் திருமேனியாக விளங்கும் இலிங்கத்தின் தொன்மை.

**இலிங்கம் - 1712 :** குறி, அடையாளம். சிவபெருமானுடைய அருவுருவத் திருமேனி சிவலிங்கமாகும். சுத்த சிவம் ஆன்மாக்களின் தியான பாவனா நிமித்தம் நிட்கள சகளத் (அருவ உருவ) திருவுருக்கொண்ட நிலை.

**இலை, பூ, வண்டு, தலை, வேர், தாள் - 2898 :** இத்திருமந்திரம் இல்லற உருவக வருணனை. இலை வேதப்பயிற்சியையும், பூ பிரவிருத்தியையும், வண்டு தத்துவ விசாரணையையும், தலை

முடியையும், வேர் சாதகத்தையும், தாள் சாதகமுயற்சியையும் குறிக்கும். மலர் சுகதுக்க அனுபவம்.

**இழவு - 127 :** தற்போதம் கெட்ட நிலை.

**இளங்கிளையோன் - 504 :** முதிராத தொண்டன்.

**இளங்கொடி - 2445 :** குண்டலினி (உருவகம்).

**இளமதி - 296 :** சந்திரமண்டிலம்.

**இறப்பிலி - 25 :** இறப்பில்லாத சிவபெருமான். 'அந்தமிலான் வரக் கூவாய்' என்பது திருமுறை. (திருவாசகம் - குயிற்பத்து - 1).

**இறை - 9 :** எல்லாப்பொருள்களிலும் தங்கி விளங்குபவனாகிய சிவபெருமான்.

**இறையவர் - 23 :** சிவபெருமான் திருவருளால் படைத்தல் முதலிய தொழில் செய்து விளங்கும் நான்முகன் முதலிய தெய்வங்கள்.

**இறையவர்கள் மூவர் - 1198 :** அயன், அரி, அரன். (பிரமன், விட்டுணு, உருத்திரன்).

**இறையவன் - 433 :** 1) உருத்திரன், 2) சதாசிவ மூர்த்தி.

**இறைவன் - 22 :** எல்லாப்பொருள்களிலும் தங்கி விளங்கும் பரம்பொருள். சிவபெருமான்.

**இன் பணி - 795 :** இனிமையைத் தரும் குண்டலினி சத்தி.

**இன்பப் பிறவி - 432 :** பேரின்பம் எய்துவதற்கான பிறப்பு.

**இன்பம் அது இதுவாம் - 283 :** சிவன் சிவன் கலப்பினால் ஏற்படும் பேரின்பம், ஆண் பெண் கலப்பால் பெறும் சிற்றின்பம் போன்றதாகும். 'பெற்ற சிற்றின்பமே பேரின்பமாம்' - (திருவுந்தியார் - 33).

**இன்புறு கண்ணி - 282** . இன்பங்களை நல்கும் கண்ணை உடைய இறைவி.

**ஈசத்துவம் - 684** : தத்துவங்களை விருப்பப்படி நடத்தல்.

**2063** : படைப்பாதி ஐந்தொழில்களையும் ஆற்றும் தலைமைத் தன்மை.

**ஈசற்கு இரண்டு மலம் - 2183** : மகேசுவரர்க்கு ஆணவமும் திரோதயியும் ஆகிய இரண்டு மலங்கள் உள்ளன.

**ஈசன் - 8** : எல்லாப் பொருள்களையும் ஆளும் தன்மையுடைய சிவபெருமான்.

**ஈசன் அசுரரைச் சுட்டது - 421** : சிவபெருமான் திரிபுர சம்காரத்தில் அதன் தலைவர்களாகிய தாராட்சன், கமலாக்கன், வித்யுன்மாலி என்னும் மூன்று அசுரர்களை அழித்த செயல்.

**ஈசன் நடுவுள அங்கி - 337** : அங்கி நடுவுள எனக்கொண்டு தீயின் நடுவே விளங்கும் சிவபெருமான் என்பர். நடுவுள அங்கி என்பதனை அகத்திய என்பதனோடு சேர்த்து, 'நடுவுள அங்கி அகத்திய' எனக்கொண்டு மூல நடுவில் உள்ள சொருபமான நாதமே என்றும் கூறுவர்.

**ஈசி - 1046** : மகேசன் சத்தியாகிக் கருநிறத்தில் விளங்குபவள்.

**ஈமத்துள் அங்கி - 222** : சுடுகாட்டில் சிதையிடத்துச் செய்யும் அக்கினி காரியம்.

**ஈராறாய் மன்னுங்கலை - 645** : பன்னிரண்டங்குலம் எனப்படும் பிராணவாயுவின் பங்கு.

**ஈராறின் அந்தம் - 2680** : சிரசின் மேல் விளங்கும் துவாதசாந்தப் பெருவெளியின் இறுதி.

**ஈராறு - 744 :** பன்னிரண்டங்குல அளவையுள்ள சுவாசம். பன்னிரண்டு இராசி என்றும் கூறுவர்.

**1704 :** பன்னிரிதழ்த் தாமரை வடிவினதாய அநாகதம்.

**ஈராறு எழுகலை - 1187 :** பன்னிரு கலைகளையுடைய சூரிய மண்டலத்தின் உச்சி.

**ஈராறு கால் - 722 :** இடைகலை பிங்கலையாகிய இருவழியாகச் செல்லும் பிராணன்.

**ஈராறு சித்தி - 645 :** அட்டமாசித்தி. ஈராறு உம்மைத் தொகை.

**ஈராறு நாதம் - 1705 :** நாத தத்துவத்தில் பன்னிரு கலைகள்.

**ஈராறு நீதி நெடும்போகம் - 1433 :** துவாத சாந்தத்தில் முறையாகப் பெறப்படும் சிவபோகம்.

**ஈரெட்டாம் அந்தம் - 1705 :** பதினாறு கலைகளொடுகூடிய சந்திரமண்டலம்.

**ஈரெட்டு - 598 :** பூதம் ஐந்து, புலன் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, மாயை ஒன்று, ஆன்மா ஒன்று ஆகப்பதினாறு.

**ஈரெண்கலை - 709 :** சந்திரனுடைய பதினாறு கலைகள். அவை: அகரம், உகரம், மகரம், விந்து, அர்த்த சந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம், சத்தி, வியாபினி, வியோமரூபிணி அநந்தை, அநாதை, அநாசிருதை, சமனை, உன்மனி எனப்பதினாறாகும். சோடச கலை.

**ஈரெழுத்து - 885 :** அகார உகாரம் ஆகிய ஈரெழுத்து. அவை சிவன் சிவை ஆகியோரைக் குறிக்கும். பரமான்மா சீவான்மா எனவும் உரைப்பர்.

**ஈரைந்து - 898 :** தூலசூக்கும பஞ்சாக்கரங்கள். இதனை வரிவடிவில் எழுதும் 'ய' என்னும் எழுத்தாகவும் கூறுவர்.

1704 : பத்திதழ்த் தாமரை வடிவினதாகிய மணிபூரகம்.

2510 : உபசாந்தப்படிநிலை பத்து. அவை : தன்னை உணர்தல், அதனை ஒழிதல், சாக்ராதீதம், வியாப்தம், உபசாந்தம், சிவமாதல், சிவானந்தத்திற் கலத்தல் தானற்று நிற்றல், மோன சுகானுபவம், அதனையும் விட்டொழிதல் ஆகிய பத்து.

ஈரொன்பதின்மர் - 1218 : பதினெட்டுத் தேவ கணத்தவர்.

உச்சாடனம் - 999 : விரட்டுதல். ஓட்டுதல்.

உட்பூசனை - 1849 : அகப்பூசை. மனத்தின்கண்ணே எல்லாச் சாதனங்களையும் அமைத்துப் பூசை செய்தல். ஞானபூசை.

உடம்பினிலாறு - 469 : பேறு, இழவு, துன்பம், பிணி, மூப்பு, சாக்காடு என்னும் அறுவகைத் துன்பங்கள்.

உடல் இருகூறு - 2123 : தூலம், சூக்குமம் என்று இருவகைப்படும் உடம்பு.

உடலான ஐந்து - 1439 : ஐந்தான் உடல். ஐம்பூதங்களாலாக்கப் பட்டவுடல், அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் ஆகிய ஐந்துடல் எனவும் சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகள் எனவும் கூறப்படும்.

உடலிற் பஞ்சபேதம் - 2122 : ஐந்து வகையான உடல் வேறுபாடுகள். அவை : அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் எனப்படும். மாயா காரியமான உடல் தூலம், சூக்குமம், காரணம், சுத்தம், மகாகாரணம் என ஐவகைப்படும் என்பர்.

உடலுள் நின்ற வேதி - 15 : உயிர்களின் உடல்களிலுள்ள இதயத் தாமரையினை இடமாகக் கொண்டுறையும் சிவபெருமான்.

**உடையான் - 547 :** ஆன்மாக்களை அடிமைப்பொருளாகவும் ஏனையவற்றை உடைமைப்பொருளாகவும் கொண்டுள்ள இறைவன்.

**உண்டில்லை என்னும் உலகம் - 2693 :** சத்து என்றும் அசத்து என்றும் கூறப்படும். உலகம் சுட்டி உணரப்படும். உலகம், உள்ளது என்றும் கானல்நீர் போல் இல்லாதது என்றும் கூறும் கருத்தாகவும் இதனை விளக்குவர்.

**உண்டுலகேழும் உமிழ்ந்தான் - 389 :** ஏழு உலகங்களையும் ஒரு காலத்தில் உண்டு வயிற்றடக்கிப் பின் உமிழ்ந்தவனாகிய திருமால்.

**உண்மை முத்தியோன் - 1428 :** சிவன் முத்தியெய்தியவன்,

**உணர்ந்த உணர்வு - 771 :** சீவன் சிவத்தில் இலயமாகுங்கால் அறியப்படும் அறிவு.

**உத்தம சித்து - 439 :** சிவபெருமான்.

**உத்தூளனம் - 1619 :** திருவெண்ணீற்றினை நெற்றியிலும் உடலிலும் தெளித்துப் பரவுமாறு பூசுதல். 'மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியன்' என்பது திருமுறை. (அப்பர் 4-5-1).

**உத்வாகனம் - 1318 :** இதய கமலத்திலிருந்து யந்திரத்தில் ஆவாகனம் செய்த தெய்வத்தை மீண்டும் இதயத்தில் சேர்த்தல்.

**உதிக்கின்ற ஆறு - 610 :** ஆறு ஆதாரங்கள். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை, (மூலம், கொப்பூழ், மேல் வயிறு, நெஞ்சம், மிடறு, புருவநடு எனக்கூறுவர்).

**உந்தி - 1974 :** இடையிலிருந்து உந்தி வரை அப்புவாகும். உடலிற் பஞ்சபூதநிலை கூறுங்கால் உந்தி, அப்பு வெனப்படும்.

**உந்திச்சுழி - 732 :** நாபித்தானம்.

**உபசாந்தம் - 1513 :** விருப்பு வெறுப்பாகிய உலகியல் கடந்த நிலைமை.

**2506 :** மன விருத்தி அமைதியுற்றிருத்தல். செயல் ஒழிவு. விருப்பு வெறுப்பற்று அடங்கிய நிலை.

**2252 :** இறைவனது வியாபகத்தில் வியாப்பியமாக அடங்கி நிற்றல்.

**உபசாரம் எட்டெட்டு - 1827 :** பதினாறு உபசாரம் (சோட சோபசாரம்). அவை : அடைக்காய் தரல், அமுதமேந்தல், ஆசமனநீர் தரல், ஆடை சாத்தல், கருப்பூர திபமேந்தல், கால்கழு நீர் தரல், கைகழுநீர்தரல், தவிசளித்தல்,தேய்வை பூசல், நறும்புகை காட்டல், நீராட்டல், மஞ்சளரிசி தூவல், மந்திர மலரால் அருச்சித்தல், மலர் சாத்தல், முப்புரிநூல் தரல், விளக்கிடல் ஆகிய பதினாறு வழிபாட்டுச் செயலாகும்.

**உபயஉபயம் - 2739 :** உருவம் ஐந்தும், அருவுருவம் ஒன்றும், அருவம் நான்குமாகிய சிவபெருமானின் நவந்தருபேதம்.

**உம்பர் - 286 :** மேலுலகம்.

**உமாபதி - 2625 :** உமையம்மையின் பதியாக விளங்கும் சிவபெருமான்.

**உமாமகேசர் - 62 :** உமாதேவியோடு கூடிய மகேசர் உருவநிலை.

**உமை - 130 :** சிவகாமி. உமையம்மையாகிய சத்தி.

**உய்த்தசங்காரம் - 425 :** அருளில் தோய்ந்து அதனையன்றி வேறொன்றையும் அறியாமல் சிவமாகும் உண்மையில் கலந்திருக்கும் நிலை.

**உய்த்தசங்காரம் நாலாம் - 428 :** உய்த்தசங்காரம் என்பது நாள் ஒடுக்கம் இடைநிலை ஒடுக்கம், பேரொடுக்கம் ஆகியவற்றிற்கு மேல் திருவடியில் கூடுதலாகிய நான்காவது நிலை.

**உயிர் - 2677 :** உயிர்த்தற்குக் காரணமாக உள்ள அறிவுடைப் பொருள். ஆன்மா.

**உயிர்த்தேய்மதி - 877 :** சிவனுக்கு அபரபக்கம்.

**உயிர்ப்பெறும் ஆவாகனம் - 1444 :** புறத்தே மூர்த்தம் அமைத்து அதனிடத்தே பிராணப் பிரதிட்டையாகிய ஆவாகனம் செய்தல். புறப்பூசை.

**உயிர் மூன்று - 2677 :** சகலர், பிரளயாகலர், விஞ்ஞான கலர் என்றும் மூவகை உயிர் வருக்கங்கள்.

**உயிர் வாங்கிய காலம் - 419 :** உயிர்களை உடலினின்றும் பிரித்த காலம். பேரொடுக்க காலம்.

**உயிர்வித்துத்தந்த பதினாலு - 1074 :** பதினாலு புவனங்கள். பதினாலு வித்தைகள் எனக்கொண்டு அவை வேதங்கள் 4, அங்கம் 6, நியாயம் 1, மீமாம்சை 1, மிருதி 1, புராணம் 1 ஆகப்பதினான்கு எனவும் விளக்குவர்.

**உயிராகுதி - 1366 :** பிராணனை ஆகுதியாகச் செய்வது.

**உரு - 1763 :** சிவ பரம்பொருளின் உருவத்திருமேனி.

**உருத்திரம் - 1207 :** திருவுருத்திர மந்திரம். திருவைந்தெழுத்து என்றும் கூறுவர். இருபத நன்னெடும் ருத்திரம் என்று கொண்டு, இரண்டு பதங்களாலாகிய 'சிவா' என்று நீண்டு உச்சரிக்கப்படும் மந்திரம் என்றும் கூறப்படுகின்றது.

**உருத்திரர் - 62 :** சிவபரம்பொருளின் நான்கு வித உருவத்திருமேனி நிலைகளில் ஒன்று. முத்தொழிலில் அழித்தல் தொழில் இதற்குரியது.

**உருத்திரன் - 69 :** திருமூலர்பால் திருமந்திர உபதேசம் கேட்ட எழுவருள் ஒருவர்.

உருவம் - 2481 : உருவமுடையது.

உருவரு - 2676 : ஓங்காரமாகிய பிரணவம் உருவத்தையும் அருவத்தையும் கொண்டது. உரு சகளம் என்றும் அரு நிட்களம் என்றும் கூறப்படும்.

உருவோடரு - 1763 : சிவபரம்பொருளின் அருவுருவத்திருமேனி - இலிங்கத்திருமேனி.

உரை - 1577 : உபதேசம்.

உரை செய்யா மந்திரம் - 2429 : வாயினால் உச்சரிக்காமல் கூறும் மந்திரம். இதனைப் பிரணவ உபதேசம் என்பர்.

உரை மாண்டது - 2981 : பேச்சற்ற மோன நிலை. அது முத்தியாகும்.

உலப்பிலி தேவர்கள் - 3 : இறப்பில்லா அமரர்களாகிய தேவர்கள்.

உவமானமில் பொருள் - 1670 : சிவபரம்பொருள்.

உள் உண்மை - 328 : இதயத்தில் இருப்பதாகிய மெய்ப்பொருள்.

உள்ளங்கி ஆறு - 610 : உள்ளொளியாகிய சந்திர ஒளி, சூரிய ஒளி, அக்கினி ஒளி, தீப ஒளி, மகா ஆகாய ஒளி ஆகிய ஐந்து.

உள்ளாம் பராபரை - 1430 : ஆன்மாவிற்கு உள்ளிருந்து நடத்தும் கிரியா சத்தி.

உள்ளூறும்பானகச்சோதி - 2997 : சித்தத்தில் எழுந்தருளி விளங்கும் ஆனந்த ரூபமாக விளக்கும் ஒளி.

உற்றறிவைந்து - 741 : ஐம்புலன்கள்.

உறக்கமில் போகம் - 2939 : உறக்கமில்லாத சிவயோக சமாதி.

**உன்னிட்ட வட்டம் - 1282 :** தியானிக்கப்படும் பிரணவ வட்டம்.

**ஊமன் - 2157 :** பேசாநிலையில் ஆன்மா.

**ஊமை எழுத்து - 2158 :** பிரணவ சொருபமாகிய பஞ்சமை வாக்கு. பிரணவத்திலுள்ள 'ம்' என்னும் எழுத்து. உச்சரிக்க இயலாதது.

**ஊமைக்கிணறு - 2304 :** நின்மலாவத்தை (உருவகம்).

**ஊர்த்தலைமகன் - 564 :** உடலுக்குள் விளங்கும் மனம்.

**ஊரும் சகாரம் - 1564 :** 'அம்' என்பதனால் ஊரப்பெற்ற சகாரம். அது சம் என்பது. இது சிவ சத்தி சொருபம். இகரம் ஊர்ந்த சகாரம் எனக்கொண்டு சி என்றும், சிகாரத்தால் ஊரப்பெற்ற பஞ்சாட்சரம் என்றும் கூறப்படும்.

**ஊழ் - 2847 :** இருவினைப்பயன்களும் செய்தவனையே வந்தடையும் நியதி.

**ஊழ்கொண்ட மந்திரம் - 739 :** அசபா மந்திரம்.

**ஊழி - 445 :** பிரளயம். யுகம்.

**ஊழிக்கதிரோன் - 380 :** ஊழிக்காலத்தில் ஒளியாய் விளங்கும் சிவபெருமான்.

**ஊழித்தலைவன் - 521 :** பிரளய காலத்தில் அனைத்தையும் ஒடுக்கும் தலைவன்.

**ஊழி முதல்வன் - 36 :** எல்லாம் ஒடுங்கி நிற்கும் பேரூழிக் காலத்தும் தான் ஒடுக்கமின்றி விளங்கி, மீட்டும் உலகினைப்படைக்கும் முழுமுதல்வனாகிய சிவபெருமான்.

உலகனைத்திற்கும் இறுதியைச் செய்யும் முதல்வன். சங்காரகாரணன்.

**ஊன் தெய்வமாக உயிர்க்கின்ற பல்லுயிர் - 257 :** உடலையே தெய்வமாகக் கருதி அதனையே ஓம்பி வாழும் மக்கட்கூட்டம்.

**ஊனங்கள் எட்டு - 2320 :** கடன்கோடல், இரத்தல், வியபிசரித்தல், திருடல், மூத்தல், வியாதி, எச்சிலுண்ணல், வறுமை ஆகிய எட்டு என்றும், பொய், கொலை, களவு, கள், காமம், கடன்கோடல், இரத்தல், வெகுளல் என்றும், புரியட்டகசரீரம் என்றும் கூறப்படுகின்றது.

**ஊனில் எழுத்து - 954 :** பிரமனால் தலையில் எழுதப்படும் எழுத்து.

**ஊனர் கமலம் - 2989 :** உடம்பின்கண் பொருந்திய மூலாதாரம் முதலிய தாமரைகள்.

**ஊனினை நீக்கி உணர்பவர் - 1452 :** அகப்பூசையாளர். ஐம்பொறியடக்கமுடையராய் உடற்பற்றினை நீக்கி இறைவனை உள்ளத்துள்ளே வைத்து உணர்ந்து போற்றுவது அகப்பூசை.

**எட்டிப்பழம் - 2901 :** எளிதிற் கிடைக்கும் உலக போகம்; கவர்ச்சிமிக்க உலக போகம் எனலுமாம். (உருவகம்).

**எட்டு - 1 :** நிலம், நீர், தீ, வளி, வெளி, ஞாயிறு, திங்கள், இயமானன் என்னும் எட்டு வகையில் அமையும் அட்டமூர்த்தியாக உணரப்பெற்று இறைவன் அவற்றுள் கலந்து விளங்கும் இயல்பு.

தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல் இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்னும் எண்குணங்களையும் கொண்டு விளங்கு நிலை என்றும் கொள்ளப்படும்.

**741 :** ஞானமூலங்களாக விளங்குவன எட்டு. கல்வியாற்பெறும் எட்டாவதாகிய அறிவென்றும் கூறுவர்.

**471 :** புரியட்டக சரீரம் (மெய், வாய், கண், மூக்குச் செவியொடு மனம் புத்தி அகங்காரமும் ஆகிய எட்டு).

**2076 :** சிவத்தின் உறுப்புக்கள் எனப்படும் நிலம், நீர், தீ, காற்று, விண், சூரியன், சந்திரன், ஆன்மா ஆகிய எட்டு.

**எட்டுச்சித்தி - 618 :** எட்டுப்பெரிய சித்திகள். அவை: அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகிய எட்டு. அணிமா = அணுப்போன்று சூக்குமமாதல்; மகிமா = மலைபோன்று பெரிதாதல்; கரிமா = கனமாதல்; இலகிமா = பஞ்சைப்போல இலேசாதல்; பிராப்தி = எல்லாப்பொருளையும் தன்பால் தருவித்தல்; பிராகாமியம் = விருப்பம் போல் தடையின்றி எல்லா இன்பங்களையும் பெற்றிருத்தல்; ஈசத்துவம் = தத்துவங்களை விருப்பப்படி நடத்தல்; வசித்துவம் = தத்துவங்களில் கலந்திருத்தல்.

**எட்டுடன் நாலுபுரவி - 457 :** பன்னிரண்டு விரற்கடையளவு கூறப்படும் பிராணவாயு.

**எட்டும் இரண்டும் - 986 :** 1) அகரமும் உகரமும்; 2) சூட்சுமசரீரம், (8 + 2 = 10 = ய = உயிர்கள்). 3) சிவன்சிவன்.

**எட்டெட்டுச் சித்தி - 631 :** அறுபத்து நான்கு கலைஞானங்களால் அடையலாகும் சித்திகள். இதனை எட்டும் எட்டுச்சித்தி எனக்கொண்டு அணிமா முதலிய எட்டுச்சித்திகளும் கை கூடும் எனவும் உரைப்பர்.

**எட்டெழுத்து - 898 :** அட்டாக்கர மந்திரம். இதனை ஓம், அம், உம், ந, ம, சி, வ, ய என்னும் எட்டெழுத்து என்பர். வரிவடிவில் எழுதப்படும் 'அ' என்னும் எழுத்தென்றும் கூறுவர்.

**எண் கடல் - 364 :** அளவு படாத அன்பரது உள்ளக்கருத்து.

**எண் குணம் - 444 :** தன் வயத்தனாதல், தூயஉடம்பினனாதல், இயற்கை உணர்வினானாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகிய சிவபெருமானுடைய எட்டுக் குணங்கள்.

**எண் சத்திக்குரியமை - 1575 :** தன்வயத்தனாதல் முதலிய எண் குணங்களையுடைய நிர்மலத்துவம்.

எண் சித்தி - 333 : எட்டு வகையான சித்திகள். அவை வருமாறு : அணிமா, மகிமா, கரிமா, வகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.

எண்ணிலி - 1851 : ஆசையற்ற ஞானி.

எண்ணெண் சித்தி - 1426 : அறுபத்து நான்கு கலை ஞானங்களாற் பெறப்படும் அறுபத்து நான்கு சித்திகள்; சிறப்பாக எண்ணப்படுகின்ற அட்டமாசித்திகள் எனவும்படும்.

எண்பத்து நான்கு நூறாயிரம் - 409 : எண்பத்து நான்கு லட்சம் வேறுபாட்டோடு கூடிய பிறப்பு வேறுபாடுகள். யோனி பேதங்கள்.

எண் பாலர்கள் - 410 : இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகிய எட்டுத்திக்குப் பாலகர்கள்.

எய்து மதிக்கலை சூக்கம் - 851 : சந்திரனுடைய சூக்குமமாகிய ஒரு கலை.

எலி - 2891 : சிவன். (உருவகம்).

எழுகுணம் - 939 : எழுத்துக்கள் தோன்றுதற்குரிய குணமுள்ள நாதம்.

எழுத்தை அழுத்தும் எழுத்து - 2721 : சிவனுடைய தலையெழுத்தை (பிரமலிபி) அழிக்கும் ஆற்றல் வாய்ந்த பஞ்சாக்கரம்.

எழுபது கோடி நூறாயிரம் - 60 : சிவாகமங்களிலுள்ள கிரந்தங்களின் அளவு எண்ணில்லாதன எனக்காட்டும் பன்மை வாசக எண்.

ஏகாந்தன் - 763 : தனிமையாக விளங்குபவன்.

ஏசாத மாயாள் - 2163 : சுத்த மாயை.

ஏரொளிச் சக்கரம் - 1255 : மேல் நோக்கிய ஒளிவடிவான சக்கரம்.

**ஏழ்கடல் - 423 :** உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் ஆகியவற்றால் அமைந்த ஏழு கடல்கள்.

**ஏழ்கோடிமந்திர நாயகர் - 494 :** நம, சுவாஹா, சுவதா, வௌஷட், வஷட், பட், ஹூம் என்னும் ஏழு இறுதியினையுடைய மந்திரத் தலைவர்கள்.

**ஏழ்தாது - 1934 :** இரதம், உதிரம், எலும்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம் ஆகியன.

**ஏழ் பிறப்பு - 120 :** ஏழுவகையான பிறப்பு. அவையாவன : மக்கள்,தேவர், நரகர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன.

**ஏழா நரகு - 165 :** ஏழு வகையான நரகம். அவை : கூட்சாலம், கும்பிபாகம், அள்ளல், அதோகதி, ஆர்வம், பூதி, செந்து எனப்படும்.

**ஏழின்கண் ஆனந்தம் - 2299 :** வித்தியா தத்துவத்தின் ஈறாகிய மாயை.

**ஏழினும் ஏழு - 2782 :** ஏழு வகை உலகங்களிலும் உள்ள ஏழு வகைப் பிறப்புக்களையுடைய உயிரினங்கள்.

**ஏழினுள் ஏழு - 2783 :** குரல், துத்தம், கைக்கிளை, விளரி, தாரம், உழை, இளி என்று அமையும் பண்ணமைவுகளை ஏழால் உறழ நாற்பத்தொன்பதாக அமைவது. மருத்துகள் ஏழின் பேதங்கள் என்றும் கூறுவர்.

**ஏழு - 741 :** சுகுண விருத்தி ஏழு.

**ஏழு கோடியுகம் - 74 :** ஏழு கோடியுகம் என்பது அளப்பரிய பன்னெடுங்காலம் எனும் கருத்தினது. மூலாதாரம் முதல் சகஸ்ர தளம் ஈறாகவுள்ள ஏழு ஆதாரங்களைக் குறிக்கும் என்றும் கொள்ளப்படும்.

**ஏழு சாலேகம் - 594 :** கண் இரண்டு, காதிரண்டு, நாசிஇரண்டு, வாய் ஒன்று, ஆக ஏழுதுளைகள்.

**ஏழு வூரவு - 2873 :** ஆறு ஆதாரங்களும், அமுத ஊற்றுமாகிய ஏழு கிணறுகள்.

**ஏழும்பர் - 1 :** மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்கட்கும் அப்பாலாய், மேலாய் விளங்கும் துவாதசாந்தப் பெருவெளிநிலை.

சத்தி, விந்து சத்தி, மனோன்மணி, மகேசை, உமை, திரு, வாணி எனப்படும் சத்திபேதம் ஏழிற்கும் அப்பாற்பட்டு விளங்கும் நிலையென்றும், ஏழுவகைப் பிறப்புக்களுக்கும் அப்பாற்பட்டு விளங்கும் நிலையென்றும், ஞாயிறு திங்கள் முதலிய ஏழண்டங்கட்கும் அப்பாற்பட்டு விளங்கும் நிலையென்றும் கொள்ளப்படும் (குறிப்புமொழி).

**ஏற்றம் இரண்டு - 2873 :** இடை, பிங்கலை ஆகிய இரண்டு (உருவகம்).

**ஏறிய ஆறு - 774 :** ஆறு விரற்கடையளவு சுவாசம் வெளியேறல்.

**ஐங்கருமத் தாண்டவம் - 2728 :** படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் பஞ்சகிருத்திய நடனம்.

**ஐங்கருமம் - 1224 :** படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய பஞ்ச கிருத்தியங்கள்.

**ஐங்கலை - 2378 :** மந்திரம், தந்திரம், தெளிவு, உபதேசம், ஞானம் என்று ஐவகைப்படும் கலை.

மந்திரம் சிவனை உணருறு மந்திரம். தந்திரமாவது முத்திரை பாவனை முதலியவற்றோடு செய்யும் பூசை. தெளிவு, தத்துவங்கள் பற்றிய முடிவினை உணர்த்தி அவற்றை விடுத்தற்கான வைராக்கியம் சீடன்பால் உண்டாகச் செய்தல். உபதேசம் குருமொழியாகும். ஞானமாவது சிவசீவ ஐக்கியத்தை உணர்த்துவது.

**ஐந்தகம் - 2905 :** பஞ்சபூதமயமான உடம்பு.

**ஐந்தில் அமர்ந்திருந்தான் - 416 :** பஞ்ச பூதங்களிலும் கலந்து விளங்குபவனாகிய சிவபெருமான்.

**ஐந்து - 467 :** சிவத்துவம் ஐந்து. அவை : சத்தி, சிவம், சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை என்பனவாகும்.

**595 :** பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் ஆகிய ஐந்து வாயுக்கள். இவை பஞ்சப்பிராணன் எனப்படும்.

**1442 :** ஐம்பொறிகள்; மெய், வாய், கண், மூக்குச் செவி ஆகிய ஐந்து.

**1757 :** 1) பஞ்ச கர்த்தர்கள். பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகிய ஐவர். 2) பஞ்சகிருத்தியம். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்கள்.

**ஐந்து கரத்தான் (விநாயகர் காப்பு) :** ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகப்பெருமான். மூத்த பிள்ளையார் எனப்படுவர். தும்பிக்கையாகிய ஐந்தாவது கரம் பிரணவாகாரமாக விளங்குவது.

ஐந்து கரங்கள் ஆன்மாக்களைப் பிணித்துள்ள ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் ஆகிய ஐந்து மலங்களைக் களையும் தொழிலைக் குறிப்பன என்றும், ஐந்து தொழிலாகிய படைத்தல் முதலியவற்றைக் குறிப்பனவென்றும் கூறுவர்.

**ஐந்து கலைகள் - 955 :** நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதிதை ஆகிய ஐந்து கலைகள். ஆன்மாக்களுக்குப் பாசத்தை நிவர்த்தி செய்யும் சிவசத்தி நிவர்த்தி. நிவர்த்தி செய்த ஆன்மாவைத் திடப்படுத்தும் சத்தி பிரதிட்டை. ஆன்மாவுக்குச் சர்வார்த்த ஞானம் ஒளிரச்செய்யும் சத்தி வித்தை. விருப்பு வெறுப்பு (இராக துவேஷங்கள்) இன்றி இருக்கச்செய்யும் சத்தி சாந்தி. மேல் நினைவுகளெல்லாம் கழிந்து சொரூப ஞானமாய் நிற்கச்செய்யும் சத்தி சாந்தியாதிதை.

**ஐந்து குதிரை - 2893 :** ஞானேந்திரியங்களாகிய ஐந்து குதிரைகள் (உருவகம்).

**ஐந்து நடம் - 2733 :** சிவானந்தக்கூத்து முதலாகிய ஐந்து கூத்துக்கள். குற்றாலம், கூடல், தில்லை, பேரூர், ஆலங்காடு ஆகிய இடங்களில் ஆடிய கூத்தென்றும் கூறப்படும்.

**ஐந்து நாதம் - 2759 :** நுண்ணோசை, நினைவோசை, மிடற்றோசை, செவியோசை, கேட்பிக்கும் ஓசை ஆகிய ஐந்து ஓசைகள்.

**ஐந்து பூதத்துடலுடையான் - 299 :** நிலம், நீர், தீ, வளி, வான் என்னும் ஐந்து பூதங்களைத் தன் திருமேனியாகவுடைய சிவபெருமான்.

**ஐந்து பூதம் - 385 :** வான், வளி, தீ, நீர், நிலம் என்னும் ஐந்து பூதங்கள்.

**ஐந்தும் ஈரைந்தும் - 455 :** தன்மாத்திரைகள் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து ஆகப்பதினைந்து.
தன்மாத்திரைகள் : ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் (சப்த, பரிச, ரூப, ரச, கந்தம்) ஆகிய ஐந்து.
ஞானேந்திரியங்கள் : மெய், வாய், கண், மூக்குச் செவி ஆகிய ஐந்து.
கன்மேந்திரியங்கள் : வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் ஆகிய ஐந்து.

**ஐந்தும் ஈரைந்தோடு ஏறிப்பொழிந்த புனல் - 455 :** ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் ஆகிய தன்மாத்திரை ஐந்தும் மெய், வாய், கண், மூக்குச் செவி எனும் ஞானேந்திரியம் ஐந்தும் வாக்கு, பாணி, பாதம், பாயு, உபத்தம் ஆகிய கன்மேந்திரியம் ஐந்தும் கூடி நீராய்ப்பொழியும் புனல்.

**ஐந்து வென்றனன் - 1 :** மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளும் தத்தம் புலன்களிற் சென்று பற்றாவாறு அவற்றை அடக்கி வென்றவன். 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்பது திருக்குறள். (கடவுள் வாழ்த்து - 6). 'வென்றானைப் புலனைந்தும்' என்பது திருமறை. (5-98-7).

**ஐந்தொழில் - 398 :** படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்கள். பஞ்ச கிருத்தியம்.

**ஐம்பத்தாறு - 2782 :** ஐம்பத்தாறு தேசங்கள். அங்கம், அருணம், அவந்தி, ஆந்திரம், இலாடம், யவனம், ஒட்டியம், கருசம், கலிங்கம், கன்னடம், கன்னாடம், காசம், காசுமீரம், காந்தாரம், காம்போசம், கிராடம், குருகு, குடகம், குந்தளம், குரு, குலிந்தம், கூர்ச்சரம், கேகயம், கேரளம், கொங்கணம், கொல்லம், கோசலம், சகம், சவ்வீரம், சாலவம், சிங்களம், சிந்து, சீனம், சூரசேனம், சோழம், சோனகம், திராவிடம், துளுவம், தெங்கணம், நிடதம், நேபாளம், பாஞ்சாலம், பப்பரம், பல்லவம், பாண்டியம், புலிந்தம், போடம், மகதம், மச்சம், மராடம், மலையாளம், மாளவம், யுகந்தரம், வங்கம், வங்காளம், விதர்ப்பம் ஆகியன.

**ஐம்பத்தொன்று - 898 :** ஐம்பத்தோரெழுத்துக்கள். வடமொழி எழுத்துக்கள்.

**ஐம்பதெழுத்து - 965 :** ஓங்காரம் நீங்கிய ஐம்பது எழுத்துக்கள். அதனோடு சேர அட்சரங்கள் ஐம்பத்தொன்றாயின.

**ஐம்பாசம் - 1814 :** ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி ஆகிய ஐந்து மலங்கள்.

**ஐம்புலன் - 119 :** சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனப் பொறிகளால் . உணரப்படும் புலன்கள் ஐந்து. இவை தன்மாத்திரைகள் எனப்படும்.

**ஐம்மல இருளுற்றவர் - 2337 :** ஆணவம் முதலான ஐந்து மலங்களைப் பொருந்தி அஞ்ஞானமுள்ளவர்கள்.

**ஐம்முகன் - 708 :** சதாசிவன். ஐந்து முகங்களையுடையவன். ஐந்து முகங்கள் : சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் ஆகிய ஐந்து.

**ஐயஞ்சு - 1263 :** (ஐந்தும் ஐந்தும் - பத்து). மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை,

சூரியன், சந்திரன், அக்கினி, அதீதம் (அப்பால்) ஆகிய பத்து நிலைகள்.

**ஐயெனும் வித்து - 2870 :** ஐந்து என்னும் பூதங்களாகிய விதை.

**ஐயேழும் ஒன்றும் - 2181 :** முப்பத்தாறு தத்துவங்கள்.

**ஐயைந்து - 2142 :** மெய், வாய், கண், மூக்குச் செவி எனும் ஞானேந்திரியம் 5, வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்னும் கன்மேந்திரியம் 5, பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிதரன், தேவதத்தன், தனஞ்செயன் என்னும் வாயுக்கள் 10, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணம் 4, புருடன் 1 ஆக 25 தத்துவங்கள். இவை 36 தத்துவங்களில் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் புருடன் ஒன்றும் ஆகிய இருபத்தைந்து தத்துவங்கள்.

**ஐயைந்து அவத்தைகள் - 2263 :** சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் ஆகிய ஐந்தனையும் அவ்வைந்தினோடு உறழ உண்டாகும் இருபத்தைந்து அவத்தை வேறுபாடுகள். அவை சாக்கிரத்தில் சாக்கிரம், சாக்கிரத்தில் சொப்பனம், சாக்கிரத்தில் சுழுத்தி என்பனபோல அமையும்.

**ஐவணக்கம் - 1701 :** ஒருறுப்பு, மூன்றுறுப்புக்கள், ஐந்துறுப்புக்கள், ஆறு உறுப்புக்கள், எட்டு உறுப்புக்கள் நிலத்தில் படுமாறு தரையில் கிடந்து வழிபடுவது. தலை வணங்குதல் ஏகாங்கம். இரு கை குவித்துத் தலைவணங்கல் திரியங்கம். இரு கை, தலை, இருகால் நிலத்திற்றோய வணங்குதல் பஞ்சாங்கம், தலை, இருகை, மார்பு, முழந்தாள் இரண்டு ஆகியவை நிலத்தில் பட வணங்குதல் ஷடங்கம். தலை, மார்பு, இரு செவி, இரு கை, பாதங்கள் நிலத்தில் பட வணங்குதல் அட்டாங்கம்.

**ஐவர் - 106 :** அயன், அரி, அரன், மகேசன், சதாசிவன் என்னும் ஐவர். (பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன்).

**2004 :** சத்தியோசர், வாமதேவர், அகோரர், தற்புருடர், ஈசானர் ஆகிய ஐவர். ஐந்து இந்திரியங்கள் என்றும் கூறப்படும்.

**ஐவர் அமைச்சர் - 2027 :** ஐம்பொறிகள் (உருவகம்).

**ஐவர்க்கு நாயகன் - 564 :** ஐம்பொறிகளுக்குத் தலைமகன் (ஆன்மா).

**ஐவகைத் திண்மலம் - 497 :** ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி ஆகிய ஐந்து வல்லிய மலங்கள்.

**ஐவிதம் - 2083 :** சிரவண, மனை, நிதித்தியாசன, சமாதி, சாட்சாட் காரம் என்னும் ஐந்து வகை. கலை, காலம், நியதி, வித்தை, அராகம் ஆகிய ஐந்து என்றும், காலம், ஊழி, உழைப்பு, உணர்வு, விழைவு என்றும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை, சமாதி என்றும் சுட்டுவர்.

**ஓகார முதல்வன் - 951 :** பிரணவ நாயகனான சிவபெருமான்.

**ஒண் சுடராதி - 349 :** ஒளிமிக்க சோதி வடிவாகத் திகழும் சிவபெருமான்.

**ஒண் சுடரான் - 221 :** ஒளிமிக்க சோதிவடிவான சிவபெருமான்.

**ஒரு பொருள் - 661 :** குண்டலினி சத்தி.

**ஒரு மொழி - 2676 :** ஒப்பற்ற மகாவாக்கியம். ஓம் என்பது.

**ஒருவன் ஒருத்தி - 386 :** ஒருவனும் ஒருத்தியுமாக விளங்கும் சிவசத்தி.

**ஒளியின் கண் ஐந்து - 723 :** சுவை, ஒளி, நாற்றம், வெம்மை, எரித்தல் ஆகிய ஐந்து.

**ஒளியும் இருளும் - 1819 :** பசு ஞானமும் ஆணவ மலகாரியமான அறியாமை மோகம் முதலியனவும்.

**ஒன்பதில் (ஒன்பது + இல்) - 467 :** ஒன்பது துவாரங்கள்.

கண் இரண்டு, காது இரண்டு, மூக்கிரண்டு, வாய் ஒன்று, எருவாய், கருவாய் ஒவ்வொன்று ஆக ஒன்பது ஒட்டைகள்.

**ஒன்பது - 741 :** சிவபேதம் ஒன்பது. சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், விட்டுணு, பிரமன் ஆகிய நவந்தரு பேதங்கள்.

1992 : பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், அக்கினி, தாரகை ஆகிய ஒன்பதும் நவக்கிரகங்கள் என்றும் கூறப்படும்.

**ஒன்பது கண்டம் - 2221 :** மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களும், சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்று மண்டலங்களும் ஆக ஒன்பது பிரிவுகள்.

**ஒன்பது கன்னியர் - 662 :** வாமை, சேட்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, மனோன்மணி, ஆகிய நவசத்திகள்.

**ஒன்பது குண்டம் - 1043 :** ஆதாரங்கள் ஆறு, சகஸ்ரதளம் இரண்டு, மூலாதாரத்திற்கும் சுவாதிட்டானத்திற்கும் இடையுள்ள யோனி ஒன்று ஆகிய ஒன்பதும் அகத்தே அமையும் ஒன்பது குண்டங்கள் எனப்படும்.

**ஒன்பது கோடி யுகம் - 82 :** மிகப்பலவாகிய காலம். ஏழு ஆதாரங்களுடன் விந்து நாதம் சேர்ந்த சந்திப்பு என்றும் கொள்ளப்படும்.

**ஒன்பது வாசல் - 152 :** உடம்பிலுள்ள ஒன்பது வாயில்கள் (நவத்துவாரம்). அவையாவன : கண் இரண்டு, காதிரண்டு, மூக்குத்துளை இரண்டு, வாய் ஒன்று, கருவாய் ஒன்று, எருவாய் ஒன்று. 'மலஞ் சோரும் ஒன்பது வாயிற்குடில்' என்பது திருமுறை. (திருவாசகம் - சிவபுராணம் - 55).

**ஒன்பது வாய் - 2926 :** நவத்துவாரங்கள். அவை கண்ணிரண்டு, காதிரண்டு, மூக்குத்துளை இரண்டு, வாய் ஒன்று, எருவாய், கருவாய் ஒவ்வொன்று ஆக ஒன்பது துவாரங்கள்.

**ஒன்பான் பிரணவம் - 859 :** நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், அக்கினி, தாரகை ஆகிய ஒன்பதும் பிரணவத்தின் (சிவபெருமானின்) சார்புருவம்.

**ஒன்பான் வேறுயிர் - 498 :** விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் என்னும் மூவகையினரும், உத்தம மத்திம, அதமமான தகுதி என்னும் நிலையால் ஒன்பது வகையினராதல்.

**ஒன்றாக நின்றவு - 1437 :** பொருள் தன்மையால் வேறாய்க் கலப்பினால் ஒன்றாய்ச் சுத்தாத்துவ பாவனையில் நிற்கை.

**ஒன்று - 1 :** எல்லாத் தத்துவங்களையும் கடந்து, வாக்கு மனாதிகட்கு எட்டாமல் விளங்கும் சிவபரம்பொருள். 'ஏகன்' (திருவாசகம் - சிவபுராணம் - 5). என்றும் 'ஒருரு வாயினை' (ஞானசம்பந்தர் - திருவெழு கூற்றிருக்கை - 1) என்றும் திருமுறைகள் குறிப்பிடும் (குறிப்பு மொழி).

**1437 :** பிரமப்பொருள் என்று கூறும் வேதாந்த இலட்சியம்.

**ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலம் - 236 :** உள்ளம், உரை, செயல் (மனம் வாக்குக் காயம்) என்னும் மூன்று காரணங்களும் அடங்கி நிற்கும் காலம். பிராணனும் (ஒன்று) சுவாசங்களும் (உச்சுவாச நிச்சுவாசங்கள்) அடங்கி நிற்கும் நிலை எனவும்படும்.

**ஓங்காரத்துள்ளொளி - 1556 :** பிரணவத்தில் விளங்கும் ஒளிமயமான இறைவன்.

**ஓங்கார பஞ்சாக்கரங்கள் - 893 :** பிரணவமும் திருவைந்தெழுத்தும். ஓம்நமசிவாய. ''போற்றி ஓம்நமச்சிவாய'' (திருவாசகம் - திருச்சதகம்).

**ஓங்காரம் ஓரொன்பான் பதினொன்று - 2299 :** (3+9+11) ஆன்ம தத்துவத்தின் இருபத்துமூன்றாவதாகிய அகங்கார தத்துவம்.

**ஓங்காரி - 1073 :** ஓங்கார சொருபத்தினள்.

**ஓங்கி ஒளிதிகழ் நாதம் - 442 :** உயர்ந்த ஒளிமயமாகத் திகழும் நாத தத்துவமாக விளங்கும் சிவபெருமான்.

**ஓசம் - 1916 :** கோயில்.

**ஓசையில் ஏழு - 723 :** சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், சரித்தல், சேர்த்தல் ஆகிய ஏழு.

**ஓடவல்லார் - 543 :** தீர்த்தம், தலம், மூர்த்தி தேடி யாத்திரை செய்வோர் ; சரியை நெறியாளர்.

**ஓதா அசிந்தம் - 709 :** பேசாததும் சிந்தித்தல் அற்றதுமாகிய நிலை. வாக்கு மனம் இறந்து எண்ணமற்று நிற்கும் நிலை.

**ஓம் - 237 :** பிரணவம் (சிவம்) அகார உகார மகாரங்களின் சமட்டி நிலை.

**ஓமத்தலைவன் - 221 :** ஓமத்திற்குரிய தலைவனான இயமானன்.

**ஓமத்தார் - 327 :** எரியோம்பி ஓமம் செய்யும் அந்தணர்.

**ஓமத்துள் அங்கி - 222 :** மந்திரத்தொடு செய்யப்பெறும் ஓமத்தில் விளங்கும் நெருப்பு.

**ஓமதியம் - 877 :** பிரணவம் விளங்கும் மதிமண்டலம்.

**ஓமப்பெருஞ்சுடர் - 1091 :** ஓமம் செய்தற்குரிய பெருமையுள்ள நாபிக்குண்டத்து அக்கினி.

**ஓமய ஆனந்தம் - 313 :** ஓம்மயம் என்று கொண்டு பிரணவமயமான சிவானந்தத்தேன் என்றும், ஓ ஆனந்த மயம் (மயம் - ஆனந்தம்) எனக்கொண்டு பெருமை சான்ற சிவானந்த மயம் என்றும் கொள்ளப்படும்.

**ஓமயம் - 2233 :** பிரணவ வடிவம்.

**ஓ மாயை - 1021 :** பிரணவம்.

**ஓமென்ற அப்புறக் குண்டம் - 424 :** பிரணவக் குண்டம்.

**ஓர் அயம் - 407 :** சிவனும் சத்தியும் கூடும் கூட்டம்.

**ஓர் ஆறு - 1439 :** காம, குரோத, மோக, லோப, மத, மாற்சரியம் என்னும் ஆறு ; மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்கள் எனவும் படும்.

**ஓர் மூன்று - 2176 :** ஒன்றும் மூன்றும் = நான்கு. மனம் சித்தம் புத்தி அகங்காரங்கள் ஆகிய அந்தக்கரணங்கள் நான்கு.

**ஓரெழுத்து - 884 :** பிரணவம். அகார உகார மகாரங்களாகிய மூன்றும் கூடிப்பிறக்கும் எழுத்து. இதனை அசபா மந்திரம் எனக்கூறுவர்.

**ஓரெழுத்தொரு பொருள் - 531 :** ஓரெழுத்தாகி விளங்கும் ஓம் என்னும் பிரணவத்தின் ஒப்பற்ற பொருள்.

**ஓரைம்பதின்மர் - 1233 :** ஐம்பத்தொரு அட்சரங்களின் வடிவ தேவதைகள்.

**ககராதி ஐந்து - 1307 :** (வடமொழிக்) ககரவர்க்க ஐந்தெழுத்துக்கள். க, ஏ, ஈ, ல, உற்ரீம் ஆகிய எழுத்துக்கள் என்றும் கூறப்படும்.

**கங்காளன் - 1666 :** எலும்பு மாலையணிந்த சிவபெருமான்.

**கஞ்ச மலையான் - 69 :** திருமூலர்பால் திருமந்திர உபதேசம் கேட்ட எழுவருள் ஒருவர்.

**கடம் - 137 :** உயிர் நிற்கும் உடம்பு.

**கடல் ஏழு - 2738 :** உப்புக்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், மதுக்கடல், நெய்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், சுத்தநீர்க்கடல் ஆகிய ஏழு கடல்கள்.

கடலுள்ளுறுவான் - 390 : பாற்கடலில் துயிலும் திருமால்.

கடல் வண்ணன் - 14 : கடலின் நிறம்போலும் நீல நிறத்தைக் கொண்டு விளங்கும் திருமால்.

கடவுள் - 1545 : இறைவன். அனைத்தையும் கடந்தவனாகவும் உள்ளத்தில் உறைபவனாகவும் விளங்கும் பரம்பொருள்.

கடன் மூன்று - 1595 : மனம், வாக்குக் காயமென்னும் முக்கரணங்களால் இயற்றப்படும் கிரியைகள்.

கடுஞ்சுத்த சைவம் - 1438 : திருமூலர் வகுத்த சைவ வகை நான்கனுள் நான்காவதாகக் கூறப்பட்ட சமயம்.

திருமூலரின் இப்பிரிவுகளைப் பின்வந்த சித்தாந்த சாத்திரங்கள் பின்பற்றவில்லை. இப்பிரிவுகள் திருமூலர் கருத்திற்கு ஏற்றவையல்ல என்று கருதுவாருமுளர்.

ஞானம் முதிர்ந்த நிலையில் வேடம் முதலிய சாதனங்களிலுள்ள வேட்கை தானே அகலுமாதலின் அவை நீங்கி ஆடம்பரமின்றி, மலமாயை கன்மங்களின் நீங்கிய சிவபோதக நிலை கடுஞ்சுத்த சைவம் என்பர். இதனைப் பிறவாறும் விளக்குவர்.

கண் கடல் - 364 : கடல்போலப் பெரிதாகிய ஞானக்கண்.

கண்காணி - 2067 : 1) மேற்பார்வையிடுவோன். 2) இடமெல்லாம் தமக்குரிமை.

கண் சுடரோன் - 221 : கண்ணொளியாக உள் விளங்கும் சிவபெருமான்.

கண்டங்கரியான் - 2732 : நீலகண்டன்.

கண்டங்கள் ஒன்பது - 1425 : 1) ஒன்பது கண்டங்களாக (பாகங்களாக) அமைந்த பூமி.

2) சிவபரம்பொருளின் நவந்தரு பேதங்கள். அவையாவன: அருவ நிலையிலான சிவன் சத்தி நாதம் விந்து எனும் நான்கும், அருவுருவ நிலையிலான சதாசிவன் ஒன்றும், உருவநிலையிலான மகேசுவரன், உருத்திரன், விட்டுணு, பிரமன் எனும் நான்கும் ஆகிய ஒன்பது.

3) பிரணவமானது பிருதுவி,அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், அக்கினி, தாரகை என்று உடலில் விளங்கும் தன்மை.

**கண்டங்கறுத்த கருத்து - 521 :** சிவபெருமான் ஆலகால விடமுண்டு அதனால் கழுத்து கருமை நிறங்கொண்டு திகழும் தத்துவம்.

**கண்டிகை - 1662 :** உருத்திராக்க மாலை.

**கண்ணன் - 53 :** நெற்றிக் கண்ணினையுடைய சிவபெருமான். நெற்றிக்கண் சிவபெருமானுக்குரிய சிறப்புறுப்பாதலின் அதுகொண்டு கண்ணுதலோன் முக்கண்ணன் எனப்படுகின்றான். அப்பெயர் கண்ணன் என்று நின்று இங்குச் சிவபெருமானைக் குறிக்கின்றது. 'நுதலது இமையா நாட்டம் ' என்பது சங்க இலக்கியம். (அகநானூறு - கடவுள் வாழ்த்து - 4).

**கண்ணுடையாள் - 1166 :** கருணைக்கண்ணுடைய பராசத்தி.

**கண்ணுதல் நாமம் - 474 :** நெற்றிக்கண்ணுடைய சிவபெருமானுடைய திருப்பெயராகிய பிரணவம். திருவைந்தெழுத்து என்றும் உரைப்பர்.

**கண்ணுதலான் - 12 :** நெற்றிக்கண்ணுடைய சிவபெருமான். நுதற்கண்ணான் என்பது கண்ணுதலான் என மருவிற்று. இறைவன் அருளையே கண்ணாக உடையவனாதலானும், அது நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளியில் உள்ளதென்று நூல்கள் கூறுவதாலும் கண்ணுதலான் என்பது சிவபெருமானுக்கொரு சிறப்புப்பெயராக அமைந்தது.

**கண் மூன்று - 2866 :** இருதயம், கண்டம், புருவமத்தி ஆகிய மூன்றிடம். இதனை இச்சை, ஞானம், கிரியை ஆகிய மூன்றென்றும் விளக்குவர்.

**கணக்கு - 316 :** முப்பொருளுண்மை உணர்ந்து திருவருளை அடைதற்கு முயலும் நெறியாம் ஞானசாதனம்.

**கந்தமதாகிய காரண காரியம் - 1927 :** வித்தின் காரியமாகவும் முளையின் காரணமாகவும் விளங்குவது கிழங்கு. இங்குக் காரண காரியமாக விளங்குவது மாயை. இது இறைவன் புரியும் ஐந்தொழிற்கு வித்தாகவும், காரண காரியப் பிர்பஞ்சத்திற்கு முளையாகவும் விளங்குகின்றது.

**கந்தமலரில் இரண்டிதழ்க் கன்னி - 2662 :** இரண்டிதழ்களுடைய தாமரை மலராகிய ஆக்ஞையில் விளங்கும் சத்தி.

**கந்தரம் மேல் - 1974 :** கழுத்துப்பகுதிக்கு மேல் ஆகாயம் ஆகும்.

**கபாலி - 735 :** கபாலத்தை ஏந்திய சிவன்.

**கமலம் - 2092 :** இதயத் தாமரை.

**கமல மலர் உறைவான் - 285 :** மெய்யடியார்களின் இதயத் தாமரையில் உறையும் சிவபெருமான். 'மலர்மிசை ஏகினான்' என்பது திருக்குறள் (கடவுள் வாழ்த்து -3).

**கமல மலர் மேலே உடந்திருந்தான் - 26 :** மெய்யன்பர்களின் இதயமாகிய தாமரை மலரில் வீற்றிருக்கும் சிவபெருமான்.

**கயல், முயல் - 2910 :** உலகம், சிவம், (உருவகம்).

**கயலுறு கண்ணி - 760 :** சத்தி (அங்கயற்கண்ணி)

**கயவாரண நாதன் - 1044 :** யானை முகமுடைய விநாயக மூர்த்தி.

**கயிலைப்பராபரன் - 390 :** கயிலை மலையில் வீற்றிருக்கும் பரம் பொருளாகிய சிவபெருமான்.

**கர்ப்பக் கிரியை - 451 :** இறைவன் சீவர்களைக் கருப்பையில் இருத்திக் காக்கும் முறைமை.

**கரணம் - 455 :** கருவி. சிறந்த காரணம். மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்னும் நான்கும் உட்கருவிகள்.

**கரிமா - 680 :** கனமாதல். அட்டமா சித்திகளில் ஒன்று.

**கரியட்டகையன் - 2814 :** யானையை உரித்துப் போர்த்திய சிவபெருமான்.

**கரியுரியான் - 285 :** தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய யானையைக் கொன்று அதன் தோலினை ஆடையாகப் போர்த்தவன்.

**கரிடணி - 1051 :** யானையை உடையவள். கவர்பவள். ஆகர்ஷணம் செய்பவள்.

**கரு - 2647 :** பிறவிக்கு மூலமான பாசம்.

**கருத்தறி காட்சி - 310 :** அறிவனால் அறியத்தக்க இறைக்காட்சி. திருவடிக்காட்சி.

**கரும்பார் - 265 :** இருள் செறிந்த நரகம்.

**கருமங்கள் ஐந்து - 401 :** படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்கள். பஞ்ச கிருத்தியம்.

**கருமத்துரிசு - 2309 :** கன்ம வாசனை.

**கரும நிருவாணம் - 2864 :** செயலற்று நிற்கும் மௌன நிலை.

**கருவழி கண்டவர் - 2056 :** சிற்றின்ப நாட்டமே மிக்கவர்.

**கருவழியாய கணக்கு - 2705 :** பிறவிக்குக் காரணமாகிய வினைவகை.

**கருவிடும் சோதி - 584 :** பிறப்பினை ஒழிக்கும் சோதிமயமான சிவபெருமான்.

**கருவி தொண்ணூறுடன் ஒராறு - 2438 :** தத்துவங்கள் முப்பத்தாறும், தாத்துவிகங்கள் அறுபதும் ஆகிய தொண்ணூற்றாறு. இவ்வனைத்தையும் தொண்ணூற்றாறு தத்துவம் என்று கூறும் வழக்குண்டு.

**கருவை ஒழிந்தவர் - 454 :** திருவடி ஞானம் கைவரப்பெற்ற ஞானியர் சிவனடியார்.

**கல்லால் நிழற் புண்ணியன் - 2087 :** கல்லால மர நிழல் அமர்ந்து அறமுதல் நாற்பொருள் விளக்கும் தென்முகக் கடவுள் - தட்சிணாமூர்த்தி.

**கல்லொளி - 937 :** மாணிக்கக் கற்போலும் சிவம்.

**கல்லொளி போலக் கலத்தல் - 383 :** மணியும் ஒளியும் போலச் சத்தியும் சிவமும் கலந்து நிற்கும் நிலை.

**கலசம் பதினெட்டு - 478 :** பக்க எலும்பு பதினெட்டு. தூலபூதம் ஐந்து, புலனைந்து, நுண்ணுடல் தத்துவம் எட்டு ஆகிய பதினெட்டுமாம்.

**கலவு செலவு - 2302 :** ஆன்மா கருவிகளோடு கூடுதலும், அவற்றினின்றும் பிரிதலும்.

**கலாசுத்தி - 1845 :** நிர்வாண தீட்சையால் அடையும் சுத்தி.

**கலாதியாம் நாலொன்று - 2450 :** கலை, வித்தை, இராகம், புருடன், மாயை ஆகிய ஐந்து.

**கலாந்தம் - 2370 :** ஆறந்தங்களில் ஒன்று. நிவிருத்தியாதி ஐந்து கலைகளையுணர்ந்து இறுதியிலுள்ள சாந்தியாதீதை கலைநிலை யெய்தல்.

**கலை - 1732 :** பஞ்சகலை. நிவிருத்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை என்னும் ஐந்து கலைகள்.

1219 - அக்கரம் (எழுத்து)

**கலை இடை நான்கு - 1990 :** சூரியன், சந்திரன், அக்கினி, மத்தியகலையெனும் சுழுமுனை ஆகிய நான்கு கலைகள்: சூரிய சந்திர அக்கினியோடு தாரகையாம் ஆன்ம ஒளியும் கலந்த நான்கு கலையெனவும் கூறப்படும்.

**கலை ஐம்பத்தொருவர் - 1219 :** எழுத்துக்கள் ஐம்பத்தொன்று.
கலை - அக்கரம் (எழுத்து)

**கலை ஒரு மூன்று - 3012 :** இடை, பிங்கலை, சுழுமுனை ஆகிய மூன்று கலைகள். ஆகம நெறியில் இறைவனை அடைவதற்கு வழிகளாகக் கூறப்படும் தந்திர கலை, மந்திர கலை, உபதேசகலை ஆகிய மூன்று கலைகள் எனவும்படும்.

**கலைஞானம் - 548 :** நூலறிவு.

**கலைநிலை - 712 :** சந்திர சூரிய அக்கினிக் கலைகள் உடம்பில் நிற்கும் நிலை.

**கலை பதினாறு - 713 :** சந்திரனுடைய கலைகள் பதினாறு.

**கவசம் - 550.:** மந்திரத்தால் பாதுகாப்பு அமைத்தல்.

**கவறு ஐந்து - 2866 :** சூதாடு கருவி ஐந்து. பஞ்சேந்திரியங்கள். (உருவகம்)

**கழல் - 285 :** கழல் எனும் சிலம்பணி அணிந்த திருவடி. சிவபெருமான் மறைகளைச் சிலம்பாக அணிந்துள்ளார் என்று கூறப்படுகின்றது.

**கள்ளச்செய் - 2871 :** சிவம்.

**கள்ளர் - 2900 :** ஐம்புலமாகிய திருடர்.

**களிம்பு - 113 :** செம்பினில் இயல்பாக அமைந்து, பசுமை நிறத்தில் காணப்படும் மாசு (Verdigris). இங்கு உயிர்களை அநாதியே பற்றி நிற்கும் மாசு களிம்பெனப்பட்டது. அது ஆணவம் கன்மம் மாயை என்னும் மூவகைப்படும். களிம்பு நீங்கினால் செம்பு பொன்னாகும். உயிர்க்களிம்பாகிய மலம் நீங்கினால் உயிராகிய சீவன் சிவனாகும்.

**கற்பசு - 308 :** இறைவன். கல்லிற் செய்த பசு தோற்றத்தால் பசுவினைப் போன்றதாயினும், பாற்பயன் தராது. இறைவன் தன்னை விலகியோற்குக் கற்பசு போல்பவனாவான்.

**கற்பம் - 2629 :** உடம்பினை அழியாது காக்கும் மருந்து.

**கற்பனை உதறிய பாழ் - 2497 :** முப்பாழையுங் கடந்து, அவையனைத்தும் காரணம் பற்றிய கற்பனை என்று உதறியபின் அதற்கு மேல் விளங்கும் அளவிட்டுஅறிய ஒண்ணாதநிலை.

**2948 :** மாயா கற்பனையை இயல்பாக விட்டுள்ள சூனியாதார சிவம்.

**கற்பாந்தநிலை - 423 :** ஒரு கற்ப காலத்தின் முடிவில் உலகம் அழிந்து நிற்கும் நிலை.

**கற்பாய கற்பங்கள் - 2047 :** உலக வாழ்வு பற்றிய எண்ணங்கள்: வீண் நினைப்பான எண்ணங்கள் - மனோராஜ்யம்.

**கற்ற பசுக்கள் - 2015 :** வேதாகமம், மிருதி, புராணம் முதலிய உலகியல் நூல்கள் பலவும் கற்றவர் (உருவகம்). பாசஞானமிக்கவர்கள்.

**கன்மம் - 2192 :** வினை. நெல்லின் முளையினைப் போன்றது.

**கன்னி - 2152 :** பிருதுவி (மண்). சப்த, பரிச,ரூப,ரச, கந்தம் ஆகிய ஐந்துடையது.

**கன்னிகள் எட்டுடன் ஒன்று - 1143 :** நவசக்திகள். அவை : வாமை, சேட்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, மனோன்மணி.

**கன்னித்துறை - 1519 :** 1) குமரி நதித்துறை, 2) தேவியின் நெறி.

**கனல் - 246 :** மூலாதாரத்திலுள்ள தீ.

**கனவா நனவு - 2187 :** சாக்கிரத்தில் சொப்பனம்.

**கனவு - 2813 :** சொப்பனம். ஐம்பொறிகள் நீங்கிய வழிப் பொருள்களை மனத்தொடர்பால் கனவின்கண் கண்டு ஆனந்தமெய்தல்.

**கனிந்தவர் - 266 :** உயிர்களிடத்துக் கருணைமிக்கவர்.

**காட்சி - 316 :** திருவடி ஞானம்.

**காடு அரைக்காதம் - 2912 :** அர்த்தமாத்திரைப் பிரணவம்.

**காணாத கண் கேளாத கேள்வி - 1610 :** காணாத கண், கேளாத கேள்வி என்பன தத்தம் உணர்வு நிகழ்தற்குரிய வாயிலாக இருந்தும், உலகப் பொருள்களிற் பற்றுதலின்றிக் ' காணுங் கரணங்களெல்லாம் பேரின்ப மெனப்பேணும்' நிலையில் உயிர் சிவானந்தத்து அழுந்தித் திளைக்குமாறு, தத்தம் செயல் மடங்கிய பொறிகளின் நிலை.

**காதல் - 1633 :** பக்தி வழி.

**காதல் வழி - 712 :** பக்தியாகிய நெறி.

**காமத்தோர் - 314 :** இன்ப நூலுடையார். காமிகள்.

**காமன் - 346 :** மாலோன் மகனாகிய மன்மதன்.

**காமனை எரித்தமை - 346 :** சிவபெருமானிடம் காம உணர்வை எழுப்புவதற்காகத் தேவர்கள் ஏவலால் சென்ற காமன், யோகத்திருந்த சிவன் மீது தன் மலர்க்கணை ஐந்தையும் ஏவினான். அதனால் சிறிதே கண் விழித்துக்கண்ட சிவபெருமானுடைய கண்ணெரியால் மன்மதன் எரிந்து சாம்பராயினான் என்பது புராண வரலாறு. இச்சொல் கொறுக்கை என்னுமிடத்தில் நடைபெற்றதாகக் கூறப்பட்டுள்ளது.

**காமாதி எட்டு - 2838 :** காமம், குரோதம், மோகம், உலோபம், மதம், மாற்சரியம், மண்ணாசை, பொன்னாசை ஆகிய எட்டு.

**காமாரி - 2149 :** மன்மதனையெரித்த சிவபெருமான்.

**காமிகம் - 63 :** இறைவனருளிய நவ ஆகமங்களில் ஒன்று. இதனைப் பிரணவர், திரிகலர், ஹரர் ஆகியோர் முறையே கேட்டனர்.

**காமியம் -460 :** இன்பநுகர்ச்சிக்குரிய எண்ணம். மூலகன்மத்தின் தொடர்பாய் நிகழும் இருவினைகள். மூலகன்மமாவது ஆன்மாவின் இச்சா சத்தியின் காரியமாகிய விருப்பு வெறுப்புக்கள்.

2229 : விருப்பின் எய்தும் பயன்.

**காமிய மாந் - 2489 :** கன்மம், மாயை, ஆணவம் ஆகிய மூன்று மலங்கள்.

**காமிய லோகம் - 672 :** போக உலகம்.

**காயக்கணக்கு - 2479 :** சரீரம் எடுத்தலாகிய பிறப்பின் எல்லை.

**காயக்குழப்பன் - 2071 :** உடலை உடம்போடு கூட்டுவிப் பவனாகிய இறைவன்.

**காயக்குழலி - 825 :** (காய் - அக - குழலி) மனத்தை வெதுப்புகின்ற மங்கை.

**காயத்திரி - 226 :** நான்கடிகட்குமாக 24 உயிரெழுத்துக்கள் அமையுமாறு செய்யப்பெற்ற சந்தஞ்சான்ற ஒரு வடமொழி யாப்பு விசேடம். அவ்வகையிலமைந்த வைதிக மந்திர சுலோகங்களும் காயத்திரி எனப்படும். அந்தணர்கள் ஞானஒளி விரும்பிச் சூரியனை நாளும் வழிபட்டோதும் காயத்திரி மந்திரம் சூரிய காயத்திரியாகும். பிற தெய்வங்கட்கும் காயத்திரி மந்திரம் உண்டு.

**காயத்திலக்கரம் - 955 :** பரமாகாயத்தில் அட்சர வடிவில் தோன்றிய பிரணவம்.

**காயப்பரப்பு - 1787 :** சகல நிலையில் உச்சி முதல் உள்ளங்கால் வரையுள்ள உணர்ச்சி நரம்புகள் அனைத்தும் உணர்ந்து உயரும் நிலையில் மூலாதாரம் முதல் பிரமரந்திரம் வரையுள்ள ஆறாதாரநிலை. உடற்பரப்பு முழுதும்.

**காயம் - 17 :** உடம்பு. காயம் இரண்டு என்பது பரசரீரம் அபர சரீரங்களைக் குறிக்கும். அருவுடம்பு (வெங்காயம்) உருவுடம்பு (பெருங்காயம்) என்றும் கூறப்படும்.

388 : ஆகாயம்.

2135 & 2136 : உடம்பு. ஞானிக்குச்சி வதனுவும், யோகிக்கு விந்துவும் நாதமும், மோனிக்கு முப்பாழ் கெட்ட முத்தியும் உடம்புகளாம்.
விஞ்ஞானகலர்க்கு ஆணவமும், பிரளயாகலர்க்கு மாயையும், சகலர்க்குக் கன்மமும் உடலாகும்.
உண்மையான சிவஞானிக்குச் சிவம் உடம்பாக அமையும்.

**காயம் ஒரைந்து - 2655 :** காரணம், பஞ்ச கஞ்சுகம், பரம், புரியட்டகம், தூலம் என்னும் ஐந்துடம்புகள். அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என்றும் கூறப்படும்.

**காய மின்னாடு - 2982 :** மின்னலை ஒத்த ஒளியுடைய உடம்பாகிய தேகம் (உருவகம்).

**காய முப்பாழ் - 2135 :** ஆன்மாவினைப் பாழ்செய்யும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்கள்.

**காயாதி பூதம் - 643 :** ஆகாயம் முதலிய ஐந்து பூதங்கள். சரீர இந்திரிய அந்தக்கரண பிராணன் எனவும் கூறுவர்.

**கார்முகில் வண்ணன் - 322 :** கரிய மேகம் போலும் நிறத்தையுடைய திருமால்.

**காரணம் - 63 :** இறைவனருளிய நவ ஆகமங்களில் ஒன்று; காரணாகமம்.

இதனைக் கராணர், சர்வருத்திரர், பிரசாபதி ஆகியோர் முறையே கேட்டனர்.

**2675 :** காரணப்பிரணவம். திருவருட்சத்தி வீழ்ச்சிக்கு வாயிலாகும்.

**காரணன் - 391 :** அனைத்துயிர், அனைத்துடல் , அனைத்துலகு ஆகியவற்றிற்கெல்லாம் வினைமுதலாக விளங்கும் சிவபெருமான்.

**காரணி - 402 :** எல்லாவற்றிக்கும் வினைமுதற்காரணமாக விளங்குபவள்.

**காரணோபாதி ஏழு - 2387 :** சர்வஞ்ஞத்துவம், சர்வகாரணத்துவம், சர்வாந்திரியாமித்துவம், சர்வேசுவரத்துவம், சர்வசிருட்டி, சர்வதிதி, சர்வசங்காரம் என்னும் ஏழு - இவை ஈசுவரனுக்குரியன.

**காரிய காரண ஈசர் - 398 :** (காரிய ஈசர், காரண ஈசர்) அணு பட்சத்தார் காரிய ஈசர் எனவும், சம்புபட்சத்தார் காரண ஈசர் எனவும்படுவர்.

**காரிய காரண உபாதி - 2501 :** சிவஉபாதி, பர உபாதிகள். உபாதி என்பது பந்தம் அல்லது கட்டு ஆகும். சிவ உபாதி காரிய உபாதி எனவும், பரஉபாதி காரண உபாதி எனவும்படும்.

**காரியமான உபாதி ஏழு - 639 :** ஆன்மாக்களுக்கு ஆணவ மலமறைப்பால் உளவாகும் ஏழு உபாதிகள். அவை அநீசத்துவம்,

பாசத்தை வீசிட, அங்கு இலிங்கத் திருமேனியிடத்தே சிவபெருமான் வெளிப்பட்டுத் தோன்றிக் காலனை உதைத்து, மார்க்கண்டேயனைக் காப்பாற்றினான் என்பது புராண வரலாறு. இந்நிகழ்ச்சி திருக்கடவூரில் நடைபெற்றதாகக் கூறப்படுகின்றது. அகத்தவம் ஆற்ற வல்லார்க்கு அழிவில்லை என்பதனை இச்செய்தி உணர்த்துகின்றது.

**காலாங்கி - 69 :** திருமூலர்பால் திருமந்திர உபதேசம் கேட்ட எழுவருள் ஒருவர்.

**காலோத்தரம் - 63 :** இறைவனருளிய நவ ஆகமங்களில் ஒன்று.

**காற்றுப்பசுக்கள் - 2875 :** இடை பிங்கலைகளால் வேறுபட்டுள்ள பிராண வாயுக்கள்.

**காற்றைப்பிடிக்கும் கணக்கு - 571 :** காற்றினை உள்ளே கும்பகம் செய்யும்முறை.

**கான் - 385 :** நெருப்பு.

**கானக்களிறு கதறப்பிளந்த எங்கோன் - 21 :** தாருகாவனத்து இருடிகள் ஏவிய காட்டு யானையைக் கதறுமாறு பிளந்து, அதன் தோல் போர்த்தி விளங்கும் தலைவன் - சிவபெருமான்.

**கானங்கடந்த கடவுள் - 1545 :** மாயமனிதர்களாகிய காட்டினைக் கடந்து விளங்கும் இறைவன்.

**கானல் உவரி - 848 :** அமுரி.

**கிரணங்கள் ஏழு - 2702 :** கதிரவன் ஒளியிலுள்ள ஊதா, நீலம், பச்சை, சிவப்பு, மஞ்சள், பழுப்பு, இளநீலம் ஆகிய ஏழு வகை வண்ணக்கதிர்.

**கிரியாசத்தி - 1136 :** செயலாற்றல். கன்மத்திற்கிடாக ஆன்மாக்களுக்குத் தேகாதிகளை உண்டாக்கும் சிவத்தின் சத்தி.

**கிரியை - 1451 :** சைவ சமயங்கூறும் முத்தி நெறி நான்கனுள் இரண்டாவதாக அமைந்தது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன அந்நான்காகும். கிரியை நோன்பு எனப்படும். இதனைச் சற்புத்திர மார்க்கம் என்பர். மலர், தூபம், தீபம், திருமஞ்சனம், திருவமுது கொண்டு, இறைவனை ஆவாகனம் செய்து, அருச்சனை பண்ணி நித்தியாக்கினி காரியம் செய்து முடிப்பது. இதன் பயன் சிவசாமீபம் எனப்படும் பதமுத்தியாகும். இது கிரியையில் சரியை, கிரியையிற் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் என்று நால்வகைப்படுத்தி விளக்கப்படும்.

**கிளர்பயன் மூன்று - 2407 :** அறம், பொருள், இன்பமாகிய மூன்று. காமியத்தோடு செய்த சரியை, கிரியை யோகத்தால் அடைகின்ற சாலோக சாமீப சாரூபம் ஆகிய பயன்கள் மூன்று என்றும் கூறப்படும்.

**கிளி - 2891 :** தர்மம். (உருவகம்).

**கீதக்கண்ணாடி - 2986 :** ஓசையை உணரும் செவி.

**கீழாலவத்தை - 2142 :** சாக்கிரத்திலிருந்து கீழ்நோக்கித் துரியாதிதத்துக்குச் செல்லுதல்.

**கீழுள முப்பாழ் - 2825 :** ஆன்மதுரியத்தில் விளங்கும் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்றின் நிகழாமையாகிய முப்பாழ். (அபாவம்).

**கீழோர் பெரும்பொருள் - 3003 :** அடிக்கிழ் உறையும் அடியராயினார் கட்கு அவர்களைத்தாங்கும் பெரும்பொருளாக விளங்கும் சிவபெருமான்.

**குக்குட ஆசனம் - 561 :** கோழி இருக்கை. பாதங்கள் இரண்டையும் தொடையின் மேல் மாறி ஏற்றிக் கணைக்காலுக்கும் தொடைக்கும் இடையே இருகைகளையும் நுழைத்துத் தரையில் ஊன்றி, உடம்பை முழங்கை வரையில் முயன்று தூக்கி நிறுத்தல்.

**குட்டிப்பசுக்கள் ஏழும் ஐந்தும் - 2874 :** வித்தியா தத்துவங்கள் ஏழும் சிவதத்துவங்கள் ஐந்தும்.

**குடிகள் ஆறெண்மர் - 623 :** தெய்வங்கள். ஆதார தெய்வங்கள் ஆறு, மண்டல தெய்வங்கள் ஐந்து, சந்திரர் சூரியர்களும் சக்திகளும் ஆகியன. ஆறெட்டு என்பதனைப் பண்புத்தொகையாகக் கொண்டு ஆதாரச் சக்கரங்களிலுள்ள எழுத்துக்களை இடமாகக் கொண்டுள்ள நாற்பத்தெட்டுத் தெய்வங்கள் என்றும் கூறப்படும்.

**குண்டம் - 1362 :** ஓம குண்டம். அக்கினித்தானமான நாபித்தானம். ஓமாக்கினி வளர்க்க நிலத்திலே கிண்டப்பட்ட கிடங்கு.

**குண்டலக்காதன் - 818 :** குழையணிந்த காதினையுடைய சிவபெருமான்.

**குண்டலி - 580 :** மூலாதாரத்திலுள்ள பாம்பின் வடிவமைந்த ஒரு சக்தி.

**குண்டாலம் - 3025 :** குண்டாக - உருண்டையாக விளங்கும் ஆலங்காய் (பூரணானந்தம்).

**குணம் பயில் மோகம் - 2921 :** சத்துவ இராசத தாமத குணங்களாகிய முக்குணம் பொருந்திய மாயை.

**குண விளக்கு - 2018 :** ஆனந்தப் பிரகாசம். அறிவொளி. ஆனந்தமயமான ஞானக்கூத்தன். சிவம்.

**குதஞ்செய்யும் அங்கி - 462 :** குதத்தானத்திலிருந்து வெளிப்படும் மூலாதாரத்தீ.

**குதிகொள்ளும் கூத்தன் - 542 :** நடமாடும் சிவபெருமான்.

**குதிரை - 3025 :** (மா). மாங்கனி - சிவானுபவம் (உருவகம்).

**குதிரை இரண்டு - 565 :** இடைகலை பிங்கலை எனும் இரண்டு குதிரைகள் (உருவகம்). பிராணன் அபானன் என்றும் கூறுவர்.

**கும்பகம் - 568 :** அறுபத்து நான்கு மாத்திரை அளவு இழுத்த காற்றை உள்ளே நிறுத்தல்.

**1126 :** ஒடுக்கம்.

**கும்பிடு - 2656 :** ஐக்கியம். சிவனோடைக்கியம்.

**குமாரர்கள் ஐவர் - 1191 :** சூட்சும பூதங்கள் ஐந்து. சதாசிவன், மகேசன், உருத்திரன், விட்டுணு, பிரமன் ஆகிய ஐவர் எனவும் கூறப்படும்.

**குரவன் - 336 :** தலைவனாகிய சிவகுரு.

**குராசத்தி - 1169 :** (குரு ஆசத்தி) குருவாக நின்ற சத்தி.

**குரானந்த ரேகை - 2750 :** குருவினால் அருளப்பெற்ற ஆனந்த நெறி.

**குரு - 139 :** அறியாமையை அகற்றும் ஞானாசிரியன்.

**குருநந்தி - 2937 :** ஞானகுருவாகிய சிவன்.

**குருநெறி - 54 :** குருவால் உணர்த்தப்பெறும் சன்மார்க்கம்.

**1478 :** குரு பரம்பரையாக மேற்கொள்ளப்பெறுகின்ற மார்க்கம்.

**குருபதம் - 232 :** குருவின் திருவடி.

**2657 :** மகத்தாகிய ஐக்கிய நிலை.

**குருபரன் - 119 :** மேலான குருநாதன்.

**குருபூசை - 197 :** குருநாதனாக விளங்கும் சிவபெருமானுக்குப்பூசை.

**1847 :** குருவழிபாடு. ஒளிவடிவில் எங்கும் விளங்கும் சிவத்தை வழிபடுவது.

**குருமட தரிசனம் - 2649 :** ஒளி விளங்கும் இடத்தினைக் காண்டல்.

**குவிமந்திரம் - 359 :** புலன்களைக் குவித்து, உயர்த்துவதற் கேதுவான மந்திரம். மனம் குவிவதற்கு ஏதுவாகிய அசபை மந்திரம்.

**குழல்வழி - 1985 :** சுழுமுனை மார்க்கம்.

**குளி அறிவாளர் - 510 :** பிரபஞ்சத்தில் அழுந்திய அறிவுடையார். காமநெறி நிற்பார் என்றும் கூறுவர்.

**குறி - 2353 :** 1) குறித்துணரும் உயிர், (2) குறித்துணரப்படும் சிவம். 3) அடையாளம். இது சிவன், இது சிவம் என்று அடையாளம் காணும்நிலை.

**குறிகள் பதினாறு - 1704 :** கழுத்தின் அடிக்கண் பதினாறிதழ்த் தாமரை வடிவில் அமையும் விசுத்தி.

**குறியாததொன்று - 306 :** சுட்டுணர்வால் அறியமுடியாத ஒன்றாய் விளங்கும் சிவபெருமான்.

**கூகை - 2891 :** (கோட்டான்) - அஞ்ஞானம் (உருவகம்).

**கூகை குருந்தமது ஏறல் - 2921 :** அஞ்ஞானமான சீவன் குருமூர்த்தியை அடைதல்.

**கூடமுக்கூடம் - 1020 :** மூலாதாரத்திலுள்ள மூன்று கோடுகளின் இணைப்பாகிய திரிகோண சக்கரம்.

**கூடவல்லார் - 543 :** இறைவனொடு இரண்டறக்கூடி நிற்கும் ஞானிகள். ஞானநெறியாளர்.

**கூத்தன் - 167 :** வினைப்பயனை ஊட்டிக்கொண்டிருந்த உயிராகிய கூத்தாடி.

**2723 :** கூத்தாடுபவன் (சிவன்). அவன் ஆடுங்கூத்து சிவானந்தக்கூத்து, சுந்தரக்கூத்து, பொற்பதிக்கூத்து பொற்றில்லைக்கூத்து, அற்புதக்கூத்து என்று ஐவகைப்படும்.

அவற்றால் அவன் சிவானந்தக்கூத்தன், சுந்தரக் கூத்தன், பொற்பதிக்கூத்தன், பொற்றில்லைக்கூத்தன், அற்புதக் கூத்தன் என்று அழைக்கப் படுவான்.

**கூத்தன் எழுத்து - 935 :** பஞ்சாட்சரம். திருவைந்தெழுத்து. அதில் முதல் எழுத்து சிகாரம்.

**கூத்தன் எழுத்தைந்து - 949 :** திருவைந்தெழுத்து. திருவைந் தெழுத்துக்கள் சிவபெருமானுடைய திருமேனியாதலின் இவ்வாறு கூறப்பட்டது.

**கூத்தன் குறி - 755 :** சிவபெருமானுடைய சொரூப தரிசனம். நாதன் என்றும் கூறுவர்.

**கூற்றன் - 172 :** உடலையும் உயிரையும் கூறுபடுத்தும் இயமன்.

**கூற்றுதைத்தான் - 2 :** தென் திசை வேந்தனாகிய கூற்றுவனை உதைத்தருளிய திருவடியினையுடைய சிவபெருமான். கூற்றுதைக்கும் குறிப்பு இறைவன் காலத்தை வென்று விளங்கும் நிலை சுட்டுவதாகும்.

**கூறா உபதேசம் - 2447 :** மோன உபதேசம்.

**கேசரி - 642** : சகல ஆகாயங்களும் அடங்கியிருக்கும் ஆக்கிஞையில் சித்தத்தையும் வாயுவையும் ஒடுங்கி இருக்கச்செய்யும் வல்லமையுடையது. ஒருவகை முத்திரை.

1893 : உள்நாக்கைத் தொடும்படி நாக்கு நுனியைத் திருப்பிக் கொண்டு செய்யும் யோகம்.
கேசரியாவது புருவ மத்தியில் தொடங்கி அகநோக்கில் சிரசின் உச்சியை நோக்கிப்போதல். அருளை அளிப்பது.

563 : சிங்காசனம். பாத நுனிகளைப் பூமியில் ஊன்றி, முழங்கால்களில் இருகைகளையும் நீட்டி, வாயைத்திறந்து கொண்டு கண்களை மூக்கு நுனியில் வைத்து நோக்கியிருத்தல்.

**கேசரி மின் - 1743 :** பராசக்தி.

**கேசரி யோகம் - 799 :** சிங்கத்தைப்போன்று மேனோக்கிப் பார்வையைச் செலுத்தியிருப்பது. இதன் பயனாகச் சாதகன் ஆகாயத்தில் இயங்கும் ஆற்றல் பெறுவான்.

**கேவல சகல சுத்தம் - 2227 :** ஆன்மா கருவிகளுடன் கூடும்போது கேவல சகல சுத்தம் என்னும் மூன்றுநிலையுட்படும். கேவலம் - அறிவு முதலியன பிண்டமாய்த் தொழிற்படுதலேயன்றி, பகுத்துத் தொழிற்படுவதற்கான கருவிகள் இல்லாத நிலை. சகலம் - கருவிகளோடு கூடியநிலை. சுத்தம் மலமாகிய அழுக்கு நீங்கியநிலை. இவை ஒவ்வொன்றும் ஐந்து வகையாய்க் காரியப்படும்.

**கேவல பாசம் - 1439 :** சகச மலமான ஆணவமலம்.

**கேவலம் - 425 :** சகல நிலையில் கருவிகளோடு கூடாதிருக்கும் யோகநிலை. ஆன்மா, அறிவு, செயல், குணம், குறி ஒன்றுமின்றித் தனியே ஆணவ மலத்தால் மறைப்புண்டு நிற்கும் நிலை.

**கேவலமாதியிற் பேதம் - 2249 :** கேவல கேவலம், கேவல சகலம், கேவல சுத்தம், சகல கேவலம், சகல சகலம், சகல சுத்தம், சுத்த கேவலம், சுத்த சகலம், சுத்த சுத்தம் என்னும் ஒன்பது வகையான அவத்தைப் பேதங்கள்.

**கேவலன் - 2227 :** திருவருட்டுணையால் தன்னை அறியும் அறிவுபெறாநிலையில் ஒருவன் கேவலன் எனப்படுவான்.

**கைக்கீழ் - 1974 :** மார்பு முதல் அக்குள் வரை வாயுவாகும். உடம்பில் பஞ்சபூதநிலை கூறுங்கால், கைக்கீழ் வாயுப்பகுதியாகும்.

**கைச்சதுரம் - 1145 :** பிரமரந்திரமாகிய சிரம்.

**கையது ஆறு - 1294 :** வயிரவக் கடவுளுக்குக் கரங்கள் ஆறுள. அவற்றில் கபாலம், சூலம், தமருகம், பாசம், சிரம், வாள் ஆகியன இடம்பெறும்.

**கையில் கரும் செய் காட்டு - 1521 :** சின்முத்திரையினால் யோகம் செய்வதற்காகக் காட்டியருளிய உபதேசம்.

**கைவளம் - 2977 :** கைப்பொருள் - சஞ்சிதவினை.

**கை வைத்தல் - 1778 :** ஹஸ்த திட்சை. குரு சிடனைக் கரத்தால் தீண்டித் தீட்சை செய்வது.

**கொடி நாயகி - 694 :** பராசத்தி.

**கொடுகொட்டி - 2733 :** எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடும் சிவநடனம்; சிவபெருமானுடைய பதினோராடல்களில் ஒன்று. திரிபுரம் எரித்தகாலைச் சிவபெருமான் ஆடிய நடனம்.

**கொல்லை முக்காதம் - 2912 :** அகார உகார மகாரமாகிய மூன்று மாத்திரையுடைய பிரணவம்.

**கொள்ளியறை - 611 :** சுடுகாடு.

**கொன்றை அணி சிவன் - 275 :** கொன்றை மலர் மாலையை அணிந்துள்ள சிவன். 'கண்ணி கார் நறுங்கொன்றை வண்ணமார்பில் தாரும் கொன்றை' என்பது சங்க இலக்கியம் (புறநானூறு - கடவுள் வாழ்த்து - 1, 2).

**கொன்றையினான் - 285 :** கொன்றை மலர் சூடிய சிவபெருமான்.

**கோசம் - 2664 :** உடம்பு - சட்டை. அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமயகோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமயகோசம் ஆகிய பஞ்சகோசங்கள்.

**கோடு - 2733 :** கபாலக்கூத்து. பிரமனுடைய சிரசினைக் கிள்ளிக் கையிலேந்தியாடிய சிவநடனம்.

**கோணாத போகம் - 1610 :** விருப்பு வெறுப்புக்களால் மனம் மாறுபடாது திருவருளில் ஒன்றி நுகரும் சிவானுபவமாகிய நுகர்ச்சி.

**கோணா மனம் - 588 :** பொறிவழிச் செல்லாமனம்.

**கோதண்டம் - 1223 :** சுழுமுனை.

**கோதுகுலம் - 408 :** சுத்தமாயையும், அசுத்தமாயையும். அசுத்தமாயா கூட்டங்களாகிய தனுகரண புவன போகங்கள்.

**கோம்புலன் - 1515 :** (கோப்புலன்) சிவஞானம்.

**கோமத்துள் அங்கி - 222 :** கோமம் எனக்கொண்டு உடலுள்ளுறுப்பில் தோன்றும் தீ என்றும் கோ, மத்து எனக்கொண்டு ஆன்மா சிவத்தை நோக்கிச் சிந்தனையைக் கடைதல் என்றும் கொள்ளப்படுகின்றது.

**கோமளவல்லி - 816 :** பசிய அழகிய கொடிபோல்பவள். அருளம்மை. குண்டலினி சத்தி எனவும்படும்.

**கோமுகம் - 563 :** கோமுகாசனம், பசுவின் முகம் போன்ற இருக்கை. கணுக்கால்களை இடுப்புச்சந்திற்சேர்க்கும் ஆசன வகை.

**கோயில் -1823 :** சிவனுறையும் கருவறை - ஆலயம்.

**கோயில் எருமை - 2925 :** ஆன்மாவிற்கிடமாகிய சித்தவிருத்தி (உருவகம்).

**கோல் - 295 :** கழி. நடுநாடியாகிய பிரமதண்டம்.

**கோவணன் - 2674 :** கடவுள் (சிவன்).

**கோனக்கன் - 1453 :** பதியாகிய சிவபெருமான்.

**சக்கரத்தண்ணல் - 397 :** சக்கரப்படையினைக் கரத்தில் கொண்ட திருமால்.

**சக்கரப்பேறு - 367 :** சிவபெருமானிடம் திருமால் சக்கரம் பெற்ற செயல். சக்கரம் பெற்ற திருமால் தக்கன் வேள்வியில், தன் கையிலுள்ள சக்கரத்தை வீரபத்திரர் மேல்விட அவர் அணிந்துள்ள வெண்டலை மாலையிலுள்ள தலையொன்று அதனைக்கௌவிக் கொள்ளப் பின் திருமால் சிவனை அருச்சித்து மீண்டும் அதனைப் பெற்றுக் கொண்டதனைக் கூறுவது.

**சக்கரம் - 369 :** திருமாலின் கரத்திலுள்ளதும், அவருடைய ஐம்படைகளில் ஒன்றும் ஆகிய ஆழிப்படை.

**சகமார்க்கம் - 1488 :** தோழனைப்போலப் பத்தி புரிவதாகிய யோக நெறி.

**சகராதி ஓர் நான்கு - 1307 :** (வடமொழி) 'ச' வர்க்கத்து நான்கெழுத்துக்கள். ஸ, க, ல, ஹ்ரீம் என்றும் கூறப்படும்.

**சகலம் - 2229 :** கேவலநிலையில் உள்ள ஆன்மா, மாயையில் பொருந்தி முப்பத்தாறு தத்துவங்களோடு கூடும். இந்நிலையில் சிறிது அறிவு விளக்கமுற்று விளங்கும். அதனால் காமியமாகிய வினைகளும் மாயேயமாகிய தனுகரண புவனங்களும் பொருந்தித் தொழிற்படும். இந்நிலையில் ஆன்மா கருவிகளினிடத்துப் பற்றுக் கொள்ளும். இது சகலம் எனப்படும்.

**சகலர் - 2230 :** முப்பத்தாறு தத்துவங்களுடனும் கலந்திருக்கும் நிலையில் விளங்குபவர்கள். ஆணவம் கன்மம் மாயையாகிய மூவகைப்பந்தங்களோடும் கூடியவர்.

**சகலன் - 2227 :** ஆன்மா கேவல நிலையினின்றும் நீங்கி, சுத்தன் ஆதற்பொருட்டு ஆதி சத்தி தனுகரண புவன போகங்களை மாயா காரியமாகப் படைத்தளிக்கின்றது. இவற்றுடன் கலந்துள்ள ஆன்மா சகலன் எனப்படும்.

**சகனத்தன் - 1806 :** மாயையால் திருமேனி கொண்ட சிவபெருமான்.

சகளம் - 2042 : சுத்தமாயா சொரூபம்: உருவம் பொதிந்த உடம்பு.

2396 : உருவம்.

சகளி - 1194 : உருவத்தைக் கொண்டவள்.

சங்கமலிங்கம் - 1755 : சங்கம சொரூபம். அசையும் பொருள்கள் அனைத்தும் சத்திசிவ கூட்டாகிய இலிங்க சொரூபமேயாகும். இது அடியார் என்றும் கூறப்படும்.

சங்கரன் - 103 : நன்மையைச் செய்பவனாகிய சிவபெருமான்.

சங்காரம் - 421 : அழிப்பு போக நுகர்ச்சி வரை ஆன்மாக்களைக் காத்து வந்த இறைவன், அவர்கள் இளைப்பாறுதற்பொருட்டுச் சங்காரம் செய்வது.

2733 : நாடோறும் அழித்தலைச் செய்வதற்கு ஆடும் சிவநடனம்.

சசிவன்னர் - 874 : சந்திரனைப்போன்று அமுதமயமான கிரணத்தையுடையவர்.

சட்கோணம் 1311 : இரு முக்கோணங்களால் அமைக்கப்பட்ட ஆறுகோணயந்திரம்.

சடங்கு - 224 : சாத்திரவிதி பற்றியும், வழக்கம் பற்றியும் மேற்கொள்ளும் செயல் (கிரியை).

சடாதரி - 1138 : ஆறு ஆதாரங்களையும் கொண்டு விளங்குபவள். சடையை உடையவள் என்றும் கூறப்படும்.

1191 : ஒளிக்கிரணங்களைத் திருமுடியிலுள்ளவள்.

சடை - 242 : துறவறத்தார்க்குரிய சடைமுடி.

சண்டிகை - 1050 : சண்டிகை எனப்பெயரிய அம்பிகை.

**சத்தம் - 125 :** நாதம். (ஓசை).

**சத்த முடிவு - 125 :** நாதாந்தம். ஓசை ஒடுங்கும் தூமாயை.

**சத்த முதலைந்து - 135 :** செவி முதலாகிய ஐம்பொறி வழி நிகழும் ஓசை, ஒளி, ஊறு, சுவை, நாற்றம் ஆகிய ஐம்புல உணர்வுகள். பொறி வாயில் ஐந்து என்பது திருக்குறள் (கடவுள் வாழ்த்து - 6).

**சத்தர் - 2731 :** முனிவர் எழுவர். அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், சமதக்கினி, பரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன் ஆகிய எழுவர்.

**சத்தன் - 333 :** சத்தியை உடையவனாகிய சிவன். 'பெண்ணுரு, ஒரு திறன் ஆகின்று, அவ்வுருத் தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும் என்பது சங்க இலக்கியம்.( புறநானூறு - கடவுள்வாழ்த்து. 8 - 9).

**சத்தாதி - 410 :** ஓசை, ஊறு, சுவை,ஒளி, நாற்றம் ஆகிய தன் மாத்திரைகள் (சப்த, பரிச, ரூப, ரச, கந்தம்).

**சத்தி - 62 :** சிவத்தினுடைய அருளாற்றல். அறிவு வடிவமானது. அருவ நிலையினது. அறிதல், விழைதல், இயற்றுதல் போல்வன நிகழ்த்துதற்குரிய வல்லமை (ஞானம், இச்சை, கிரியை).

**1923 :** ஒன்பது சத்திகள். அவை : வாமை, சேட்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, மனோன்மணி ஆகிய ஒன்பதுமாகும்.

**சத்திகள் ஏழு - 2738 :** ஞானேந்திரியங்களின் அடக்கமும், மனம், புத்தி அடக்கமுமாகிய ஏழு சத்திகள்.

**சத்தி ஐந்து - 2737 :** ஆதிசத்தி, பராசத்தி, இச்சாசத்தி, கிரியா சத்தி, ஞானசத்தி ஆகிய ஐந்து சத்திகள்.

**சத்தி சிவபாதம் - 1929 :** திருவருள் வடிவான சத்தியும், சிவமும் ஆன்மாவிடம் விளங்கித் தோன்றல்.

**சத்திநிபாதம் - 1514 :** திரோதானமாய் நின்று மறைப்பினைச் செய்து வந்த இறைவனுடைய சத்தி, மலபரிபாகம் அடைந்தநிலையில் அருட் சத்தியாகவே மாறி ஆன்மாவினிடத்துப் பதிதல். நிபாதம் என்பது வீழ்ச்சி. சத்தி நிபாதம் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்று நான்கு வகைப்படும்.

**சத்தி பரத்தியானம் - 598 :** சத்தி சிவத் தொடர்பான சகுணத்தியானம்.

**சத்திமான் - 1039 :** சகளரூப சிவன்.

**சத்திய ஞானானந்தம் - 319 :** உண்மை அறிவின்ப உணர்வுருவாம் திருவடிப்பேறு. சச்சிதானந்த நிலை.

**சத்தியம் - 228 :** மெய்ப்பொருள்.

**சத்தியாதி - 2827 :** சத்திய ஞான ஆனந்தம்.

**சத்தியாதி நான்கு - 2843 :** சத்தி, சிவன், பரம், சீவன் ஆகிய நான்கு.

**சத்தியார் - 730 :** சத்தியை உரிமையாக உடைய சிவபெருமான். சத்தி.

**சத்தி வித்தை - 1473 :** குண்டலினி சத்தியின் வலிகொண்டியற்றும் யோக வித்தை.

**சத்து - 1420 :** அழிவில்லாத மெய்ப்பொருளாகிய சிவன்: மாறுபடாத பரம்பொருள். உண்மையுள்ளது.

**சதசத்து - 1420 :** அசத்தினைச் சார்ந்து அசத்தாகவும், சத்தினைச் சார்ந்து அசத்தின் நீங்கிச் சத்தாயும் விளங்கும் ஆன்மா. உயிர்.

**சதாசிவ நாயகி - 684 :** சிவசத்தி.

**சதாசிவம் - 62 :** ஐந்து தொழிற்றலைவர்கட்கெல்லாம் முதல்வராய், ஆன்மாக்கட்கு அருள்புரியும் பொருட்டுப் பரசிவம் மேற்கொள்ளும் (மூர்த்தம்)வடிவம்.

**1713** : சிவபரம்பொருளின் அருவத் திருமேனிக்கும் உருவத் திருமேனிக்கும் இடைப்பட்டதான அருவுருவத் திருமேனி நிலை.

**1718** : கருவறையிலுள்ள இலிங்கம். இது சூட்சுமலிங்கம் எனப்படும்.

**சதாசிவற்கு ஒரே மலம் - 2183** : சதாசிவனுக்கு ஆணவ மலம் மட்டுமே உரியது.

**சதாநந்தி - 730** : எக்காலத்தும் ஆனந்தமயமாயுள்ள சத்தி.

**சதுமுகன் - 377** : நான்முகன். பிரம்மா.

**380** : கர்த்திரு சாதாக்கியத்திலுள்ள நான்கு முகங்களையுடைய சிவன்.

**சதோமுகம் - 524** : (சத்+ஓம்+முகம்) சத்தாகிய பிரணவ சொரூபி.

**சந்திரப்பூ - 601** : ஆக்ஞையிலுள்ள சந்திரன் போலும் வெண்ணிறமான தாமரைப்பூ. சந்திர மண்டலத்திலுள்ள நாதமயமாக விளங்கும் சத்தி என்றும் கூறுவர்.

**சந்திரன் சார்பு - 1958** : சந்திரமண்டலம் (இதயத்திற்கு மேலுள்ள பாகம்).

**சந்தை - 1201** : சந்தசு - மந்திரம். ஞானேந்திரியங்கள் கூடுமிடமான நாதத்தொனி என்றும் கூறுவர்.

**சந்நிதி - 2055** : திருமுன்பு.

**சம்பிரதாயம் - 1778** : குரு பரம்பரையாக வந்த மரபு.

**சமயத்தகுதி - 247** : சமயம் விதிக்கும் ஒழுக்கநெறி நிற்கும் நிலை.

**சமயத்துள் மயல் - 813** : சமய உண்மையை உணர்ந்து கொள்வதில் மயக்கநிலை.

**சமயத்தோர் - 319** : சத்தியை முழுமுதலாகக்கொண்ட சமயத்தினராய சாக்தேயர்கள். அவர் வாமத்தார் எனவும்படுவர்.

**சமய நிராகாரம் - 1437** : சமய நிந்தனை.

**சமயம் - 1508** : சமய தீக்கை. சிவாகமம் ஓதுவதற்காம் இன்றியமையாத தகுதி. தீக்கை சமய தீக்கை, விசேட தீக்கை, நிர்வாண தீக்கை, ஆசாரியபிடேகம் என்று நான்கு வகைப்படும்.

**சமய மல மன்னுமூடர் - 329** : மலத் தொடர்பான சமயப்பற்றுள்ள அறிவீனர். மதுவருந்தல் போன்றவற்றைச் சமயக்கோட்பாடாகக் கொண்டு அவற்றைப்பற்றி நிற்கும் அறிவிலிகள்.

**சமாதி - 336** : நிட்டை.

**550** : தன்னை மறந்திருத்தல்.

**628** : இயமம் முதலான எண்வகை யோக அங்கங்களிலும் பயிற்சி நிரம்பிய ஆன்மா தன்னை மறந்து சிவத்துடன் ஒன்றி உணரும் நிலை.
தியானிக்கப்படும் பொருளாகிய கடவுளிடத்தே மனத்தை ஒருவழிப்படுத்தி நன்குநிலை பெறுத்திச் செய்யும் தியானம்.

**சமாதி இயமாதியில் - 619** : சமாதியானது இயமம், நியமம் முதலிய யோக சாதனையால் உண்டாவது. (இயமாதியில் சமாதி).

**சமாதிக்கிரியை - 1910** : விதேகமுத்தியடைந்த சிவஞானியின் பூத உடம்பிற்குச் செய்யவேண்டிய சமாதி - அடக்கச் சடங்குகள்.

**சமையம் - 1450** : சமய திட்சை. பல்வகைச் சுத்திகள் உண்டாகித் தற்சுதந்திரம் ஒழிந்திடல்.

**சயம்பு - 275** : தானே தோன்றியது. தான் தோன்றியாகிய சிவபெருமான்.

*சர்வ சிருஷ்டி* - **381** : சர்வசங்கார காலத்து அனைத்தையும் தன்னகத்தே ஒடுக்கிய இறைவன், மீண்டும் அவ்வான்மாக்களின் மல கன்மங்களைப் பரிபாகம் செய்தற்பொருட்டு அவை மீண்டும் படைப்பிற் பொருந்துக என்று திருவுள்ளம் கொள்ளல்.

*சர்வ வியாபி* - **3026** : இறைவன் எல்லாவற்றிலும் நிறைந்து விளங்கும் தன்மை.

*சராசரம்* - **89** : இயங்கியற் பொருள்களும் நிலையியற் பொருள்களும் அடங்கிய உலகம்.

*சரியை* - **1443** : சைவ சமயங்கூறும் முத்தி நெறி நான்கனுள் முதற்கண் அமைந்தது. சரியை, கிரியை யோகம், ஞானம் என்னும் அவை நாற்பாதங்கள் எனப்படும். சரியைசிலம் எனப்படும். இதனைத் தாசமார்க்கம் என்பர். திருக்கோயில் அலகிடல், மெழுகிடல், மலர் பறித்துக் கொணர்தல், மாலை அமைத்தல், திருவிளக்கிடல், நந்தவனம் அமைத்தல், புகழ்ந்து பாடல், திருவேடங்கண்டால் பணிந்து போற்றல் போல்வன சரியை நெறிச் செயல்களாகும். இதன் பயன் சிவசாலோகமாகும். இது நுட்பம் கருதிச் சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என்று வகைப்படுத்தி விளக்கப்பெறும்.

*சரியை கிரியையினார்* - **1423** : சரியை, கிரியை என்னும் நெறிகளை மேற்கொண்டு ஒழுகுபவர்கள்.

*சரீர சித்தி* - **724** : உடம்பினை அழியாமல் காக்கும் நிலை.

*சலந்தரன்* - **342** : சலந்தராசுரன். சலந்தரன் பிரமனை வேண்டி வரம் பெற்றுப் பின் தேவர்களைத் துன்புறுத்தினான். இறுதியில் சிவபெருமானோடு போரிடக் கயிலை நோக்கிச் சென்ற போது சிவபெருமான் முதிய அந்தணராக வந்து சலந்திரனைச் சந்தித்துப் பூமியில் கால்பெருவிரலால் வட்டமாகக் கோடு கிழித்து அதனைப் பெயர்த்தெடுக்குமாறு செய்தார். அவ்வட்டக்கோடு சக்கரமாகி அவனுடைய உடலைக் கிழித்து அழித்தது. இது நடந்தவிடம் திருவிற்குடி என்பர். ஆன்மாக்களின் ஆணவம் அழிக்கப்படுமாறு காட்டுவது கருத்தாகும்.

**சலமயன் - 112 :** அப்பு(நீர்) மயமாக உள்ளவன். தண்ணியன் எனலுமாம்.

**சலவியன் - 182 :** சினமுடையவன். அழித்தற் கடவுளாகிய உருத்திரன்.

**சற்குரு - 2049 :** உத்தம ஞானகுரு. நித்தமாய் விளங்கும் ஞானகுரு.

**சற்குரு சன்மார்க்கம் - 2670 :** சிவனுக்குச் சற்குரு உபதேசத்தாலமையும் சன்மார்க்கநெறி.

**சற்பாத்திரம் - 897 :** சற்பொருள்.

**சற்புத்திர மார்க்கம் - 1495 :** மகன் தந்தை உறவு போன்ற அன்பினால் வழிபடுமுறை.

**சன்மார்க்கம் - 101 :** சத்து என்னும் உண்மையை உணர்த்தும் ஞானநெறி.

**1477 :** மெய்ந்நெறி, தெய்வச்சிவநெறி, ஞானநெறி. சிவபெருமான்பால் நிருவிகற்ப ஞானத்தால் செய்யும் வழிபாடு. இவ்வழிபாடு புறத்தொழில், அகத்தொழில் இரண்டுமின்றி அறிவுத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய சொருபத் திருமேனியிடத்து நிகழ்வது என்று விளக்குவர்.

**சாக்ராதீதத்துச் செல்லல் - 1853 :** சாக்கிர நிலையில் இருந்தே, பசு கரணங்கள் அனைத்தும் சிவகரணமாகப் பெறுதல்.

**சாக்ராதீதம் - 425 :** ஆன்மா எல்லாக் கருவிகளும் நீங்கிய நிலை.

**சாத்தவி - 1138 :** சத்துவ குண நாயகி.

**2771 :** சத்தி.

**சாத்திகம் - 2296 :** சத்துவ குணம்.

**சாதக முத்திரை - 1675 :** கையில் சிறுவிரல், அணிவிரல், சுட்டுவிரல் ஆகிய மூன்றையும் பிரித்து நிமிர்த்திச் சுட்டுவிரலை மட்டும் வளைத்துப் பெருவிரல் அடியில் சேர்ப்பது சாதக முத்திரையாகிய சின்முத்திரை. அவ்வாறே சுட்டுவிரலைப் பெருவிரல் நுனியோடு சேர்ப்பது போதக முத்திரையாகிய சின்முத்திரை.

**சாதகர் - 2059 :** சிடர்.

**சாதகன் - 716 :** பயிற்சி செய்பவன்.

**சாந்தாதீதன் - 2334 :** ஆனந்தாதீதமான ஆன்மா. சிவன் சாந்தியாதீத கலையில் சிவத்துடன் பொருந்தினால், காரண காரியமாகிய சுத்தா சுத்த மாயா தத்துவங்களாகிய முப்பத்தாறையும் நீங்கி அழிவற்ற ஆனந்தாதீத நிலையுற்றவனாவான்.

அலையற்ற ஆழ்கடல் போன்ற ஆனந்தாதீதத்தில் அமைவுற்று விளங்கல் சாந்தமாகும். சாந்தாதீதன் என்பது அத்தகைய ஆனந்தத்தில் கடந்த நிலையிற் கடந்து விளங்கும் சிவனைக்குறிக்கும்.

**சாந்திகள் ஏழு - 2738 :** இந்திரியங்கள் ஐந்தும், மனமும் புத்தியும் ஆகிய ஏழின் அடக்கம்.

**சாம்பவி - 642 :** சம்பு தொடர்பு ஆதற்குரிய முத்திரை. அநாகத சக்கரத்திலிருக்கும் சிவத்தினிடம் சித்தத்தையும் வாயுவையும் ஒடுக்கி அடங்கியிருக்கச் செய்யும் பெருமையுடையது.

**1297:** சிவசத்தி. (சாம்பவன் = சிவன், சாம்பவி = சிவசத்தி)

**1893 :** கண்பார்வையை நாசித் துளைகளின் பக்கமாய், மார்பகம் வரை பார்த்துப் பழகுதல். ஞானத்தை நல்குவது. சுகம் அளிப்பது.

**2771 :** பார்வதி, சித்ரூபிணி.

**சாம்பவி மண்டலச் சக்கரம் - 1297 :** சிவசத்தியினை அமைத்துக் காட்டும் சக்கரம். சிவலிங்கத் திருமேனியில் பாணமாகிய சிவமும், பீடமாகிய சத்தியும் விளங்குதலின் அவ்விரண்டுங் கூடிய சிவலிங்கத் திருமேனி நிறைந்துள்ள சக்கரம்.

**சாமீபம் - 1507 :** பர அபர முத்தி உலகத்தில் பணியாளர் போல அகலநில்லாது, மைந்தர்போலப் புவனபதியை அருகணைந்து நிற்கும் உரிமை பெற்றிருத்தல். இது கிரியை நெறியார் எய்தும் பதமாகும்.

உயிரைப் பிணித்துள்ள பாசம் உயிரறிவை மறைத்தலாகிய தன்மையிழந்து அருள்வழி விலகி நிற்றல்.

**சாயுச்சியம் - 1512 :** சிவனோடு இரண்டறக் கலக்கும் உயர்பேறு. ஞானநெறியினார் எய்தும் பரமுத்தி. பாச ஞானமாகிய நூலறிவும், பசு ஞானமாகிய ஆன்மபோதமும் கரைந்தொழியப் பதியாகிய பரம்பொருளுடன் இரண்டறக்கலந்து ஒன்றாதல் சாயுச்சியமாகும்.

**சார்ந்தவர் - 2347 :** சிவத்தை அடைந்தவர். இவர்கள், சாரணர், சித்தர், சமாதியர், சாத்தியர், ஆனந்தர் என்று அழைக்கப்படுவர்.

**சாரூபம் - 1510 :** முத்தி உலகங்களில் புவனபதிகளை அருகணைந்து நிற்றலோடமையாது, அவர்களோடு ஒத்த உருவம் பெயர் முதலியவற்றையுடையராய்த் தோழர்போல் நெருங்கி அளவளாவும் உரிமை பெற்றிருத்தல். இது யோக நெறியாளர் எய்தும் பதமாகும்.

பசுகரணங்களாகிய பாசப்பகுதி பதிகரணங்களாக மாறுதல்.

**சாலோகம் - 1507 :** சிவலோகத்தில் உடனுறையும் பதம். சரியை நெறியினார் அடையும் பத முத்தி.

சடமாகிய பாசம் ஆன்மாவின் அறிவெல்லைக்குள் அடங்கி நிற்க, இறைவனை வழிபட்டு மகிழும் நிலை.

**சாவித்திரி - 226 :** உமையம்மை, சரசுவதி ஆகியோரைக் குறிக்கும். இருக்கு வேதத்தின் ஒரு பகுதி இப்பெயர் பெற்று விளங்குகின்றது.

**சிகரம் - 1860 :** கருவறையின் மேலமையும் விமானம். திருக்கோயிலைக் குறித்தது.

**சிகை - 230 :** 1) உச்சிக்குடுமி. (சிகை = சிறுமயிர்த்தொகுதி).
2) மறைமுடிவு (ஞானம்); திருவடி ஞானம்.

242 : இல்லறத்தார்க்குரிய குடுமி

**சிங்கங்கள் மூன்று - 2214 :** சிந்தையில் விளங்கும் காமம், வெகுளி, மயக்கங்கள் ஆகிய மூன்று சிங்கங்கள். (உருவகம்).

**சிங்கம் - 2026 :** ஐம்பொறிகள் (உருவகம்).

**சித்தசன் - 83 :** மனத்தில் தோன்றுபவனாகிய மன்மதன்.

**சித்த சித்தன்றிப் பெருநெறியாய பிரான் - 54 :** அறிவிக்க அறியும் சித்தும், அறிவித்தாலும் அறிதலில்லாத அசித்தும் அன்றி இயல்பாகவே விளங்கும் பேரறிவினையுடையவராய், எல்லா நெறிகளும் வந்து இயைதற்கரிய பெரிய நெறியாய் விளங்கும் சிவபெருமான்.

**சித்தம் - 84 :** உள்ளம்.

**சித்தம் சிவமாவது - 1582 :** பசுகரணங்கள் அனைத்தும் பதிகரணங்களாதல்.

**சித்தயோகம் - 1487 :** சித்தம் சிவத்தோடு ஐக்கியப்படுதல்.

**சித்தர் - 1446 :** சிவஞானிகள். சித்திகள் கைவரப்பெற்றோர்.

**சித்தர்கள் - 284 :** யோக ஆற்றலால் அட்டமாசித்திகளைப் பெற்றவர்கள். இவர்கள் சிவயோக சித்தி கைவரப்பெற்ற சிவசித்தரல்லர்.

**சித்தன் - 1475 :** அறிவின் எல்லை கண்டவன்.

**சித்தாந்தக்கேள்வி - 557 :** வேதாகமங்களின் முடிந்த பொருளை விசாரித்தல்.

**சித்தாந்த சித்தி - 1437 :** சைவ சித்தாந்தத்தால் அடையலாகும் பெரும்பேறு.

2545 : திருவடிப்பேறு. செம்பொருளான சிவமாதல்.

*சித்தாந்தம் - 2370 :* ஆறந்தங்களில் ஒன்று; சைவாகமங்களின் முடிந்த முடிவு.

*சித்தாந்தம் ஆறு - 1449 :* பைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்னும் ஆறு.

*சித்தி - 235 :* ஆன்ம சாதனை.

*சித்திகள் எட்டு - 2737 :* அணிமா முதலான அட்டசித்திகள். அவை அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகிய எட்டுச் சித்திகள்.

*சித்து - 54 :* அறிவுடையது. அறிவுடைப்பொருள். ஆன்மா.

135 : அறிவுமயமான சிவன்.

232 : சுட்டறிவோடும் சிற்றறிவோடும் கூடி அறியும் அறிவுநிலை.

1420 : அறிவு.

*சிதம்பரம் - 886 :* சித் +அம்பரம் - அறிவு விளங்கும் ஆகாயம்.

2722 : ஞானாகாசம்.

*சிந்தியம் - 63 :* இறைவன் அருளிய நவ ஆகமங்களில் ஒன்று. இதனைச் சுதிப்தர், கோபதி, அம்பிகை ஆகியோர் கேட்டனர்.

*சிந்துரப்பரிபுரை - 1046 :* அனைத்துலகையும் காக்கும் செந்நிற ஒளியுள்ளவள்.

*சிம்மாசனம் - 562 :* அரிமா இருக்கை. பாதநுனிகளைப் பூமியில் ஊன்றியிருந்து முழங்கால்களில் கைகளை நீட்டி வாயைத்திறந்து கொண்டு புருவ நடுவைப்பார்த்திருப்பது.

*சிரீயும் கிரீயும்* - 903 : ஸ்ரீயும் உற்ரீமும் சத்தியின் பீச எழுத்துக்கள்.

*சிலையார்பொது* - 589 : பலவித வாத்திய ஒலிகேட்கப்படும் பரமாகாயத் தானம்.

*சிவகதி* - 300 : செம்மையேயாய திருவடிப்பேறு. முத்தி.

1536 : சிவத்தை அடைவிக்கும் நெறி.

*சிவகாமி* - 2726 : சிவானந்த சத்தி.

*சிவகுரு* - 1573 : சிவநெறி போதிக்கும் குரு.

*சிவ சாதனம்* - 1427 : சைவ சமயத்தைப் பின்பற்றி யொழுகுபவர்கள் மேற்கொள்ளும் சின்னங்கள். உருத்திராக்கம் முதலியன.

*சிவசாயுச்சியம்* - 2392 : சிவனும் சிவனும் ஒன்றாகும் நிலை.

*சிவசித்தர்* - 124 : வெளியில் வெளி விரவுதல், அளியில் அளி அடங்குதல், ஒளியில் ஒளி ஒடுங்குதல் ஆகியவற்றை ஐயந்திரிபற உணர்ந்து இறைவன் திருவடிக்கீழ் மன்னி நிற்கும் மாண்பினர். சிதாகாசப்பெருவெளியில் ஒளிமயமாக ஒடுங்குவதனை ஐயமின்றி உணர்ந்தவர்கள் என்றும் கூறப்படும்.

*சிவ சொரூப தரிசனம்* - 2856 : சிவபெருமானுடைய இயல்பினை உணர்வது. சச்சிதானந்த நிலையை உணர்தல்.

*சிவஞானம்* - 318 : சிவானுபவமாகிய அனுபவ ஞானம்.

*சிவத்தியானம்* - 598 : நிட்களசிவத்தியானம். சிவத்தைச்சிந்தித்தல்.

*சிவதரிசனம்* - 2853 : சிவக்காட்சி. சிவனைச் சிந்தையில் காண்பது.

*சிவ நீர்* - 846 : அமுரி; சிவாம்பு. குடிநீர், சிவநீர், வானீர், ஆகாய கங்கை, அமுதநீர், உவரி, தேறல், மது, கள், மலைநீர் ஆகியனவெல்லாம் அமுரியைக் குறிக்கும் சொற்களாகும்.

**சிவபதம் எட்டு - 2737:** ஐம்பூதங்களும் சூரியன், சந்திரன், ஆன்மாக்கள் ஆகிய மூன்றும் கூடிய அட்டமூர்த்தியின் எட்டுநிலைகள்.

**சிவபரம் - 1587 :** சிவசாயுச்சியம்.

**சிவபாற்கரன் ஏழு - 2738 :** சிவசூரியன் எழுவர். பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசன், சதாசிவன், நாதம், சிவன் ஆகிய ஏழு. இதனை ஞானேந்திரியங்கள் ஐந்தும், மனமும் புத்தியுமாகிய ஏழு எனவும் கூறுவர்.

**சிவபூசை - 1444 :** சிவபெருமானுக்குச் செய்யும் பூசனை.

**சிவபேதம் ஐந்து - 2737 :** பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய ஐந்து நிலைகள்.

**சிவபோகம் - 129 :** சிவயோகமெனும் பேரின்ப நிலை. உயிர் சிவ யோகத்தாற் சிவத்துடன் கூடிய நிலையில் தன்னை மறந்து சிவனது பேரருளில் திளைத்து இன்புறுதலாகிய சிவசாயுச்சியநிலை.

**சிவபோதி - 79 :** திருவாவடுதுறையின் கண்ணுள்ள அரச மரம். சிவமாகிய அறிவு என்றுமாம்.

**சிவம் - 62 :** நன்மையாய் ஞானவடிவாய்ச் சுயம்பிரகாசமாய் விளங்கும் சிவபரம்பொருள். அருவ நிலை.

**சிவம் அகமாக்கும் - 1771 :** அகம் சிவமாக்கும். சீவனிடத்தில் சிவம் பிரகாசிக்கச் செய்யும்.

**சிவமங்கை - 79 :** உமாதேவி.

**சிவமங்கை தன் பங்கன் - 79 :** உமாதேவியை இடப் பாகத்தில் கொண்டுள்ள சிவபெருமான். 'உமையொருபாகம் உடையானை' என்பது திருமுறை (திருஞானசம்பந்தர். 1- 98 - 1 ).

**சிவ மந்திரம் - 732 :** பிரணவ மந்திரம் அல்லது அம்ச மந்திரம்.

*சிவமயம்* - **492 :** சிவரூபம். சிவநிறைவு.

*சிவமாதி ஐவர்* - **2793 :** சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், விட்டுணு, பிரமன் ஆகிய ஐவர்.

*சிவமுத்தன்* - **1475 :** சிவத்துவமடைந்த முத்தன்.

*சிவமுத்தி* - **2474 :** சிவானந்தமாகும். உடலுள்ள போதே சிவானந்தத்தில் திளைத்து உடலை மறந்து வாழ்ந்து சிவத்துடன் ஒன்றுதல்.

*சிவயோகம்* - **129 :** சிவனோடு பொருந்தியிருத்தல்.

*சிவயோக மாமுனி* - **67 :** இறைவனாகிய நந்தியெம்பெருமானிடம் உபதேசம் பெற்ற குருநாதர் எண்மருள் ஒருவர்.

*சிவலிங்கம்* - **1773 :** எல்லாமாய் விளங்கும் பரசிவத்தை ஒரு குறியின் இடமாக எழுந்தருளச்செய்து வணங்கும் முறையினைக் கூறும்பகுதி.

ஆன்மாக்களின் தியானம் பூசை முதலியவற்றின் பொருட்டுச் சிவபெருமான் கொண்ட அருவுருவத் திருமேனி.

*சிவலோக நகர்* - **125 :** சிவ மாநகர்.

*சிவலோக நகர்க்குப் புறம்* - **262:** சிவலோகத்திற்கு அயலதாகிய சுவர்க்கம் போன்ற பதமுத்தி நிலைகள்.

*சிவலோகம்* - **125 :** சிவனுலகு.

*சிவன்* - **5 :** செம்மையும் நன்மையுமாயவற்றை நல்கும் சிவபெருமான். சைவ சித்தாந்தம் உணர்த்தும் முழுமுதற் கடவுளாகிய சிவ பரம்பொருள்.

*சிவன் சத்தி சீவன் செருமலமாயை* - **2710 :** சிவன் (சிகாரம்), சத்தி (வகாரம்), சீவன் (யகாரம்), மலம் (நகாரம்), மாயை (மகாரம்), ஆகிய ஐந்தின் சொருபமாக விளங்கும் பஞ்சாக்கரம்.

**சிவனங்கி - 1173 :** சிவமாகிய தீ.

**சிவனடி - 24 :** சிவபெருமானுடைய ஞானமே வடிவான திருவடிகள்.

**சிவனவனாம் - 1527 :** ஆன்மா சிவமேயாகும். சிவமாதலாவது: 'ஆன்மா தன் பொருட்டன்மையழிந்து சிவம் ஒன்றாயே ஒழியாமலும், சிவத்தின் வேறாய்த் தான் தனித்து நில்லாமலும் , பாலொடு அளாவிய நீர் தன் உண்மை கெடாமல் பாலின் தன்மையதாய் அதனுடன் பிரிவறக்கலந்து ஒன்றாதல் போன்று, தன் உண்மை கெடாமல் சிவத்துடன் இரண்டறக்கலந்து ஒன்றாதல்'.

**சிவாகமம் - 74 :** சிவபெருமானால் அருளிச்செய்யப்பெற்ற ஆகமங்கள் இருபத்தெட்டு. சிறப்பான ஒன்பது ஆகமங்களை நவ ஆகமம் என்று திருமந்திரம் குறிப்பிடுகின்றது.

**சிவாதித்தன் - 2001 :** சிவ சூரியன்.

**சிவாயம் - 2186 :** பஞ்சாக்கர சொரூபம்.

**சிவாலயம் - 719 :** உடல் (சரீரம்) ; சிவனுக்கு ஆலயம்.

**சிவானந்தத்தேறல் - 324 :** சிவானந்தமாகிய கள் தெளிவு.

**சிவோகம் - 1431 :** சிவம் நான். சிவமே நான் என்னும் நிலை. சிவ+யோகம் எனப்பிரித்துச் சிவமாகப் பாவித்தல் என்றும், சிவம்+அகம் எனப்பிரித்துச் சிவநிறைவில் உறைதல் என்றும் விளக்கப்படும்.

**சிற்றம்பலம் - 886 :** சீவர்களின் அறிவு விளங்கும் சிதாகாயமாகிய சபை. சிற்சபை.

**சிறப்பொடு பூசனை - 1524 :** நைமித்திகத்தோடு கூடிய நித்தியம். நைமித்திகம் விசேட நாள்களில் அமையும் பூசை. நித்தியம் தினந்தோறும் அமையும் பூசை. 'சிறப்பொடு பூசனை செல்லாது' என்பது திருக்குறள் (வான்சிறப்பு - 8).

**சின்னக்கதிர் இரண்டு ஆட்டம் - 858 :** இடைகலை, பிங்கலைகளின் இயக்கம்.

**சிகண்டர் - 2231 :** கறைமிடறுடைய (நீலகண்டமுடைய) உருத்திரர். சிகண்ட பரமசிவன் எனப்படுவார். இவரை யோகநிலையில் வழிபட்டோரும் அவனது உருவத்தையும் பெயரையும் பெற்றுச் சிகண்டருத்திரர் எனப்படுவர். எனினும் அவர்கட்குப் பரமசிவன் என்னும் பெயர் எய்தாது.

**சீகத்தம் - 1663 :** (ஸ்ரீஹஸ்தம்) அழகிய திருக்கரம்.

**சீயென்றுதறிய கை - 2797 :** சிகரத்தின் நீட்டலாகிய சீ என்னும் கை; சிவபெருமான் உடுக்கை ஏந்திய வலக்கரம்.

**சீவ உபாதி ஏழு - 2501 :** காரண உபாதி, மாயா காரியமான ஏழு வித்தியா தத்துவம் என்றும், உடல், பொறி, மனம், சித்தம், புத்தி, அகங்காரம், பிராணவாயு ஆகிய ஏழு என்றும் கூறப்படும்.

**சீவபரசிவம் - 2677 :** ஓங்காரமாகிய பிரணவம். சீவன், பரம், சிவன் ஆகிய மூன்றிற்கும் வடிவமாகும்.

**சீவமுத்தி - 2474 :** சீவன் துரியாதீதத்தில் அடையும் முத்திநிலை. ஆன்மா பிறப்புக்குரிய காரணத்தை விட்டமையால் பிறக்கவேண்டிய காரியம் இன்றி நிற்பது. உலகின் தன்மையை விசாரணையால் அறிந்து வைராக்கியத்தால் பிரபஞ்சத்தை விட்டு நிற்றல்.

**சீவன் - 136 :** ஆன்மா - உயிர்.

**2011 :** ஆன்மா. புருடதத்துவம் ஒரு பசுவின் மயிர் அளவினதானால் அதில் இலட்சத்தில் ஒரு கூறு, சீவாணுவின் பரிமாணமாகும்.

**சுகமான சொல் 2058 :** இன்பமயமான பிரணவோபதேசம்: மாறாப்பேரின்ப நிலையை மன்னுவிக்கும் மறைமொழியாகிய திருவைந்தெழுத்து.

**சுகாதனம் - 563 :** சுகாசனம். யோகி தனக்கு எப்படியிருந்தால் சுகமுண்டாகிறதோ அப்படியிருத்தல்.

**சுகானந்த போதர் - 2862 :** பேரின்ப ஞானி.

**சுகோதயத்தான் - 2843 :** சுகத்தை - இன்பத்தை அளிக்கவல்லவன்.

**சுடர் ஐந்து - 881 :** சிவம், சத்தி, நாதம், விந்து, சீவன் ஆகிய ஐந்து.

**சுத்த உரை - 1573 :** சுத்தமாயா காரியமாகாத பரநாத வடிவான சிபஞ்சாக்கரம் . மாயா காரியமன்று. சிவமேயானது. மலமாயா கன்மங்களைக் கழுவும் தூயஞான நன்னீராகிய உபதேசமொழி.

**சுத்தகேவலம் - 2237 :** ஆன்மா திருவருளில் தோய்ந்து, இன்ப நுகர்வுமின்றிக் கிடக்கும் நிலை.

**சுத்தச்சிவம் - 2969 :** நிர்க்குண சிவம்.

**சுத்தசங்காரம் - 425 :** ஆன்மா கருவிகளுடன் கூடித்தொழிலுறாது, அறியாமையுடன் மட்டும் ஒட்டியிருக்கும் தொழிலற்ற ஒடுக்கநிலை.

> **428 :** தொழிலற்ற கேவலமாய் மனம் முதலிய அந்தக் கரணங்களுக்கு அப்பாற்பட்டதாய்ச் சிவத்திடம் தோயாமல் நின்மலமாய் நிற்கும் நிலை.

**சுத்த சிவம் - 1768 :** எல்லாவற்றையும் தன்னகத்தே ஒடுக்கித் தானேயாய் நிற்கும் சிவம்.

**சுத்த சைவம் - 1419 :** திருமூலர் பாகுபாடு செய்த சைவ சமய வகைகள் நான்கினுள் ஒன்று. திருமூலரின் இப்பிரிவுகளைப் பின்வந்த சித்தாந்த சாத்திரங்கள் பின்பற்றவில்லை. இப்பிரிவு திருமூலர் கருத்திற்கு ஏற்றதன்று என்று கருதுவாருமுளர்.

சடங்குகளின் அளவில் நில்லாது, சம்பிரதாயங்களைக் கடந்து தலைவனையும் தடையையும் தன்னையும் அறிந்து, தடையின் நீங்கித் தலைவன் திருவடிச் சார்பு பெற்று வாழ்வது, சுத்த சைவம் என்று கூறப்படும்.

**சுத்த சைவர் - 1420 :** சுத்த சமய நெறியைப் பின்பற்றியொழுகும் சைவ மக்கள்.

**சுத்தத்துரியம் - 121 :** உபதேசத்தில் உறைந்து நிற்கும் ஆன்மா பாச நீக்கமுற்று விளங்கும் நிலை. இது நின்மலதுரியம் எனவும்படும்.

**சுத்தநனவாதி பருவம் - 2187 :** சகல நிலையில் சுத்தசாக்கிரம் முதலிய ஐந்து நிலைகள்.

**சுத்தம் - 1420 :** சுத்தமாயை - தூமாயை. சுத்தமாயையாவது நித்தியமாய், வியாபகமாய், அருவமாய், சடமாய், சொல்வடிவமும் சுத்தமாகிய பொருள் வடிவும் தோன்றுதற்கு முதற் காரணமாய் மயக்கஞ் செய்யாததாயிருப்பது.

**2267 :** சிவதத்துவம் ஐந்தும் சுத்த தத்துவமாகும்.

**சுத்தமதாகும் துரியம் - 492 :** தூய்மை எனப்படும் பேருறக்கமாகிய துரியநிலை.

**சுத்தன் - 2227 :** திருவருட்டுணையால் ஆருயிர், தன்னை அறிந்து விளங்கும் நிலையில் சுத்தன் எனப்படுவான்.

**சுத்தா சுத்தம் - 2267 :** வித்தியா தத்துவங்கள் ஏழும் சுத்த சுத்தமாகும்.

**சுத்திகள் எட்டு - 2737 :** நிரீட்சணம் (பார்த்தல்), புரோக்கண (தெளிதல்), தாடனம் (தட்டுதல்), அப்யுக்கணம் (மூடுதல், தாளத்திரயம் (முத்தட்டு), திக்குபந்தனம் (திசைக்கட்டு, அவகுண்டம் (வளைத்தல்), தேனுமுத்திரை (அமிர்த சொரிதல்) ஆகிய எண்வகை சுத்திகள்.

**சுந்தரி - 1046 :** பேரழகு வாய்ந்தவள். அழகம்மை.

**சுப்பிரம் - 63 :** இறைவனருளிய நவ ஆகமங்களில் ஒன்று.

**சுருதி முடிந்திடம் - 128 :** நாதமுடிவான நாதாந்த நிலை.

**சுவத்திகம் - 558 :** சுகாசனம். முழந்தாளுக்கும் தொடைக்கும் நடுவில் இரண்டு பாதங்களையும் கீழேவைத்து உடல் நிமிர்ந்து அமர்வது.

**சுவர்க்க நெறியாள்பவர் - 2257 :** ஐந்து மலப்பிணிப்புடைய சகலர். வீடுபேற்றிற்கு உரியராதலின்றிச் சுவர்க்க நெறியினை அடைபவராவர்.

**சுவர்யோனி - 499 :** தேவப்பிறப்பு - சுத்த வித்யா மண்டலம் என்பர்.

**சுழுனை - 2156 :** சுழுத்தி.

**சுழுனை முதலெட்டு - 2258 :** துரியம், துரியசுழுத்தி, துரிய சொப்பனம், துரிய சாக்கிரம், சுழுத்தியில் துரியம் சுழுத்தியில் சுழுத்தி, சுழுத்தியில் சொப்பனம், சுழுத்தியில் நனவு ஆகிய எட்டு.

**சுனை - 2667 :** புருவமத்தி (உருவகம்).

**சூக்கும உடல் - 2123 :** சத்த, பரிச, ரூப, ரச, கந்தம், புத்தி, மான், அகங்காரம் ஆகிய எட்டினால் ஆகிய புரியட்டக உடம்பு.

**சூக்குமப்பிரணவம் - 2675 :** விந்து நாதமாகிய சூக்குமப்பிரணவம். சொரூபப்பெண். நாத சொரூபமாகிய சத்தி.

**சூக்கும பஞ்சாட்சரம் - 2709 :** சிவாய நம. சிவ என்னும் மொழியினை முன் நிறுத்தி, நமவென்னும் மொழியை அதன் பின் நிறுத்தி, சிவாய நம' என்று கூறுவது சூக்கும பஞ்சாட்சரம் எனப்படும்.

**சூதனும் சூதியும் - 1222 :** விந்துவும் நாதமும். விந்து வடிவமான சிவமும் நாத வடிவமான சத்தியும்; சூதன் நாதம் என்றும், சூதி விந்து என்றும் கூறுவர்.

**சூரியன் - 116 :** சிவசூரியன். எல்லா ஒளிகட்கும் ஒளியருளும் அறிவுப் பேரொளி.

**சூலம் - 339 :** சிவபெருமான் திருக்கரத்தில் விளங்கும் முத்தலை வேற்படை.

**சூனிய சம்பாஷணை - 2866 :** ஞானப்பொருளை மறைவாகக் கூறுவது.

**செஞ்சுடர் - 580 :** பிரமரந்திர மார்க்கம்.

**செடியார் தவத்தினில் செய்தொழில் நீக்கல் - 3013 :** மிகுதியான தவ முயற்சியால், (பிராரத்த வினையினால்) நிகழும் வினைச் செயல்களை நீக்குதல்.

**செண்டு வெளி - 621 :** மகா சூனிய ஆகாசம்.

**செத்தார் - 1907 :** பிரபஞ்சத்தை மறந்து சமாதியில் இருப்பவர்.

**செத்திட்டிருப்பர் - 121 :** உடம்பொடு கூடியிருந்தும் உலக வாதனை அற்றிருப்பர். பாச ஞானமாகிய கரணம் கடந்து, பசு ஞானமாம் உயிர்ப்பற்று, சிவஞானமாம் சிவாகாரத்தில் அழுந்தியிருக்கும் சிவயோகியர் உயிர்ப்படங்கிக் காணப்படும் நிலை செத்திட்டிருக்கும் நிலையாகும்.

**செம்பு பொன்னாகும் - 903 :** செம்பின் களிம்பு நீங்கிப் பொன்னாவது போலச் சீவனும் உயிர்க்குற்றங்கள் நீங்கிச் சிவனாகும்.

**செய் - 188 :** உடம்பு (உருவகம்).

**செயலற்றிருப்பார் - 2319 :** சமாதி அல்லது நிட்டைநிலை கூடியவர். நின்மல துரியத்தில் ஆன்மா அந்தக்கரணம் முதலிய சேட்டைகளின்றி இருக்கப் பெற்றவர்.

**செல்கதி - 138 :** ஆன்மா சென்றடையும் நெறி.

**செல்வன் - 168 :** செல்வங்களை உடையவனும் செல்வமாக விளங்குபவனுமாகிய சிவபெருமான், 'செல்வன் கழல் ஏத்தும் செல்வம்' என்பது திருமுறை (சம்பந்தர் *1-80-5*).

**செவி மந்திரம் - 359 :** செபிக்கும் மந்திரம்.

**செழுங்கிரி 621 :** ஆக்கினையின் உச்சி.

**செறிவு - 306 :** உலகத்தொடர்பு.

**சென்றார் - 2936 :** சமாதிப்பயிற்சி முறையில் சென்றவர். அவருடைய மனம் மோன சமாதிநிலை அடையும், அவ்விடத்தில் ஒரு இரகசியார்த்தமாகிய பரமசிவம் விளங்கும்.

**சேதனத்தாய குரு - 2014 :** மனித வடிவங்கொண்ட, ஞானமே வடிவாகிய குரு.

**சேதனன் - 2307 :** ஆன்மா. அறிவுடையது.

**சேயன் - 2814 :** செந்நிறமுடைய சிவபெருமான்.

**சேரும் வினை - 430 :** ஆகாமிய கன்மம்.

**சைவ சமயம் - 1567 :** சிவபெருமானாகிய நந்தி, ஆன்மாக்கள் உய்தி பெறுவதற்காக, குரு நெறியாக வகுத்த சமயம். இது சிவநெறியாகிய சன்மார்க்கம் எனப்படும். சிவபரம்பொருளை முழுமுதற்கடவுளாகக் கொண்டமைந்த சமயம்.

**சைவ சித்தாந்தர் - 1421 :** சைவ சித்தாந்த நெறியினை மேற் கொண்டொழுகுபவர்.

**சைவம் - 1512 :** சிவனுடன் தொடர்பாவது. சித்தாந்த சைவம் உணர்த்தும் விழுமிய பரமுத்தியாகிய சாயுச்சியத்தைச் சுட்டும்.

**சொத்திரம் - 563 :** ஆசனவகையுள் ஒன்று. இதனைச் சொத்திகம் எனல் வேண்டுமென்பர். சுவத்திகாசனம். முழந்தாளுக்கும் தொடைக்கும் நடுவில் இரண்டு பாதங்களையுட் வைத்து நிமிர்ந்து அமர்ந்திருத்தல்.

**சொருப உதயம் - 2835 :** உண்மைச் சிவ சொரூபத்தின் எழுச்சி.

**சொருபக் குரவன் - 2843 :** சிவ சொருபமாகிய குரு.

**சொருபம் - 227 :** சிவ வடிவம்.

**சொருபோதயம் - 1486 :** ஆன்மாவின் இயற்கையான சொருபம்.

**சொல்லரு பேர் உரைத்தல் - 2483 :** அசபா காயத்திரியினைத் தியானம் செய்தல்.

**சொல்லொளி - 1028 :** பிரணவம் ; குருமொழி என்றும் கூறுவர்.

**சொல்வழி - 637 :** நூல்கள் புகழும் தாரணை மார்க்கம்.

**சொற்பதம் - 1421 :** பிரணவபதம்.

**சொற்பதம் மாளுதல் - 2945 :** தத் பதப்பொருளாகிய சிவனும் தொம் பதப்பொருளாகிய சீவனும் இருவேறுபட்டன என்னும் தன்மை மாய்ந்து ஒன்றென்னும் தன்மை அடைதல்.

**சோகம் - 2403 :** அவனே தான் எனும் நிலை. (ஸ:+அகம்=சோகம்) சோகம் சிவோகம் எனவும்படும்.

**சோகம் என்போர் - 2476 :** அவனே நான் என்னும் சோகம் பாவனை செய்பவர்.

**சோடசம் - 1075 :** பதினாறு கலைகளுள்ள சந்திரமண்டலம்.

**1980 :** பதினாறிதழ்த் தாமரை.

**சோடச மார்க்கம் - 1899 :** பதினாறு வழிகள். அவை சரியையிற் சரியை முதல் ஞானத்தில் ஞானம் ஈறாகிய பதினாறு வழியாகும். 'சோடசக்கலை மார்க்கம் என்பது பிராசாதநெறி பற்றியது என்றும், அது அகரக்கலை முதலாக உன்மனி ஈறாக உள்ள பதினாறு கலைகளை மந்திர சாதனத்தால் கடந்து சிவத்தை அடைவது, என்றும் விளக்குவர்.

**சோதனை - 2635** : குருவின் உதவியால் உண்மையை உணர்தல்.

**சோதி இரேகை - 582** : சந்திரப்பிறை வடிவமான தீபவொளி.

**சோதியதனில் பரம் - 381** : பிரிப்பின்றித் திகழும் பேரொளியாகிய பராபரையினின்று, சிவமாகிய பரம் தோன்றும்.

**சோம்பர் - 128** : தற்செயலற்றுச் சிவச்செயலாக விளங்கும், ஆன்ம சுத்தி பெற்ற சித்தர்கள்.

**சோமன் - 69** : திருமூலர்பால் திருமந்திர உபதேசம் பெற்ற எழுவருள் ஒருவர்.

**சோமன் முகம் - 248** : மதிமண்டலம்.

**சோயம் தேவதத்தன் - 2570** : அவனே தேவதத்தன் என்னும் முறை. தேவதத்தன் என்பவன் ஓரிடத்தில் இல்லறத்தானாக இருந்தபோதும், பிறிதோரிடத்தில் அரசனாயிருந்தபோதும், மற்றோரிடத்தில் துறவியாயிருந்தபோதும், இவையனைத்தும் ஒழிந்து நின்றபோதும், தேவதத்தனே ஆவான். அதுபோல விட்டும் விடாத இலக்கண வாய்பாட்டால் சீவன் சிவன் இணைந்த நிலை (ஜீவப்பிரஉற்ம ஐக்கியம் ) சுபாவ சித்தமாக இருக்கின்றது என்று அறிவது.

**ஞாதுரு - 90** : அறிகின்றவன். அறிவடிப்படை மூன்றனுள் ஒன்று.

**1606** : ஆன்மா.

**ஞாதுரு ஞான ஞேயம் - 1605** : காண்போனும், காணும் அறிவும் காணப்படும் பொருளும்.

**ஞானக்கொழுந்து - (விநாயகர் காப்பு)** : விநாயகக் கடவுள். சிவபெருமான் ஞானமே வடிவமாகக் கொண்டவராதலின் அவருடைய மூத்தபிள்ளையாராகிய விநாயகப்பெருமான் ஞானக்கொழுந்து எனப்படுகின்றார்.

420 : திருவடியுணர்வு - சிவனருள்.

**ஞானகுருதரிசனம் - 2656 :** ஞானந் தரும் குருவை அகத்தில் காணல்.

**ஞானச்சமயம் - 1476 :** பரம்பொருளை அவாவும் ஆன்மாவாகிய தன்னைக்காண்டல். ஆன்மதரிசனம்.

**ஞானச்சிவப்பிரகாசம் - 2001 :** ஞானமயமான சிவவொளி.

**ஞானத்தலைவி - 82 :** ஞானத்தலைவியாக விளங்கும் சத்தி.

**ஞானத்தில் நான்கு - 1473 :** ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்னும் நான்கு நிலைகள்.

**ஞானத்து உறவு - 2851 :** ஞானம் அடைவதற்குரிய ஆராய்ச்சி (விசாரணை) (உருவகம்).

**ஞானத்து முத்திரை - 2332 :** சின் முத்திரை. சுட்டுவிரல் பெருவிரலுடன் இணைந்து நிற்க ஏனைய மூன்று விரல்களும் தனித்து நிற்குமாறு அமைந்த திருக்கர அடையாளநிலை.

**ஞானத்துறவி - 2694 :** ஞானத்தோடு கூடிய துறவி (சந்நியாசி).

**ஞான நிர்வாணம் - 1476 :** ஞானத்தில் நிர்வாண தீட்சை. தூய அறிவினனாகிய சிவனருளில் தோய்வது. திருவருட்பதிவு. சிவயோகம்.

**ஞான பூசை - 1444 :** அறிவு வழிபாடு. சிவபரம்பொருள் அனைத்துயிர்க்கும் உயிர்க்குயிராய் விளங்குமாற்றை உணர்ந்து, இதயத்தில் அதனைத் தியானிப்பது. அகப்பூசை.

**ஞானம் - 90 :** அறிவு. (அறிவோனையும் அறியப்படு பொருளையும் உடன் கொண்டு வருவது)

**1136 :** ஞானசத்தி. மலத்தை நீக்கிச் சிவானுபவத்தைப் பெறும் பொருட்டுச் செய்ய வேண்டிய உபாயங்களை யெல்லாம் அறியும் சிவபெருமானுடைய சத்தி.

**1467 :** சைவ நெறி கூறும் முத்தி நெறி நான்கனுள் நான்காவதாக அமைந்தது. (நான்கும் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்படும்.)இது மெய்யுணர்வு என்று கூறப்படும். இதனைச் சன்மார்க்கம் என்பர்.

சகல கலை வேத சாத்திரங்கள் உணர்ந்து, பலமார்க்க நெறியுணர்ந்து அவை கீழன என்று கண்டு, பதி பசுபாசத் தெளிவு பெற்று, இறைவனை வழிபடுவது. புறத்தொழில், அகத்தொழில் இரண்டுமின்றி, அறிவுத்தொழில் மாத்திரமாக நின்று, அரு, அருவுரு, உரு ஆகிய மூன்றிற்கும் மேலாய் விளங்கும் அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற சிவபிரானிடத்திற் செய்யும் வழிபாடு. இதன் பயன் சிவசாயுச்சியம் என்னும் பரமுத்தியாகும். இது ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்னும் நால்வகைப்படுத்தி விளக்கப்படும்.

**ஞானம் நான்கு - 1449 :** சரியையில் ஞானம், கிரியையில் ஞானம், யோகத்தில் ஞானம், ஞானத்தில் ஞானம் என்னும் நான்கு வகை ஞான நிலைகள்.

**ஞான முத்திரை - 1900 :** அறிவுமயமான அடையாளம்.

**ஞான லிங்கம் - 1763 :** சிவசத்திக்கூட்டுறவை உணர்தலே ஞானமாம். அந்த ஞானம் இலிங்கம் எனத்தகும்

ஆன்மா பெற்றுள்ள சிவஞானத்தைச் சிவலிங்கத் திருமேனியாகக் கொண்டு வழிபடுவதனைக் கூறுவது.

**ஞான விசேடம் - 1476 :** ஞானத்தில் விசேட தீட்சை. சிவத்தோற்றம் காண்பது.

**ஞானாதித்தன் - 1993 :** ஞான சூரியன்.

**ஞானாபிடேகம் - 1476 :** ஞானத்தில் அபிடேக திட்சை. குருபாதம் மறவாதிருத்தல்.

**ஞானானந்தம் - 200 :** அறிவுமயமாக விளங்கும் பேரின்பப் பெருநிலை. சிவானந்தம்.

**2330 :** சிவானந்தப்பேறு.

**ஞானானுபூதி - 1481 :** ஞான அனுபவம்.

**ஞானோதயம் - 2813 :** சிவன் வேறு, சிவன் வேறு என்னும் நிலைமாறிச் சீவன் சிவனே என்னும் அறிவு உதயமாதல்.

**ஞேயம் - 90 :** அறியப்படும் பொருள். அறிவடிப்படை மூன்றனுள் ஒன்று .

**தசநாடி - 574 :** இடைநிலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்திசிங்குவை, சங்கினி, புருடன், குரு, அலம்புடை எனப் பத்துவகைப்பட்டுப் பிராணவாயு இயங்குவதற்குரிய பத்து நாடிகள். இடப்பால் நரம்பு, வலப்பால் நரம்பு, நடு நரம்பு, உள்நாக்கு நரம்பு,வலக்கண் நரம்பு, இடக்கண் நரம்பு, வலச்செவி நரம்பு, இடச்செவி நரம்பு, கருவாய் நரம்பு, எருவாய் நரம்பு என்றும் கூறுவர்.

**தசாங்கம் - 2664 :** தசகாரியம். பத்துச்செயல்கள்.

சிவஞான போத எட்டாம் நூற்பாவில் 'விட்டு' என்றும், 'செல்லும்' என்றும் அமைந்துள்ள பதவிளக்கமாக இத்தசகாரியம் அமையும். பாசக்கூட்டத்தையும் பசு போதத்தையும் விடுதலும், சிவத்தில் சேருதலும் ஆகியவற்றின் இடைப்பட்ட நிலை விளக்கங்கள்.

பாசஞானம் நீங்கியப் பசுஞானம் விளங்கப்பெறுதலையும் பின்னர் அதுவும் நீங்கிச் சிவஞானம் விளங்கப் பெறுதலையும் பத்துவகையில் வைத்து விளங்க உணர்த்தும் முறை தசகாரியம். அவை தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் ஆகிய பத்து ஆன்மானுபவ நிலைகள்.

இவற்றுள் 'ரூபம்' மூன்றும் கேட்டல் எனவும், 'தரிசனம்' மூன்றும் சிந்தித்தல் எனவும், தத்துவ சுத்தி, ஆன்மசுத்தி, சிவயோகம் ஆகிய மூன்றும் தெளிதல் எனவும், சிவயோகம் நிட்டை எனவும் தெளியப்படும்.

**தஞ்சம் - 138 :** புகலிடம்.

**தட்டான் அகம் - 2876 :** சீவனுடைய உடம்பு.

**தடவரை ஓங்க எடுத்தவன் - 350 :** விசாலமான மலையாகிய கயிலாயத்தைத் தன் வலியால் எடுத்த இராவணன்.

**தடையவை ஆறு - 665 :** காமம், குரோதம், மோகம், லோபம், மதம், மாற்சரியம் எனும் ஆறு. ஆறு ஆதாரங்கள் என்றும் கூறுவர்.

**தண்டலைமேல் நின்ற தையல் - 1102 :** குளிர்ந்த உச்சிமேல் நின்ற தையலாகிய பைரவி. மகிடாசூரன் தலைமேல் நின்ற மகிடாசுரமர்த்தினி என்றும் கொள்ளலாம்.

**தண்டி - 351 :** தண்டேசுவரர். எச்சதத்தன் மகனான விசாரசருமர், ஆநிரை மேய்த்துக் காத்தபோது, மண்ணியாற்றங்கரைவெளியில் மணலால் இலிங்கம் அமைத்து ஆவின்பாலைக் கறந்து அபிடேகம் செய்து ஆராதித்தார். ஆப்பயன் குறைவதாக அந்தணர் கூறக்கேட்ட தந்தையாகிய எச்சதத்தன் மறைந்து நின்று மகன் செய்யும் செயலைக்கண்டறிந்து, கோபங்கொண்டு பாற்குடத்தைக் காலால் இடறினார். அதுகண்டு தந்தை மீது கோபங்கொண்ட மைந்தர் கம்பினை எடுக்க, அது மழுவாக மாற, அதுகொண்டு தந்தையின் தாளைத் தடிந்திட்டார். இறைவன் விசாரசருமரின் அன்பின் திறங்கண்டு அவருக்குச் சண்டீசபதம் அளித்து 'அனைத்தும் நாம் உண்ட கலமும் உடுப்பனவும் சூடுவனவும் பெறுக' என்று அருள் செய்தார்.

**தண்டின் சுழுனை - 2528 :** முதுகந்தண்டின்கண் உள்ள சுழுமுனை.

**தண்டு - 817 :** வீணா தண்டம்.

**தத்துவ ஞானம் - 98 :** முடிவான உண்மை அறிவு.

**தத்துவத்து அயிக்கியத்துவம் - 2476 :** அது நீ ஆகிறாய் எனப் பொருள்படும் தத்துவமசியாகிய மகாவாக்கிய உபதேசநெறி.

**தத்துவ ஞானம் - 98 :** தத்துவங்களை அறியும் அறிவு. மெய்ஞ்ஞானம்.

**தத்துவ நாயகி - 679 :** பராசத்தி.

**தத்துவம் - 321 :** முப்பத்தாறாய் விளங்கும் மெய்ப்பொருள். அறுபது தாத்துவிகங்களும் சேர்த்த நிலையில், தொண்ணூற்றாறாக விளங்கும் தத்துவங்களையும் குறிக்கும்.

**629 :** மெய்ப்பொருளாகிய சிவம்.

**1441 :** படைப்புக்காலம் முதலாக ஒடுக்கக்காலம் வரை தன் தன்மை மாறாதுள்ள பொருள். (தத் - அதனது; த்வம் - தன்மை).

**2179:** மாயையின் காரியமாகிய தத்துவங்கள் தொண்ணூற்றாறு. சைவர்க்கு முப்பத்தாறு தத்துவங்களும், வேதாந்திகட்கு இருபத்தெட்டுத் தத்துவங்களும், வைணவர்கட்கு இருபத்து நான்கு தத்துவங்களும், மாயாவாதிக்கு இருபத்தைந்து தத்துவங்களுமாகும்.

**தத்துவம் நாலு - 1297 :** விந்து, நாதம், சத்தி, சிவம் என்னும் நான்கு தத்துவங்கள்.

**தத்துவமசி வாக்கியம் - 2568 :** தத்+துவம்+அசி ஆகிய மூன்று பதங்களைக்கொண்ட வாக்கியம். இதனைச் சாம்வேதத்திற் காணும் மகாவாக்கியம் என்பர். அது நீ ஆகிறாய் என்பது வாக்கியப் பொருளாகும்.

**தத்துவாதீதம் - 2049 :** முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து விளங்கும் நிலை.

**தத்பதம் - 2388 :** சிவன். (தத்துவமசி மகாவாக்கியத்திலுள்ள முதற்பதம்).

**தந்திரம் - 2045 :** சிவாகம உண்மை.

**தந்தைக்கு முன்னே மகன் பிறத்தல் - 869 :** சிவத்திற்கு முன்னர்ப் பிரணவமாகிய பிள்ளையார் தோன்றல். சிவயசிவ என்னும் திருவைந்தெழுத்து நிலையில் சிகாரத்திற்கு முன் யகாரம் நிற்கும் நிலையினைத் தந்தைக்கு முன் மகன் தோன்றினான் எனக்கூறப்பட்டுள்ளது என்றும் விளக்குவர்.

**தபோதனர் - 1858 :** தவத்தைச் செல்வமாக உடையவர்கள்.

**தம்பனம் - 997 :** கட்டுதல். எதிரியைச் செயல்படாவாறு கட்டுதல்.

**தயாபரன் - 393 :** கருணாமூர்த்தியாக விளங்கும் சிவபெருமான்.

**தர்க்கவாதம் - 51:** பயனற்ற அளவைமுறைகளால் வழக்கிட்டு நிற்கும் வல்லாண்மை.

**தலங்கள் ஐந்து - 117 :** சிவசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், கன்ம சாதாக்கியம் என்னும் ஐவகை நிலைகள்.

**தலை - 2425 :** ஞானம்.

**தலைப்பிரமாணி - 1169 :** முதன்மைப்பிரமாணமாக விளங்கும் வேதத்தை உடையவள்; முதன்மையான அளவையாக விளங்குபவள். சத்திதேவி.

**தவகதி - 1536 :** சன்மார்க்கமாகிய தவநெறி.

**தவதூடணம் - 1633 :** புறநோக்கை விடுத்து அகநோக்கங் கொண்டவர்க்குப் புறத்தே செய்யும் செயல்கள் வேண்டா எனக்கூறுவது.

**தவபெருமான் - 2971 :** தவவேடமுடைய குருமூர்த்தி.

**தவம் - 6 :** பற்று விட்டு, உண்டி சுருக்கல் முதலாயினவாற்றால் உடம்பினை ஒறுத்துத் தெய்வத்தை வழிபட்டு நோற்றல்.

**தவளச்சடைமுடித் தாமரையான் - 5 :** தீ வண்ணச் செஞ்சடையோடு, அன்பர்களின் இதயத் தாமரையில் உறையும் சிவபெருமான். 'மலர்மிசை ஏகினான்' என்பது திருக்குறள் (கடவுள் வாழ்த்து. 3).

**தளித் தொழில் - 1502 :** திருக்கோயிற்குச் செய்யும் கைங்கிரியங்கள்.

**தளியறிவாளர் - 510 :** திருக்கோயில் வழிபாடுடையார்.

**தற்கண்டதுரயம் - 2451 :** தேகம் தான் அல்லவென்றும், தான் ஆகாயக் கூறு என்றும் அறிந்தநிலை. மலமகன்ற தூய நிலை.

**தற்குறி ஆறு - 744 :** ஆறு ஆதாரத்திலுமுள்ள சிவசொருபம் ஆறு.

**தற்சிவதத்துவத் தோற்றங்கள் - 1477 :** தத்பதப்பொருளான சிவ தத்துவ சொருபங்கள். அவை சுத்தவித்தை, ஈசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆகியன.

**தற்பதம் - 1441 :** தத் என்னும் பதப்பொருளாகிய சிவம். (தத்துவமசி என்னும் மகாவாக்கியத்திலுள்ள தத் எனும் சொல்)

**2437 :** அது

**தற்பரம் - 1421 :** தத் என்னும் பதப்பொருளான சிவம்.

**தற்பரன் - 89 :** மேம்பட்டு விளங்கும் சிவபெருமான்.

**தற்பொருளாகிய தத்துவம் - 676 :** தத் என்று குறிக்கப்படும் சிவ பரம்பொருள்.

**தன்மைகள் ஓராறு - 1706 :** நான், தான், நீ, அவன், அவள், அது, ஆகியன ; அவாவின்மை, ஈசுவரத்தன்மை, கீர்த்தி, செல்வம், ஞானம், வீரியம் எனவும்படும்.

**தன்னெஞ்சமில்லாத்தலைவன் -2973 :** தற்போதம் உடைய உள்ளத்தில் இடங்கொள்ளாத சிவபெருமான்.

**தனஞ்செயன் - 653 :** பத்து வாயுக்களில் ஒன்று.

**தனி நிலை அன்னம் - 2006 :** பரமான்மா. சிவமாகிய அன்னம்.

**தனைக்காண்டல் - 2302 :** ஆன்மதரிசனம்.

**தாகங்கள் ஏழு - 2738 :** ஏழு நாவினையுடைய அக்கினி.

**தாசமார்க்கம் - 1502 :** ஆண்டான் அடிமை முறையில் இறைவன்பால் அன்பு செலுத்தி வழிபடுவது. தொண்டு நெறியாகிய கிரியை நெறி நிற்பது.

**தாண்டவங்கள் - 887 :** இறைவன் சிற்றம்பலத்தில் ஆடும் திருக்கூத்து வகைகள். அவை அற்புதத்தாண்டவம், ஆனந்தத் தாண்டவம், அனவரதத்தாண்டவம், பிரளயத்தாண்டவம், சங்காரத் தாண்டவம் என ஐவகைப்படும்.

**தாண்டவமான தனியெழுத்து ஒரெழுத்து - 888 :** பஞ்சாக்கிர நடனம்.

**தாணு -704 :** சிவன். பரமாகாயத்திலுள்ள பரசிவத்துக்குரிய சந்திரன்.

**தாதை - 351 :** விசாரசருமரின் தந்தையாகிய எச்சதத்தன் என்னும் அந்தணர். திருச்சேய்ஞ்ஞலூரினர்.

**தாபர லிங்கம் - 1755 :** தாபர சொரூபம். அசையாப் பொருள்களனைத்தும் சத்தி சிவசேர்க்கையாகிய லிங்க சொரூபமாகும்.திருக்கோயிலிலுள்ள அருவுருவத் திருமேனியைக் குறிக்கும் என்றும் கூறப்படும்.

**தாபிக்கு மந்திரம் - 579 :** மூலாதாரத்திலுள்ள மந்திரமாகிய பிரணவம். அல்லது மூலாதார எழுத்துக்களாகிய வ, ச, ஷ, ஸ என்பன. இதனை ஹம்ஸம் என்ற இரண்டெழுத்துக்களாலாகிய மந்திரம் என்றும், அது ஆத்மப் பிரசாதம் எனப்படும் என்றும் கூறுவாருமுளர்.

**தாமதமாதி - 2489 :** தாமதம், இராசதம், சத்துவம் ஆகிய முக்குணங்கள்.

**தாமரைச்சென்னி - 270 :** உச்சியிலுள்ள ஆயிர இதழ்த்தாமரை.

**தாமோதரன் - 368 :** திருமாலின் பல்பெயர்களுள் ஒன்று. கண்ணனாக வளர்கையில் அசோதையால் கட்டப்பட்ட கயிற்றையுடைய வயிற்றினன்.

**தாரம் - 1405 :** பிரணவம்.

**தாரம் இரண்டு - 1751 :** பிரணவ உறுப்பாகிய அகாரமும் உகாரமும் ஆகிய இரண்டெழுத்துக்கள்.

**தாரணை - 552 :** பொறைநிலை. மனத்தினை ஒருநிலை நிறுத்துகை.

**தாவர லிங்கம் - 515 :** நிலைபெறுத்தப்பெற்றுள்ள அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கம்.

**தாழ் சடையோன் - 8 :** நீண்டு தாழ்ந்து விளங்கும் சடைமுடியினை யுடைய சிவபெருமான்.

**தாளிணை - 141 :** சிவபெருமானுடைய திருவடிகள். திருவடி ஞானம்.

897: இணையார் திருவடி.

**தாளிணை தலைமிசையாவது - 2427 :** சிவபெருமான் தன் இணையார் திருவடியினை அடியாரின் தலைமிசைச் சூட்டுவது. 'தாடலை' யாகும் தொடர்பு. இந்த நிலையையும் பயனையும் 'இணையார் திருவடியென் தலைமேல் வைத்தலுமே துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்' என்று மாணிக்கவாசகர் காட்டுகின்றார் (திருவாசகம் - திருப்பூவல்லி - 1).

**தான் அவனாதல் - 228 :** உயிர் அறிவு நீங்கித் திருவருள் பெற்றுச் சித்தம் சிவமாகி நிற்கும் நிலை. 'ஏகனாகி இறையணி நிற்க' என்பது சிவஞானபோதம் (நூற்பா - 10).

**தானான வேதாந்தம் - 2372 :** ஆன்மாவே பிரமம் என்னும் வேதாந்தம்.

**தானென்னும் சித்தாந்தம் - 2372 :** சிவமே ஆன்மா என்னும் சித்தாந்தம்.

**திசை பத்து - 32 :** கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் நேர்த்திசை நான்கும், வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென் மேற்கு என்னும் கோணத்திசை நான்கும், மேல், கீழ் இரண்டும் ஆகப் பத்துத்திசைகள்.

**திதி - 411 :** காப்பு.

**திப்பிலி ஒன்பது - 2884 :** சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், சேவை, அருச்சனை, அடிமை, வந்தனம், சக்கியம், ஆன்மநிவேதனம் ஆகிய ஒன்பது வகைப்பத்தி.

**தியானம் - 552 :** நினைத்தல். இடையறாச்சிந்தனை.

**திரிபுரை - 401 :** திருவருளம்மை. அனைத்து அண்டங்கட்கும் இடமாகவும், தோற்றநிலையாகவும் உள்ள அருள் ஞானவெளியில், முக்கோண பீடத்தில் ஐந்தொழிலையும் முத்தொழில் ஆற்றலில் அடக்கிக்கொண்டு விளங்கும் பராசத்தி.

**670 :** எண்வகைச் சித்திகளும் தானேயாகிய திரிபுரைச்சத்தி (முப்புரச்செல்வி).

**1045 :** சிவபெருமானுடைய அபின்னமான - பின்னப்படாத கூறுபடாத சத்தி, அக்கினி, சூரியன், சந்திரன் என்ற மூன்று கண்டங்களாக விளங்குபவள். மூன்று கண்டங்களாக உள்ள சக்கரத்துக்குரியவள்.

**திரிமலம் - 1527 :** ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலம்.

**திருஒன்றின் - 396 :** சத்தி சிவம் கூடினால்.

**திருக்கோயிலிழிவு - 515 :** திருக்கோயிலுக்குச் செய்யும் இழிவு.

**திருந்த நத்தீ - 2797 :** திருந்திய நகாரமாகிய அக்கினியையுடைய இடக்கை.

**திருந்தனர் - 2339 :** தத்துவ ஞானத்தால் நிட்டை வாய்க்கப் பெற்றவர்.

**திருநாமத்தை நான்று நின்றார் - 323 :** இறைவனுடைய திருப்பெயர்களைத் துணையாகப்பற்றி நிற்பவர்கள்.

**திருநிலை - 2797 :** மகாரமாகிய மலத்தையடக்கிய ஊன்றிய திருவடி.

**திருநெறி 54 :** இறை உண்மையினையும், இயல்பினையும் விளங்க உணர்த்தும் செம்மை சான்ற நெறி. 'திருநெறிய தமிழ்' என்பது திருமுறை (திருஞானசம்பந்தர் 1-1-11).

**திருமங்கை - 2028 :** திருஅருட்சத்தி - திருவருளம்மை.

**திருமுறை - 1067 :** பாடும் திருமுறை - கானம் செய்தற்குரிய வேதநூல்.

**திருவடி - 137 :** திருவருள். வீடுபேறு. திருவடி சிவலோக நெறியாகவும், புகலிடமாகவும், சிவமாகவும் விளங்கும்.

**திருவடி ஞானம் - 1598 :** இறைவன் திருவடியை அறிதற்குரிய மெய்ஞ்ஞானம். அடிசேர் ஞானம்.

**திருவடிப்பேறு - 1590 :** வீடு பேறெய்தல்.

**திருவம்பலச்சக்கரம் - 914 :** சிதாகாயப்பெருவெளியில் ஆனந்தக் கூத்தாடும் அம்பலவாணப்பெருமான் அருட்சத்தியோடு மந்திரவடிவாய் நின்று விளங்கும் யந்திரம்.

**திருவம்பலம் - 886 :** அழகிய சிற்சபை.

**திருவரையா மனம் - 625 :** அளவிடப்படாத பெருமையுள்ள மனம்.

**திருவழி - 2763 :** ஞானத்தை அடைவிக்கும் நன்னெறி.

**திருவார்த்தை - 139 :** ஞானாசிரியனுடைய உபதேசமொழி.

**திருவிலி - 2941 :** (திரு+வில்லி) - அழகிய மேருவினை வில்லாகக் கொண்ட சிவபெருமான். (திரு+இல்லி) பராசக்தியைத் தன் உடலாகக் கொண்ட சிவபெருமான்.

**திருவெழுத்தஞ்சு - 2705 :** பஞ்சாக்கரம்.

**திரோதாயி - 895 :** மறைப்பாற்றல்.

**திரோபவம் - 431 :** மறைப்பு.

**தில்லைஒளி - 838 :** சிதாகாசம்.

**தீர்த்தம் - 509 :** புனிதநீர். அண்டத்தே அமைந்துள்ள கங்கை காவிரிபோல பிண்டத்தும் மூலாதாரம் முதல் சகஸ்ரதளம் வரை தீர்த்தங்கள் உளவென்றும், அவற்றிலும் ஆடுதல் அறிதல் வேண்டுமென்றும் யோகநெறி நிற்பார் கூறுவர்.

**தீர்த்தன் - 39 :** மாசற்ற, புனிதமான சிவபெருமான். ஆன்மாக்களின் மலநீக்கத்திற்குத் துணையாக விளங்கலின் தீர்த்தன் எனலுமாம்.

'தங்கள் மலங்கழுவுவார் வந்து சார்தலினால்' என்பதும்,

'ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்' என்பதும் திருமுறை வாக்காகும் (திருவாசகம் - திருவெம்பாவை *- 13 ; 12).*

**தீவாய் நரகம் - 194 :** அனல் கக்கும் நரகம்.

**தீவிர தரம் - 1527 :** அறிவுநிலையில் முறுகிய தன்மை பெற்றிருப்பது. சத்தி நிபாதம் அமைவதற்கான பக்குவநிலை நான்கனுள் மிக மேனிலையிலுள்ள படியாகும்.

**தீவிரம் - 1523 :** அறிவுநிலையில் முதிர்ந்த தன்மை பெற்றிருப்பது. சத்திநிபாதம் அமைவதற்கான பக்குவநிலை நான்கனுள் மேல்நிலைப் படியாகும்.

**தீவு ஏழு - 2738 :** நாவலந்தீவு, இறவித்தீவு, குசைத்தீவு, கிரௌஞ்சத்தீவு, இலவந்தீவு, தெங்கந்தீவு, புட்கரத்தீவு ஆகிய ஏழு தீவுகள்.

**துதி - 33 :** புகழ்மொழி கூறி இறைவனை வழிபடல்.

**துதிக்கை - 801 :** சுழுமுனை.

**துரியங்கள் ஒரேழு - 1430 :** கேவலத்தில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியென மூன்று, சுத்தத்தில் சாக்கிரம், சொப்பனம் என இரண்டு, துரியத்தில் துரியம், துரியாதீதமென இரண்டு ஆக ஏழவத்தைகள்.

**துரியங்கள் மூன்று - 1893 :** சிவதுரியம், பரதுரியம், சிவதுரியம் ஆகிய மூன்று. சிவதுரியத்தில் ஞானேந்திரியம், கன்மேந்திரியம், மனம் ஆகியன தொழிற்படா. பரதுரியத்தில் 36 தத்துவங்களும் இல்லை. ஆன்ம உணர்ச்சி உண்டு. சிவதுரியத்தில் ஆன்ம உணர்ச்சியும் இராது.

**துரிய சமாதி - 232 :** ஆன்மா உந்திப் பிரதேசத்தில் பிராணனோடு இலயித்துத் தன்னையே விஷயீகரிக்கும் நிலை. நான்காவது ஆன்மநிலை. நிட்டையாகிய சமாதியில் ஆன்மாவிற்குண்டாகும் பேருறக்கநிலை.

**துரியத்துரிசு - 1483 :** துரியாதீதத்திற்குக் கீழ்ப்பட்ட துரியம் முதலியன. துரியாதீதத்தை நோக்கத் தாழ்வுடையதாதலால் துரிசு எனப்பட்டது.

**துரியம் - 2142 :** ஆன்மா உந்தியில் பொருந்துவது. துரியத்தில் புருடனுக்குரிய கருவி சித்தம் ஒன்றே. அவத்தை ஐந்தில் நான்காவது.

**2176** : 1) சீவன். 2) சிவன்.

**துரிய மூன்று - 2059** : சிவதுரியம், சிவதுரியம், பரதுரியம் ஆகிய மூன்று துரியங்கள். புலம்பு, புணர்வு, புரிவு என்னும் மூன்றிடத்தும் காணப்படும் பேருறக்கம் என்றும் கூறுவர்.

**துரிய விலாசம் - 2253** : ஆக்ஞைக்கு மேலான துரிய ஆதாரத்தில் இன்பமயனாக ஆன்மா விளங்குதல்.

**துவாதச மார்க்கம் - 1489** : பன்னிரண்டு ஆதாரங்களின் வழி. பன்னிரண்டு ஆதாரங்களாவன: மூலாதாரம் முதலிய ஆறும், மண்டலம் மூன்றும், சமனை, உன்மனை, அதிதம் ஆகிய மூன்றும். சிரசின்மேல் பன்னிரண்டு அங்குலத்தில் பொருந்துகின்ற மார்க்கம்.

**1899** : யோகநெறி

**துன்புறு கண்ணி ஐந்து - 282** : துன்பத்தைத் தரும் வலையாகிய ஐம்பொறிகள்.

**தூக்கம் - 128** : சகலாவத்தையில் உறங்காமல், நின்மல நிலையில் சிவ பரிபூரணத்தில் அடங்கி இன்புறல் என்பர்.

**தூங்கவல்லார் - 629** : யோகநித்திரை செய்பவர்.

**638** : பாற்கடலில் துயிலும் திருமால்.

**தூடணம் - 2451** : தத்துவங்களின் சிறுமை அறிந்து நீங்குதல்.

**தூய்மொழியாள் - 361** : தவறுதலில்லாத தூய்மையான மொழிகளையுடைய உமாதேவி.

**தூர தரிசனம் - 822** : பரம்பொருள் தரிசனம்.

**தூலப்பிரணவம் - 2675** : அகார உகார மகாரமாகிய ஓம் என்பது. இது பருவுடலுக்கு இன்பந்தரும் சொல்லுருவம். சொருபானந்தப்பேர் என்பது பருவுடம்பிற்கு ஆனந்தத்தை உண்டாக்கும் பெயர் எனப்படும்.

**தூலபஞ்சாக்கரம் - 2698 :** பஞ்சாக்கரம் = திருவைந்தெழுத்து. நமசிவாய என்பது தூலபஞ்சாக்கரம். நம என்னும் மொழி உயிரின் தொழிலாகிய வணக்கத்தை உணர்த்துதலின் அதனை முன்வைத்து, முழுமுதற் கடவுளை உணர்த்தும் சிவ என்னும் மொழியை அதன்பின் வைத்து உரைக்கும் நமச்சிவாய என்பது தூலபஞ்சாட்சரமாகும்.

**தெண்ணீர்ச்சமாதி - 882 :** அலைவில்லாத தெளிந்த நிட்டை.

**தெள்ளுண்மை ஞானச் சிவயோகம் - 328 :** தெளிந்த சத் சித் ஆனந்தமாகிய சிவத்தொடு இயையும் நிலை.

**தென்பொது - 886 :** பெருமை சான்ற சிற்சபை.

**தென்றிசைக்கொரு வேந்தன் - 2 :** தெற்குத் திசைக்கு ஒப்பற்ற தலைவனாக விளங்கும் கூற்றுவன் (இயமன்).

**தென்னன் - 1078 :** பெருமை பொருந்திய சிவபெருமான். 'தென்னன் பெருந்துறையான்' என்பது; திருமுறை (திருவாசகம் - அம்மானை-1.)

**தேகங்கள் ஏழு - 2738 :** தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் ஆகிய ஏழு பிறப்புக்கள்.

**தேகம் - 1785 :** உடம்பு

**தேகி - 1785 :** உடம்பையுடைய உயிர்.

**தேடவல்லார் - 543 :** யோகநெறி நின்று இறைவனை அகத்தே தேடி அறியவல்லார். யோகநெறியினர்.

**தேவதை எட்டு - 2531 :** அட்டதிக்குப் பாலகர்கள். அவர்கள் இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகிய எண்மர்.

**தேன் ஒருபால் திகழ் சிவன் - 275 :** ஆனந்தமாய பேரின்பத்தேனை அளிக்கும் உமையம்மையை ஒருபாற்கொண்ட சிவபெருமான்.

**தேனிக்கு முத்திரை - 1900 :** பசுமடி முத்திரை. சித்தம் இனிக்கும் குண்டலினி யோகம்.

**தொண்ணூற்றறுவர் - 2027 :** தொண்ணூற்றாறு தத்துவங்கள். தத்துவங்கள் முப்பத்தாறும் தாத்துவிகங்கள் அறுபதும் ஆகத் தொண்ணூற்றாறு.

**தொந்தத்வ அசி - 2402 :** நீ சிவமாயிருக்கிறாய் என்னும் பொருள்படும் மகாவாக்கியம்.

2494 : தத்துவமசியின் பதம் மாறிய நிலை. (தொம் + தத்+ அசி) நீ அது ஆகிறாய் என்பது பொருள்.

**தொந்தி - 2735 :** தொம் தீம் என்னும் தாளஒற்றின் குறியீடு.

**தொம்பதம் - 2388 :** சிவன்

2437 : 'தத்துவமசி' வாக்கியத்திலுள்ள துவம் என்னும் பதம் தொம்பதம் எனப்படுகின்றது. நீ என்பது பொருள்.

2569 : முப்பத்தாறு தத்துவங்களையும் நீங்கிய ஆன்மா பொருந்தும் நிலை தொம்பதம். இது சுத்தநிலையாகும்.

**தொம்மிட்டு நின்ற சுடர்க்கொழுந்து - 932 :** தொம்தொம் என்று நடஞ் செய்யும் ஒளிவடிவான சிவபெருமான். இதில் தொ என்பது தகரஒகரம். இது தகராகாசத்தில் பிரணவ சொருபனான சிவன் இருக்கும் என்பதனைக் குறிக்கும் என்றும் கூறுவர்.

**தொற்பதம் - 1421 :** அது உன்னுடையது என்னும் நிலை. இறைவனாகிய உடையவனின் உடைமைகள் ஆன்மாக்கள் என்றுணரும் நிலை.

**தோத்திரம் - 33 :** புகழ்ச்சிமொழியால் பாடி வழிபடல்.

**தோன்றிய வெல்லாம் துடைப்பன் - 323 :** எங்கும் என்றும் தோன்றிய அனைத்தையும் அழிப்பவனாகிய சிவபெருமான். மகாசங்காரத்தை - பேரொடுக்கத்தைச் செய்பவன்.

**நக்கன் - 3 :** நிர்வாணி. திசைகளை ஆடையாகக்கொண்டு திகம்பரனாக விளங்கும் சிவபெருமான்.

தத்துவங்கள் அனைத்தையும் கடந்தவன் என்றும் மலமற்றவன் என்றும், அவ்வகையில் சிவபெருமானைக் குறிக்கும் என்றும் கொள்ளப்படும்.

**நகார முதலாகும் நந்தி நாமம் - 2699 :** நமசிவய.

**நஞ்சுண்ட தேவர் பிரான் - 41 :** அமுதம் வேண்டிப் பாற்கடல் கடைந்த காலத்துத் தோன்றிய ஆலகால நஞ்சு கண்டு அஞ்சி அடைக்கலம் புகுந்த தேவர்களைக் காக்கும் பொருட்டு, அந்நஞ்சினை அயின்று கண்டத்தடக்கி விளங்கும், தேவர் தலைவனாகிய சிவபெருமான்.

**நட்டம் - 974 :** பஞ்சகிருத்திய நடனம்.

**நடம் எட்டு - 2733 :** ஐந்தொழிற் கூத்துடன் முனிதாண்டவம், அனவரத தாண்டவம், ஆனந்தத் தாண்டவம் மூன்றுங்கூடிய எட்டு நடனம்.

**நடமாடக் கோயில் - 1857 :** நடக்கின்ற உடம்பாகிய கோயில். சிவனடியார்கள்.

**நடு நாடி - 669 :** சுழுமுனை.

**நடுவு நில்லாது - 337 :** சமனிலைப்படாது. சுழுமுனை பொருந்தி நில்லாது எனவும் கூறுவர்.

**நந்தி - 27 :** சிவபெருமான்.

62 : திருமூலருக்குக் குருநாதராக விளங்கிய நந்தியம் பெருமான்.

**நந்திகள் நால்வர் - 67 :** நந்தியாகிய சிவபெருமானிடம் உபதேசம் பெற்று மறைப்பொருளுணர்ந்து விளங்கும் குருநாதர் நால்வராவர். அவர்கள் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்

என்பவராவர். மேலும் சிவயோகமாமுனி, பதஞ்சலி, வியாக்கிரபாதர், திருமூலர் ஆகிய நால்வரோடு எண்மரும் நந்தி அருள்பெற்ற நாதர் எனப்படுவர்.

**நந்தி மகன் - (விநாயகர் காப்பு) :** நந்தி, பரசிவமூர்த்தியாகிய சிவபெருமான். எனவே நந்தி மகன் சிவபெருமானுடைய மூத்த பிள்ளையாகிய விநாயகப்பெருமானைக் குறிக்கும்.

**நம்மலம் - 2712 :** நகார மகாரங்களால் குறிக்கப்படும் மலங்கள்.

**நமாதி - 2713 :** நமசிவய.

**நரகம் - 1659 :** நிரையம். தீவினை செய்தோர் அதன் பயனுகரச் சென்றெய்தும் துன்பமிகும் உலகு.

**நரிக்குட்டி - 2214 :** மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களாகிய நான்கு நரிக்குட்டிகள் (உருவகம்).

**நரிகள் பதினாலு - 2159 :** சத்தாதி வசனாதி விடயங்கள் பத்தும், அந்தக்கரணங்கள் நான்கும் (உருவகம்).

**நல்லமாதுக்கு நாதன் - 2 :** அருட்சத்தியாக விளங்கி அனைத்துயிர்க்கும் அருள் பாலிக்கும் உமையம்மைக்குத் தலைவனாக விளங்கும் சிவபெருமான்.

**நல்லார் இருவர் - 408 :** நன்மையைச் செய்கின்ற திருமாலும் நான்முகனும்.

**நல்லாள் - 609 :** பராசத்தி.

**நவ ஆகமம் - 62 :** முதன்மையான ஒன்பது சிவாகமங்கள். அவையாவன : காரணம், காமிகம், சிந்தியம், சுப்பிரம் (சிவபேதத்தின); வீரம், வாதுளம், காலோத்தரம், மகுடம் (உருத்திர பேதத்தின); யாமளம் (தந்திர சாத்திரம்). இவற்றைச் சிவத்திலிருந்து சத்தி, சதாசிவம், மகேசர், உருத்திரர், திருமால், பிரமன் ஆகியோர் முறையே பெற்றன ரென்றும், மேலும் இவர்கள்

வழிவந்த இந்த ஆகமத்தை நந்தியம் பெருமான் பெற்றார் என்றும் கூறப்படுகின்றன.

**நவகுண்டம் - 1015 :** மந்திர சித்தி பெற்றவர்கள். தாம் விரும்பும் செயலுக்கேற்பக் குண்டங்கள் அமைத்து ஓமம் செய்வது. குண்டம் ஒன்பது வகை கொண்டது. அதுவருமாறு: சதுரம், யோனி, பிறை, முக்கோணம், வட்டம், அறுகோணம், பதுமம், அட்டகோணம், வர்த்துலம். புறத்தே இக்குண்டம் அமைத்து வழிபடுவதுபோல அகத்தும் அமைத்து வழிபடப்பெறும்.

**நவகுண்டம் ஒன்பது - 360 :** புதுமை சான்ற ஒன்பது யாககுண்டம். இதனை ஒருவகை யாகமென்றும் கூறுவர்.

**நவதீர்த்தம் - 2755 :** ஒன்பது புண்ணிய நதிகள். கங்கை, யமுனை, சரஸ்வதி, நர்மதை, சிந்து, துங்கபத்திரை, கிருஷ்ணா, கோதாவரி, தாமிரவர்ணி ஆகிய ஒன்பது.

**நவமணி - 1917 :** நவரத்தினம். வயிரம், வைடூரியம், மாணிக்கம், மரகதம், பவழம், கோமேதகம், புட்பராகம், குருவிந்தம், முத்து ஆகிய ஒன்பது மணிகள்.

**நவமான தத்துவம் - 497 :** ஒன்பது தத்துவம். அவை சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், மகேசுரம், உருத்திரன், திருமால், பிரமன் ஆகும். இவற்றை அறிவு, ஆற்றல், நுண்ணோசை, நினைவோசை, அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்று மொழிபெயர்த்தும் கூறுவர்.

**நவாக்கரி - 1319 :** ஒன்பது எழுத்துக்களைப் பீசமாகக் கொண்டமைந்த தேவி மந்திரம்.

**நவாக்கரி ஒன்று - 1319 :** புதுமை சான்ற ஏகாக்கரி.

**நவாக்கரி சக்கரம் - 1319 :** ஒன்பது எழுத்துக்களைப் பீச எழுத்துக்களாகக் கொண்ட தேவி மந்திரம் அமைந்த சக்கரம்.

**நவாக்கரி சத்தி - 1321 :** நவாக்கரி மந்திரத்திற்குரிய தேவி.

**நவாதி - 1202 :** சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், மகேசுவரர், உருத்திரர், விட்டுணு, பிரம்மா ஆகிய ஒன்பது திருவுருவங்கள்.

**நவாவத்தை நவாபிமானி - 2537 :** சீவன் ஒன்பது அவத்தைகளிலும் அபிமானம் உடையனாவது. அவத்தை உணர்வுநிலை. அவை, சிவ சாக்கிரம், சீவசொப்பனம், சீவசுழுத்தி, பரசாக்கிரம், பரசொப்பனம், பரசுழுத்தி, சிவசாக்கரம், சிவசொப்பனம், சிவசுழுத்தி ஆகிய ஒன்பது நிலைகள். ஒன்பது நிலையில் விசுவன், (உலக உருவினன்), தைசதன் (தழல் வண்ணன்), பிராஞ்ஞன் (பேரறிவினன்), விராட்டன் (உலக முதல்வன்), இரணிய கர்ப்பன் (பொன் மேனியன்), அவ்யாகிர்தன் (பிரிக்கப்படாதவன்), இதையன் (கலப்பையன்), பிரசாபத்தியன் (ஆருயிர் முதல்வன்), சாந்தன் (தண்ணளியோன்) என்று அழைக்கப்படுவான்.

**நன்பழியாளன் - 366 :** சிவனொடு நட்பினை அழித்தவனாகிய பிரமன்.

**நன்மார்க்க சாதனம் - 1427 :** நன்னெறியாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியன.

**நன்மை - 2995 :** சன்மார்க்கம்.

**நனவு - 2813 :** சாக்கிரம். மனம், மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய ஐம்பொறிகளோடு பொருத்தி உலகப்பொருளை அனுபவித்தல்.

**நனவாதிகள் மூன்று - 2661 :** கனவு, நனவு, சுழுத்தி ஆகிய மூன்று நிலைகள்.

**நனாத்துரியம் - 2273 :** சாக்கிர துரியம்.

**நனாதி - 2713 :** சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் (நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல்) ஆகிய ஐந்து நிலைகள்.

**நனாநனா - 2197 :** சாக்கிர சாக்கிரம்.

**நாகம் - 457 :** குண்டலினி சத்தி.

**நாகம் எட்டு - 2926 :** குலம், சீலம், தனம், அழகு, யௌவனம், வித்தை, தவம், அரசு ஆகிய எட்டு.

**நாகை - 2891 :** (நாகணவாய்ப்புள்) சிற்றறிவு.

**நாசியில் மூன்று - 723 :** கந்தம், இடைகலை, பிங்கலை ஆகிய மூன்று.

**நாடி - 661 :** சுழுமுனை.

**நாடிகள் பத்து - 1729 :** இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, அலம்புடை, சிங்குவை, புருடன், சங்கினி, குரு ஆகிய பத்து நாடிகள்.

**நாதங்கள் பத்து - 606 :** மணி, கடல், யானை, புல்லாங்குழல், மேகம், வண்டு, தும்பி, வளை, பேரிகை, யாழ் ஆகிய இன்னோசை பத்து. தியானத்தில் ஆழ்ந்திருப்பார்க்கு இவ்வோசைகள் நுட்பமாகக்கேட்கும் நிலை உண்டாகும்.

**நாதத்தில் விந்து - 382 :** நாதத்திலிருந்து விந்து தோன்றுகின்றது.

**நாதம் - 106 :** சிவபெருமானுடைய நவந்தரு பேதங்களில் ஒன்று. ஒலிநிலை. கிரியாசத்தி

**381 :** ஓசையாகிய நாத தத்துவம்; சூக்குமை நிலை.

**நாத விந்துக்களில் சிவசக்தி - 382 :** நாதம் விந்து ஆகியவற்றிலிருந்து முறையே சிவன் சத்தி தோன்றுகின்றன. நாதத்தில் தோன்றும் சிவனிடத்திருந்து ஞானம் (அறிவு) தோன்றுகின்றது. விந்துவில் தோன்றும் சத்தியினிடத்திருந்து கிரியை (ஆற்றல்) பிறக்கின்றது.

**நாதன் - 721 :** சிவன்.

**நாதன் உரு - 1584 :** சிவபெருமான் கொண்ட மானிட உருவம் குருவின் திருமேனி.

**நாதன் ஒருவன் - 408 :** எல்லோர்க்கும் தலைவனாக விளங்கும் சிவபெருமான்.

**நாதாந்த போதம் - 1610 :** நாத தத்துவம் முடியவுள்ள முப்பத்தாறினையும் கடந்து அதன் மேலாக விளங்கும் சிவஞானம்.

**நாதாந்தம் - 225 :** ஆறந்தங்களில் ஒன்று நாதத்தின் முடிந்த நிலை.

**1422 :** நாத தத்துவத்தின் முடிவாக விளங்கும் சிவம்.

**2370 :** நாத தத்துவத்தின் முடிவு.

**நாபிக்குக் கீழ்ப் பன்னிரண்டங்குலம் - 579 :** கொப்பூழுக்குப் பன்னிரண்டங்குலம் கீழே விளங்கும் மூலாதாரம்.

**நாமத்தார் - 327 :** இறைவன் திருநாமத்தையும் ஐந்தெழுத்தையும் ஓதுபவர்கள்.

**நாமயம் - 2158 :** நாம்மயம், அகங்காரம்.

**நாமேலுறைகின்ற நாயகி - 1130 :** வாகீசுவரி.

**நாயகி - 721 :** சத்தி.

**நாரணி - 1046 :** நாரணனுக்குக் காத்தற்றொழிலை நடத்த மாயா உருவை வழங்கியவள்.

**நால் மூவேழ் - 454 :** (நான்கு மூன்றேழு) இருபத்தைந்து தத்துவங்கள்.

**நால்வகை - 2234 :** விஞ்ஞான கலர் நால்வர் என்று கூறி அவர்களை உடம்பொடு கூடியிருந்தபோதே சிவத்தைப் பொருந்தியுள்ள சீவன் முத்தர் ஒருவர், உடம்பைப் பிரிந்தபின் சிவத்துடன் பொருந்திய உத்தம மத்திம அதம தரத்திலுள்ள மூவர் ஆக நால்வர் என்பர். இருட்புலம்பு (கேவலம்) மருட் புலம்பு, தெருட்புலம்பு, அருட்புலம்பு எனவும் விளக்கம் செய்வர்.

**நால்வகைச்சைவம் - 1419 :** சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம். இப்பாகுபாடு திருமூலர் கண்டது.

**நால்வர் - 553 :** சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் எனும் நந்திகள் நால்வர்.

**745 :** அயன், அரி, அரன், மகேசன் ஆகிய நால்வர்.

**2634 :** மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்னும் நால்வர்.

**நால்வர் பிரான் - 1765 :** பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசன் ஆகிய நால்வர்க்கும் தலைவனாக விளங்குபவன்.

**நால்வேதம் - 227 :** இருக்கு, யசுர், சாமம், அதர்வணம், என்னும் நான்கு வேதங்கள்.

**நாலஞ்சு - 475 :** ஒன்பது பேதங்கள் (உம்மைத் தொகை).

**நாலாம் எழுத்து - 971 :** திருவைந்தெழுத்தினுள் சத்தி வடிவமாக விளங்கும் வகாரம்.

**நாலாம் மரபு - 1011 :** சாயுச்சிய பதம்.

**நாலு - 1704 :** நான்கிதழ்க் கமல வடிவாகிய மூலாதாரம்.

**நாலு கலை - 738 :** ஓம ரூபி, அநந்தை, நாதை, அநாதை ஆகிய நான்கு கலைகள்.

**நாலுடம்பு - 2128 :** தூலம், சூக்குமம், காரணம், மகாகாரணம் என்னும் நால்வகை உடம்பு.

**நாலு புரவி - 2926 :** நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, ஆகியன நான்கு கலைகள். பிராமணர் முதலான நால்வகை வருணத்தார் எனவும் கூறுவர்.

**நாலுவாசல் நடு - 622 :** கண், நாக்கு, மூக்கு, செவி ஆகியவை கூடுமிடம்.

**நாலேழு - 1892 :** நாலும் ஏழுமாகிய பதினொன்று. அவை ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, மனம் 1 ஆகப் பதினொன்றுமாம்.

**நாலேழு வேதாந்த தத்துவம் - 2172 :** பூதங்கள் 5, இந்திரியங்கள் (ஞானம், கன்மம்) 10, தொழில்கள் 10, ஆன்மா 1, பிரமம் 1, பரமாகாயம் 1 ஆக 28 தத்துவங்கள். சாக்கிரத்தில் இருபத்தெட்டுத் தத்துவங்கள் செயற்படுமென்று வேதாந்தம் கூறும்.

**நாலொன் பதின்மர் - 1218 :** முப்பத்தாறு தத்துவங்கள்.

**நாவில் இரண்டு - 723 :** பேச்சு, சுவை ஆகிய நாவின் இரண்டு தொழில்கள். (பேசுதல், சுவைத்தல்).

**நாவின் கிழத்தி - 1122 :** வாகீசுவரி.

**நாற்கோணம் - 1745 :** மூலாதாரம்.

**நாற்பதம் - 2753 :** நாதம், நாதாந்தம், நடனம், நடனாந்தம் ஆகிய நான்கு கூறுகள்.

**நான் எனது - 1474 :** நான் என்னும் அகப்பற்றும், எனது என்னும் புறப்பற்றும்.

**நான்கு - 1 :** நான்கு மறைகளைக் குறிக்கும் உலகினைக் கடந்து நிற்றல், உலகனைத்தும் தன்னுருவில் தோன்றி ஒடுங்க நிற்றல் உலகிற்கு உயிராய் நிற்றல், உலகாய் நிற்றல் என்னும் நான்கு இறைநிலைகளைச் சுட்டுவதாகவும் கொள்ளப்பெறும். (குறிப்பு மொழி). (விசுவாதிகன், விசுவகாரணன், அந்தர்யாமி, விசுவரூபி).

**நான்கு பனை - 2868 :** மூலாதாரத்தில் அமைந்து காணப்படும் நான்கு இதழ்கள் (உருவகம்).

**நான்மறை ஓதி - 322 :** இருக்கு, யசுர், சாம, அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும் ஓதி உணர்ந்தவனாகிய பிரமன்.

**நிசாசரி - 1097 :** இருளில் சஞ்சரிப்பவள்.

**நித்தசங்காரம் - 425 :** நாள் ஒடுக்கம். ஒவ்வொரு நாளும் நிகழ்வது. உறக்கத்தில் அறிவு அடங்கியிருக்கும் நிலை.

வினைப்போகங்களைத் துய்த்த ஆன்மா இளைப்பாறற் பொருட்டுச் சில கருவிகள் மட்டும் செயற்பட, ஏனையவை செயலற்று மடங்கியிருப்பதாகிய நிலை.

**நித்தர் - 125 :** அழிவில்லாதவர்.

**நிமலர் - 125 :** மலச்சார்பால் நிகழும் வினைமாசற்றவர்.

**நிமலன் - 394 :** இயல்பாகவே மலமற்றவனாகிய சிவபெருமான்.

**நியமத்தன் - 2116 :** தனு, கரண, புவன, போகங்களை, உயிர்கட்கு நியமிக்கின்றவனாகிய சிவபெருமான்.

**நியமங்கள் - 72 :** வரையறுக்கப்பட்ட கடமைகள்.

**நியமம் - 224 :** செய்யத்தக்க கடமைகள்.

**506 :** அட்டாங்கயோக உறுப்பினுள் ஒன்று. பெற்றதற்குவத்தல், பிழம்பு நனிவெறுத்தல், கற்பன கற்றல், கழிகடுந்தூய்மை, பூசனைப் பெரும்பயன் ஆசாற்களித்தல் முதலியன வழுவாதொழுகுதல் நியமமாகும்.

**555 :** நன்றாற்றல்.

**நியாசம் - 550 :** நெஞ்சு, தலை, குடுமி, கண், போர்வை, கருவி என்னும் உடலுறுப்புக்களைத் தேவதா பாவம் செய்து தொடுதல்.

**நிரதிசயானந்தப்பேருடையாள் - 78 :** உயர்வற உயர்ந்த பேரானந்தப் பெயருடைய சிவானந்தவல்லி.

**நிரதிசயானந்தம் - 78 :** உயர்வற உயர்ந்த பேரானந்தம்.

**நிரம்பிய ஈரைந்து - 596 :** உடம்பில் நிறைந்துள்ள பத்து வாயுக்கள். அவை பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆகும்.

**நிராகாரம் - 1550 :** வடிவமின்மை, அருவம்.

**நிராபரன் - 3008 :** ஆண்மையுடைய இடபத்தை ஊர்தியாகக் கொண்ட சிவபெருமான்; ஆன்ம எல்லை கடந்த சிவன்.

**நிராமயத்தோர் - 102 :** பிறவிப்பிணியற்ற சித்தர்கள்.

**நிராமயர் - 125 :** நோயற்றவர். தூய இன்பத்திலுறைபவர்.

**நிரானந்தம் - 2750 :** நித்திய இன்பம்.

**நிருவாணம் - 1450 :** நிருவாண தீக்கை. மந்திரம், பதம், வன்னம் தத்துவம், புவனம், கலை ஆகியவற்றையுணர்ந்து தத்துவங்களைக் களைவது.

**2864 :** முத்தி. செயலறுகை.

**நிலவாணி ஐந்து - 2080 :** நிலம், நீர், தீ, வளி, வான் என்னும் ஐம்பூதங்கள்.

**நிலையுடையான் கழல் - 292 :** உறுதி பயக்கும் நிலையான பொருளாக விளங்கும் இறைவனுடைய திருவடி ஞானம்.

**நின்மலன் - 350 :** மலமற்றவனாகிய சிவபெருமான்.

**நின்மலாவத்தை - 2304 :** மலம் தன் வலி ஒடுங்கிய நிலை. ஆன்மா சிவத்தைச் சார்ந்து தன்னையுமறந்து வியாபகமாக இருக்கும் நிலை. எண்ணம் சொல் செயல் எதுவும் நண்ணாத தூய நிலை.

**நின்மலி - 1209 :** மலமற்றவன்.

**நினைவு - 46 :** சாக்கராவத்தை.

**நீ யதுவானாய் - 2577 :** நீ அச்சிவமாயிருக்கின்றாய். அது நீ ஆனாய் என்னும் பொருள்படும் தத்துவமசி என்னும் மகாவாக்கியம், வைதிக ஆகமங்களில் த்வம் தத் அசி (தொந்தத்தசி) என்று மாற்றி உரைக்கப்படும். இது வேதாந்த சித்தாந்த சமரசம் எனப்படும் என்றும், அதனையே இங்குத் திருமூலர் நீ அதுவானாய் என்று கூறியுள்ளார் என்றும் கருத்துரைக்கப்படுகின்றது.

**நீர் ஐந்து - 2025 :** கேட்டல், உறுதல், காண்டல், சுவைத்தல், முகர்தல் ஆகிய ஐந்து.

**நீர் பாலாதல் - 2401 :** நீர் பாலொடு சேர்ந்தவிடத்து அப்பாலே ஆதல் போலச்சீவன் சிவத்தொடு கலந்தவிடத்து அச்சிவமே யாகுதல். ஆன்மா பிரமத்துடன் சேர்ந்து பிரமமாதல் வேதாந்த உண்மை.

**நீர்மை ஐந்து - 2025 :** பஞ்சேந்திரியங்களின் வியாபாரம். இந்திரியங்கள். பொறிப்பயனை அனுபவிக்கும் தன்மை.

**நீல நிறனுடை நேரிழையாள் - 734 :** நீல நிறத்தொடு விளங்கும் சத்தி.

**நீலாங்கமேனியள் - 77 :** நீல நிறமான திருமேனியையுடைய சிவகாமி அம்மை. 'நீல மேனி வாலிழை' என்பது சங்க இலக்கியம் (ஐங்குறுநூறு - கடவுள் வாழ்த்து - 1).

**நீள்நெறி - 1901 :** பிராணவாயு மேற்செல்லு நெறி.

**நூல் - 230 :** 1) மார்பிலணியும் பூணூல் (கார்ப்பாசம் = பருத்திப் பஞ்சுநூல்) 2) மறைநூல்.

**நூற்றெட்டு உருத்திரர் - 2231 :** இந்திர திசையில் கபாலி முதல் 10, அக்கினி திக்கில் உருத்திரன் முதல் 10, இயம திக்கில் யாமியன் முதல் 10, நிருதி திக்கில் நிருதி முதல் 10, வருண திக்கில் பலன் முதல் 10, வாயு திக்கில் சீக்கிரன் முதல் 10, குபேர திக்கில் நிதீசன் முதல் 10, ஈசான திக்கில் வியாத்தியாதிபன் முதல் 10, அண்டகடாக ஒட்டிற்குக் கீழே விஷ்ணு திக்கில் அனந்தன் முதல் 10, அண்டகடாகத்தின் மேலே பிரம திக்கில் சம்பு முதல் 10, இந்திரன் முதல் திக்குப்பாலகர் எண்மர் ஆகிய நூற்றெட்டு உருத்திரர்.

நூறு மறுபதும் - 729 : நூற்றறுபது மாத்திரை. நூறு நாடிகளும் அறுபது தாத்துவிகங்களும் என்றும் கூறப்படும்.

நெடியான் குறுமை செய் நேசம் - 3013 : திருமால் காத்தல் தொழிலால் இச்சை பெருகுவதற்குரிய பற்றுக்கள் (ஆகாமிய வினை).

நேசித்த காயம் - 1574 : அதுவே தான் என்று கருதி விரும்பியிருந்த உடம்பு.

நேதத்துவம் - 2795 : பிரிப்பது.

நேயாந்தம் - 2594 : ஞேயப்பொருளாகிய சிவதுரியாதீதம்.

நேரிழை நாமம் - 1069 : தேவியின் திருமந்திரம். ஹ்ரீம்.

நைவேத்தியம் - 1007 : தெய்வத்திற்குப் படைக்கும் அமுது.

பக்குவன் - 1680 : தகுதி வாய்ந்த மெய்க்குரு.

பகலும் இரவும் பயில்கின்ற பூசை - 1855 : புறப்பூசை. வரையறைப்பட்ட காலங்களில் நின்று செய்யப்படுவது.

பகலும் இரவும் பயிலாத பூசை - 1855 : அகப்பூசை. காலநிலை கடந்து எப்போதும் அகத்தே செய்யப்படுவதாகிய ஞானபூசை.

பகிரண்டம் - 2297 : புறத்தே காணப்படும் அண்டம்.

பங்கயம் - 558 : பத்மாசனம் (தாமரை இருக்கை). வலத் தொடையின் மேல் இடப் பாதத்தையும் இடத் தொடையின் மேல் வலப் பாதத்தையும், உள்ளங்கால் மேல் நோக்கிவிரிய இழுத்து வைத்து, மலர்ந்த பாதங்களின்மேல் இரண்டு கைகளையும் ஒன்றன் மேலொன்றாக வைத்துக்கொண்டு நிமிர்ந்திருத்தல்.

பச்சிலை - 252 : சிவபூசைக்குரிய வில்வம் முதலிய பசிய இலை.

**பசு - 49 :** பாசம் என்னும் மலத்தாற் கட்டுண்டு கிடக்கும் ஆன்மாக்கள். பசு என்பது கட்டப்பட்டது என்னும் கருத்தினது. சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களில் (திரிபதார்த்தங்கள்) ஒன்று. அநாதியானது.

**268 :** பசுவாகிய விலங்கு (விலங்கியல்பைக் குறிக்கும்).

**2015 :** வினையினால் கட்டுண்ட உயிர்கள். மனிதர்கள்.

**பசு இலக்கணம் - 2005 :** உயிர் இலக்கணம். ஆன்ம இலக்கணம்.

**பசுத்துவம் - 1438 :** ஆன்ம போதம். உயிரறிவு.

**பசு பாசம் - 474 :** பசுத்தன்மையும் பாசத்தன்மையும் (உம்மைத்தொகை).

**2066 :** ஆன்மாவின் சகச மலம்.

**பஞ்சத் துரோகம் - 1684 :** பொய், கொலை, களவு, கள், காமம் என்னும் ஐந்து பாதகங்கள்.

**பஞ்சபாதகன் - 507 :** கொலை, களவு, பொய், கள்ளுண்டல், குரு நிந்தனை ஆகிய ஐந்துவகைக் கொடுஞ்செயல்களும் செய்வோன்.

**பஞ்சலோகம் - 1917 :** பொன், வெள்ளி, செம்பு, ஈயம், இரும்பு ஆகிய ஐந்து உலோகங்களின் கலப்பு.

**பஞ்சாங்கம் - 1007 :** கைகள் முழங்கால்கள், சிரம் ஆகிய ஐந்து உறுப்புக்களும் நிலந்தோயக்கிடந்து வணங்கும் வணக்கம். பஞ்சநமக்காரம்.

**பஞ்சாந்தகன் - 2399 :** தனித்தனியே ஐந்து கலைகளின் முடிவிடத்திருப்பவன்.

**பட்டிப்பசு இருபத்துநாலு - 2874 :** ஆன்மதத்துவங்கள் இருபத்துநான்கு (உருவகம்).

**படகடம் - 1930 :** ஆடையும் குடமும். இதில் படத்திற்கு நூல் காரணம்; ஆடை காரியம்; கடத்திற்கு மண் காரணம்; குடம் காரியம். இவை கலைகள் காரணமாயும், பிரபஞ்சம் காரியமாயும் அமையும் நிலைக்குக் காட்டப்பட்ட மேற்கோள்கள்.

**படமாடக்கோயில் - 1857 :** துகிற் கொடிகள் அசையும் ஆலயங்கள். தத்துவங்களைப் படம்போலக் காட்டும் மடங்கள் அமைந்த கோயில்.

**படிக்கதவு - 810 :** கேசரி முத்திரையாகிய தடை.

**படையார் அழல்மேனிப்பதி - 547 :** சூலப்படையுடைய செம்மேனிப் பெருமானாகிய சிவனுடைய கயிலாயமலை.

**பண்டைப்பாழ் - 429 :** மலங்கள் நீங்காத நிலையில் ஊழிகள் தோறும் ஒடுங்குமிடம்.

**பண்ணாமல் நின்றது - 600 :** சுயம்பு மூர்த்தியாக விளங்கும் சிவபரம் பொருள்.

**பத்தர் - 1446 :** இறை பத்தியுடையவர்.

**பத்தி - 231 :** இறையன்பு.

**பத்திமை - 284 :** மெய்யான பத்தி.

**பத்திரம் - 1718 :** ஆனேறு. இடபம். இதுவும் இலிங்கமாகக் கொள்ளப்படும்.

**பத்திரலிங்கம் - 1718 :** பலிபீடம் இடப (ரிஷப) லிங்கம். தாமரை இதழ் வடிவிலமைந்த பலிபீடம் பத்திரலிங்கம் என்றும் கூறுவர்.

**பத்திராசனம் - 560 :** யோக இருக்கை வகையுள் ஒன்று. வலக்காலை இடப்பக்கத்தொடையின் மேல் வைத்து, முழந்தாள்களில் இருகைகளையும் நீட்டி உடம்பை நேராக நிமிர்த்தி இருத்தல்.

**பத்து -1031 :** தமிழில் பத்து எனும் எழுத்தினை 'ய' என்று எழுதுவர். இங்குப்பத்து என்பது யகரத்தை உணர்த்தி அது ஆன்மாக்களைக் குறிப்பதாக உள்ளது.

**756 :** பத்து அக்கரங்கள் கூடுமிடம். (பத்து = அ+உ) அகர உகரங்கள் என்று கூறப்படும்.

**பத்து எனும் பாரம் - 451 :** பத்து மாதம் (கருப்ப காலம்) சுமக்கும் சுமை.

**பத்துப்பெரும்புலி - 2888 :** இடைகலை, பிங்கலை, சுழுமுனை, சிங்குவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குரு ஆகியன தசநாடிகள். (உருவகம்).

**பத்து வகை - 835 :** பத்துத்திசைகள்.

**பத்தெட்டு - 2926 :** பத்தக்கூடிய எட்டு. அட்டபாசம். அவை: குலம், நாணம், சிலம், பலம், ஐயம், பயம், தயவு, மோகம் ஆகிய எட்டு.

**பத்தொடு பத்து - 2176 :** மெய், வாய், கண், மூக்குச் செவியாகிய ஞானேந்தி `யம் 5, வாய், கால், கை, எருவாய், கருவாய் ஆகிய கன்மேந்திரியங்கள் 5, அவற்றின் தொழில்களாகிய ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம், பேசல், நடத்தல், கொடுத்தல், கழித்தல், களித்தல் ஆகிய பத்தும் ஆக இருபது.

**பத்மாசனம் - 559 :** இரு கால்களையும் முயன்று தொடையில் சேர்த்து, இரு தொடை மத்தியிலும் இரண்டு கைகளையும் ஒன்றன்மேல் ஒன்றாக மலர்ந்த பாவனையில் வைத்து, மூக்கு நுனியில் கண்பார்வையை அசைவற நிறுத்தி மார்பில் மோவாய்க்கட்டையை வைத்து வாயுவை எழுப்பியிருத்தல். யோகநிலைக்கான இருக்கைகளில் ஒன்று. தாமரை இருக்கை.

**பதஞ்சலி - 67 :** நந்தியம் பெருமான்பால் உபதேசங்கேட்ட எண்மரில் ஒருவர். தில்லையில் அம்பலக்கூத்தன் ஆடும் திருநடங்கண்டு விளங்கும் முனிவர்.

**பதஞ்செய்யும்பார் - 423 :** ஆன்மாக்களுக்கு இன்பத்தைச் செய்யும் உலகம்.

**பதம் - 80 :** தெய்வப்பதவி.

80 : பாதம். திருவடி.

2184 : சொல். (பதம். 81).

**பதம் எட்டு - 2737 :** உருவ அருவ பேதமாக விளங்கும் சாலோக, சாமீப, சாருப, சாயுச்சிய பதங்கள் எட்டு.

**பதமுத்தி மூன்று - 2525 :** சாலோகம், சாமீபம், சாருபம் ஆகிய மூன்று முத்திகள். சத்தியலோகம், வைகுந்தம், கயிலாயம் என்றும் கூறப்படும்.

**பதி - 18 :** வழி.

115 : இறை. தலைவன். சைவ சித்தாந்தங்கூறும் முப்பொருள்களில் (திரிபதார்த்தங்கள்) ஒன்று.

**பதினாறு - 2782 :** அட்டதிக்கும், அட்டமூர்த்தங்களுமாகிய பதினாறு.

**பதினெட்டு - 2215 :** பத்துவாயுக்களும், புரியட்டகமும் ஆகிய பதினெட்டுங் கூடிய உடல்.

**பதினெட்டுப்பாடை - 59 :** பதினெட்டு மொழிகள். அவையாவன: சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கு, கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கவுடம், கோசலம், தமிழ்.

**பதினெண்கணன் - 835 :** தேவர், அசுரர், முனிவர், கின்னரர், கிம்புருடர், கருடர், இயக்கர், இராக்கதர், கந்தருவர், சித்தர், சாரணர், வித்தியாதரர், நாகர், பூதர், வேதாளர், தாராகணம், ஆகாச வாசிகள், போக பூமியர் ஆகிய பதினெண் வகையினர்.

**பதினோராந்தானம் - 2299 :** துவாதச கலையில் பதினோராவது கலையாகிய சமனை. அதற்குரிய இடம் சிரசின் மேலாகும்.

**பதிவலியில் வீரட்டம் எட்டு - 339 :** சிவபெருமான் தன் வலியால், வீரம் விளங்குமாறு முரணியோரை அட்டு, அழித்து விளங்கும் எட்டுத்திருத்தலங்கள். இறைவன் மறக்கருணை காட்டி ஆட்கொண்ட இடங்கள். அவை திருவதிகை, திருக்கடவூர், திருக்கொறுக்கை, வழுவூர், திருக்கோவலூர், திருப்பறியலூர், திருக்கண்டியூர், திருவிற்குடி. இவ்விடங்களில் முறையே நிகழ்த்தப்பெற்ற வீரட்டங்கள் வருமாறு: திரிபுரத்தினை எரித்தது,காலனை உதைத்தது, காமனைக்காய்ந்தது, யானையை உரித்தது, அந்தகாசுரனை அழித்தது, தக்கன் வேள்வி தகர்த்தது, பிரமன் சிரம் அரிந்தது, சலந்தராசுரனை அழித்தது. இவை அட்டவீரட்டம் என்றும், இவை நிகழ்ந்த இடங்கள் அட்ட வீரட்டானங்கள் என்றும் கூறப்படும். வீரட்டச் செயல்களைத் தத்துவமாக்கித் திருமந்திரம் விளக்குகின்றது.

**பந்தமும் வீடும் - 2045 :** பாசமும், முத்தியும்.

**பயன் மூன்று - 718 :** அறம்பொருள் இன்பம் ஆகிய மூன்று. இம்மை, மறுமை, வீடு எனவும் கூறுவர்.

**பயிர் - 429 :** உலகமாகிய பயிர்.

**பயோதரி - 2484 :** அமுதேசுவரி; அமிழ்தன்னை.

**பரகாயப் பிரவேசம் - 640 :** வேண்டும் உடம்புகளில் புகுந்து நிற்கும் தன்மை.

**பரங்கள் - 891 :** தத்துவக் கூட்டத்தைக் கடந்த ஆன்மாக்கள்.

**பர சாயுச்சியம் - 1442 :** சிவனேதானாம் முத்திநிலை. உயர்வற உயர்ந்த பெருநலநிலை.

**பரசு பதி - 2672 :** சிவபெருமான். பரவப்பெறும் தலைவன்; பரசு என்னும் ஆயுதத்தையுடைய பதி.

**பரஞ்சுடர் - 319 :** மேலான ஒளிமயமாக விளங்கும் இறைவன் (சிவபெருமான்).

**பர போகம் - 501 :** மேலான பதவாழ்வு.

**பர போதம் - 2453 :** சிவஞானம்.

**பரம் - 111 :** தற்சொரூப நிலையாகிய மிக உயர்ந்த நிலை.

**1420 :** சிவம்.

**2945 :** தொம்பதம் என்னும் சொல்லின் பொருளாக விளங்கும் சீவன்.

**பரம் பரமாகும் பரம் - 2449 :** மிகவும் மேலான ஆன்மா.

**பரம் பரன் - 48 :** மேலானவற்றிற்கெல்லாம் மேலானவனாக விளங்கும் முழுமுதற்கடவுளாம் சிவபெருமான்.

**பரமன் - 3 :** முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான்.

**298 :** சிவபெருமான்.

**பர முத்தி - 2474 :** ஆன்மா தன் செயலற்று அருளின் வழி நிற்கும் நிலை. ஆன்மா தத்துவங்களை விடுத்துப் பரநிலையில் தங்கும்போது அடைவது.

**பர வாதனை - 1174 :** பரவாசனை. அனைத்தையும் சத்திமயமாக உணர்தல். உலகம் உடல் என்பனபோன்ற நிலைகள் நீங்க எல்லாம் சத்தியே என உணரும்நிலை. இது மேனிலைக்கு வாயிலாதலின் பரவாதனை எனப்பட்டது.

**பர விந்து - 1813 :** சிவசத்தி.

**பரவின்பினன் - 2057 :** பேரின்பவடிவினன்.

**பரன் - 61 :** யாவர்க்கும் மேலானவனாக விளங்கும் சிவபெருமான்.

**பராசத்தி - 550 :** சிற்சக்தி அல்லது பிராண வாயு.

**பராபர நந்தி - 1595 :** தெய்வங்கட்கு மேலாக விளங்கும் சிவமாகத் திகழும் குருநாதன்.

**பராபரம் - 61 :** பரம் அபரம் = பராபரம். இது சிவஞானம் எனப்படும். பரஞானத்தையும் கலைஞானம் எனப்படும். அபர ஞானத்தையும் குறிக்கின்றது.

**381 :** விழுமிய பரம்பொருளாக விளங்கும் சிவபெருமான்.

**2945 :** தத்பதம் என்னும் சொல்லின் பொருளாக விளங்கும் ஈசன்.

**பராபரை - 381 :** பரம்பொருளுக்கு உடலாய் அமையும் . பேரறிவுப் பொருளாகிய பராசத்தி.

**பராமயம் - 2076 :** பரை மயம். சத்திமயம் - சிவமயம் என்றும் கூறப்படும்.

**பராவத்தை - 2254 :** பரை அல்லது சத்தியோடு கூடியுள்ள நிலை. அருளில் தோயும் நிலை.

**பரானந்த சித்தி - 334 :** சிவானந்தப்பேறு.

**பரிசனவேதி - 2054 :** பிற உலோகங்களைப் பொன்னாக மாற்றும் மருந்து.

**பரியங்க யோகம் - 825 :** கட்டிலில் பெண்ணுடன் கூடியிருந்து போகத்தை யோகமாக்குதல்.

**பருந்தும் கிளியும் - 2896 :** அதர்மமாகிய பருந்தும் தர்மமாகிய கிளியும் (உருவகம்).

**பருவூசி ஐந்த - 183 :** பருமையான ஊசியைப்போன்ற ஐம்பொறிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி

**பரை - 49 :** ஆன்மாக்களுக்கு அருள்புரிதல் கருதி விளங்கும் சிற்சத்தியாகிய உமையம்மை.

**381 :** பரத்திலிருந்து தோன்றியது பரை (சத்தி).

**பரை ஆயம் - 90 :** ஆதி, திரோதாயி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி முதலிய சத்திகளின் கூட்டம்.

**பரோதயம் - 1046 :** சிவந்தோன்றப்பெறுதல் பரை வெளிப்பாடு.

**பரோபாதி ஏழு - 2501 :** ஏழு காரிய உபாதிகள். இவற்றைச் சுத்தவித்தை, ஈசுவரன், சதாசிவன், விந்து, நாதம், சத்தி, சிவன் ஆகிய ஏழு என்றும், எல்லாம் அழித்தல், எல்லாம் படைத்தல், எல்லாம் அறிதல், எல்லாவற்றிற்கும் காரணமாதல், எங்கும் வியாபித்திருத்தல், எல்லாம் தானாதல், எல்லாம் காத்தல் என்றும் விளக்குவர்.

**பல்லி - 293 :** பல்லி என்னும் உயிரினம். குறிப்பால் உலகியலைப்பற்றி அதனை விடாது நிற்பவர்களைக் குறிக்கின்றது.

**பலயோகம் - 631 :** மந்திரயோகம், பத்தி யோகம், ஞானயோகம், கருமயோகம் முதலிய யோகங்கள்.

**பலவன்னத்தி - 1046 :** பலவாய நிறத்தினை உடையவள். பால்போலும் தூய வெண்ணிறத்தள் என்றும் கூறுவர்.

**பலி - 2649 :** திருவமுதாகிய பலி (நைவேத்தியம்).

**பலிபீடம் - 1718 :** சிவாலயத்தில் திருநந்திக்கு முன்னால் விளங்கும் பலியிடுமிடம். இஃதும் இலிங்கமாகக் கருதப்படும்.

**பவகதி - 1536 :** பிறவியிற் சேர்ப்பிக்கும் நெறி.

**பவயோகம் - 1882 :** பிறப்பிற்குக் காரணமாகிய மலச்சேர்க்கை.

**பவன் - 1560 :** பரமசிவன்.

**பவன் இவன் - 2620 :** சிவமாகிய ஆன்மா.

**பவுதிகம் - 1806 :** பூதகாரியம்.

**பழமலம் - 1432 :** தொன்மையான மலம்.

**பழமறைதேடி - 578 :** பழமையான வேதங்கள் அனைத்தும் தேடிக் காணும் சிவபெருமான்.

**பள்ளச்செய் - 2871 :** சுழுத்தி (உருவகம்).

**பளிங்கிற் பவளம் பதித்தான் - 114 :** செம்மேனிப் பெருமானாய சிவபெருமான் பளிங்குபோலும் ஆன்பாவில் தன் பவளம் போலும் திருவடிச் சோதியினைப் (சிவஞானம்) பொருந்தச் செய்தான்.

**பற்றவுவாய் நின்ற பற்று - 259 :** யாவர்க்கும் பற்றுக்கோடாய் நின்ற பரம்பொருள் (சிவபெருமான்).

**பற்றிரண்டு - 237 :** அகப்பற்றும் புறப்பற்றுமாகிய இருவகைப் பற்றுக்கள். 'யான் எனது என்னும் செருக்கு' என்று கூறும் திருக்குறள் (துறவு-6).

**பறவைகள் - 295 :** ஐம்புலப்பறவைகள் (உருவகம்). 'இந்திரியப்பறவை இரிந்தோட' என்பது திருமுறை (திருவாசகம் - திருத்தோணோக்கம் - 14).

**பன்னான்கு - 2142 :** பதினான்கு தத்துவங்கள். வாயுக்கள் பத்து, அந்தக் கரணங்கள் நான்கு ஆகப்பதினான்கு தத்துவங்கள். சொப்பனத்துக்குரியன.

**பன்னிரண்டானை - 577 :** பன்னிரண்டு மாத்திரை ஓடும் பிராணன்.

**பன்னிருகால் - 2542 :** சொல்லப்பெறுகின்ற பகலும் இரவுமாகிய இரண்டு காலங்கள்.

**பனிவரை எட்டு - 423 :** கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்னும் எட்டுமலைகள்.

**பாகல் - 2869 :** (பாகற்கொடி) வைராக்கியம் (உருவகம்).

**பாகன் - 457 :** சிவன் (செலுத்துபவன்).

**பாசம் - 49 :** தொடக்ககாலமுதல் செம்பிற் களிம்பு போல அமைந்து, ஆன்மாக்களைப் பிணித்து நிற்கும் மூவகை மலங்கள். சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களில் (திரிபதார்த்தங்கள்) ஒன்று. அறியும் இயல்புடைய ஆன்மாக்களை அறியவொட்டாது அஞ்ஞானத்தில் திளைத்து நிற்கும் மும்மலங்கள்.

**115 :** உயிரின் அறிவை அநாதியே மறைத்துள்ள ஆணவம், கன்மம், மாயை என்னும் மூவகைப்பிணிப்புக்கள்.

**பாட்டவி - 1824 :** பாடல்களாகிய அவி (உணவு).

**பாடவல்லார் - 543 :** பண்ணொடு இறைவன் திருநாமம் பாடவல்லவர்கள். கிரியை நெறியாளர்.

**பாண்டம் - 2733 :** பாண்டரங்கம். திரிபுரங்களை அழித்த நிலையில் அந்நீற்றினை அணிந்து ஆடிய சிவநடனம்.

**பாண்டரங்கம் - 2776 :** சிவபெருமான் திரிபுரம் எரித்த நிலையில் ஆடிய நடனம்.

**பாத்திரம் - 501 :** கொள்கலன். அரும்பொருள் வைக்குமிடம்.

**பாம்பு - 293 :** பாம்பாகிய பிராணி. குறிப்பால் உடலகத்து விளங்கும் குண்டலினி ஆற்றலைக் குறிக்கும்.

**2891 :** காமம்.

**பாம்பு இரண்டு எட்டு - 728 :** உகார அகார வடிவமான உச்சுவாச நிச்சுவாசம். (இரண்டு = உ; எட்டு = அ)

**பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தி - 179 :** கங்கையாறு பாய்ந்து மறைந்த பரவிய சடைமுடியினையுடைய சிவபெருமான்.

**பார்த்தல் - 1778 :** சட்சு தீட்சை. தீட்சை வகையுள் ஒன்று. குரு சிடனைத் தன் நயனத்தால் பார்த்தல் மூலமாகத் தீட்சை செய்வது.

**பார்ப்பதி - 1067 :** பூமி தத்துவநாயகி.

**பார்ப்பதி பாகன் - 1037 :** உமையொருபாகன். பூமி தத்துவநாயகியாகிய உமையம்மையினைத் தன் பாகத்திற் கொண்ட சிவபெருமான்.

**பார்ப்பார் - 227 :** அந்தணர். பதார்த்தம் (உலகியற் பொருள்) பார்க்காது பரமே பார்த்து விளங்குபவர்.

**பாரங்கி நாலு -1284 :** பார், நீர், தீ, வாயு ஆகிய நான்கு.

**பால் - 246 :** வெண்ணிற ஒளியாய் விளங்கும் அமுதம்.

**பாவடி - 376 :** கீதவடிவமான மந்திரங்களைக் கொண்ட வேதம்.

**பாவவினாசன் -1723 :** முற்பிறவிகளில் ஈட்டித் தொகுத்த வினைகளை அழிப்பவன். (சிவபெருமான்).

**பாழ் - 429 :** குணங்குறிகளற்ற நிட்கள சிவம்.

**பாழ் செய் இரண்டு - 2871 :** இன்பமில்லாத சாக்கிரம் சொப்பனம் ஆகிய இரண்டு.

**பாற்பசு ஐந்து - 2883 :** பஞ்சேந்திரியங்களாகிய கறவைப்பசுக்கள் ஐந்து (உருவகம்).

**பானு அதிகண்டம் - 1958 :** சூரியமண்டலம். (நாபிக்கு மேல் இதயம் வரை)

**பானை - 193 :** உடம்பாகிய பானை (உருவகம்).

**பிங்கலை - 573 :** வல நாடியில் உயிர்க்கும் நிலை.

**பிஞ்ஞகன் - 25 :** அழகிய தலைக்கோலமுடைய சிவபெருமான். பிஞ்ஞகம் என்பது தலைக்கோலம். திருமுடியும் அம்முடிமேல் அழகிய வெண்பிறையும் குளிர்ந்த கங்கை நீரும்உடையராதல் பற்றிச் சிவபெருமான் பிஞ்ஞகன் எனப்பட்டார்.

**பிண்ட ஒளி - 2806 :** உடம்பிலுள்ள ஆன்ம ஒளி.

**பிண்டங்கடந்த பிறவிச் சிறுமையன் - 3006 :** பிறவியில் பிறக்கும் பந்தம் இல்லாதவன். பிறப்பிலி.

**பிண்டம் - 466 :** உடம்பு.

**பிண்டலிங்கம் - 1726 :** மானிட உடலே சிவலிங்கமாக விளங்குவது.

**பிண்டாதித்தன் - 1985 :** உடம்பகத்தே விளங்கும் சூரியன்.

**பிண்டாலம் வித்து - 3025 :** பிண்டம் எனப்படும் உடம்பாகிய ஆலமரவிதை.

**பிதிர்பதம் - 1902 :** பிதிர் உலகம்.

**பிரகிருதி - 2075 :** பித்தசுபாவம்.

**பிரசாதம் -2569 :** குருவின் கருணை.

**பிரசாபதி - 340 :** தக்கன். பிரமனின் மானச புதல்வர்களில் ஒருவன். உமையம்மையைத் தன் புதல்வியாகவும், சிவபெருமானை மருமகனாகவும் பெறவேண்டித் தவஞ்செய்து, வரம்பெற்று அவ்வாறே எய்தினான். பின்னர்ச்சிவபெருமானோடு மாறுபட்டு, சிவனை நீக்கித் திருமால் முதலியவர்களைத் தலைவராகக் கொண்டு யாகம் செய்தான். யாகத்திற்கு வந்த தன் மகள் உமாதேவியை ஏற்காமல் இகழச் சிவபெருமான் சினந்து வீரபத்திரதேவரை அனுப்பி யாகத்தை அழிக்கச்செய்தார். சிவபெருமான் தக்கன் தலையைத் தடிந்து பின்னர் ஆட்டின்

தலையினைப் பொருத்தியருளினார். தக்கன் சிரங்கொய்த இந்நிகழ்ச்சி திருப்பறியலூரில் நிகழ்ந்ததாகக் கூறப்படுகின்றது.

**பிரத்தியாகாரம் - 552 :** தொகைநிலை, ஐம்பொறிகளைத் தத்தம் புலன்கள் மீது செல்லாது தடுத்து ஒருங்கு நிறுத்தல். அட்டாங்க யோகத்தில் ஒன்று.

**பிரதிட்டை - 1315 :** தெய்வத்தை நிறுவி நிலை நிறுத்துகை.

**பிரணவக்கூவம் - 2454 :** பிரணவமாகிய கிணறு (உருவகம்). ஓங்காரவட்டம்.

**பிரணவ சமாதி - 2675 :** ஓங்காரத்தில் ஒடுக்கமாவது. பிரணவப் பொருளுணர்ந்து, நேயப்பொருளோடு அடங்கியிருத்தல்.

**பிரணவம் - 225 :** ஓம் என்னும் ஓங்கார மகாமந்திரம். விந்து நாதங்களின் சேர்க்கை நிலை, கட்புலனாக எழுதப்படும் வரிவடிவில் ஓம் எனவும், பிள்ளையார் சுழி (உ) எனவும், வழிபடும் குறியாக நிறுத்தப்படுங்கால் சிவலிங்கம் எனவும், ஒலி எழுத்தாகச் சொல்லப்படுங்கால் ஓங்காரப் பிரணவம் எனவும் தொன்றுதொட்டு வழங்கப்படும். 'எல்லா மறைகளும் எந்தமொழியைக் கூறுகின்றனவோ, தபங்களெல்லாம் எந்தச்சொல்லை கிளக்கின்றனவோ, பிரமச்சரியத்தொழுகுவோர் எந்தச்சொல்லை விழைகின்றனரோ, அந்தச்சொல்லைச் சுருக்கமாக ஓம் என்று உனக்குச் சொல்கின்றேன் ' என்கின்றது கடவல்லி உபநிடதம். அகார உகார மகாரங்களின் சேர்க்கையே ஓம். சிவமந்திரமாகிய திருவைந்தெழுத்திற்கும் பிரணவத்திற்கும் வேறுபாடில்லை என்பர். ஓம் என்னும் பிரணவத்தின் விரியே திருவைந்தெழுத்து என்றும், திருவைந்தெழுத்தின் தொகையே ஓம் எனும் பிரணவம் என்றும் கூறப்படுகின்றது.

**பிரம சடங்கு - 991 :** பிரமத்தை அறியும் காரியம்.

**பிரமம் - 228 :** பரம்பொருள்நிலை. சிவபூரண அனுபவ நிலை.

**பிரம மித்தியாதரர் - 1435 :** பிரம வித்தையை அறிந்தவர்கள்.

**பிரமீசர் - 62 :** பிரமனாகிய கடவுள். சிவபரம்பொருளின் உருவத் திருமேனி நிலைகளில் ஒன்று. படைத்தல் தொழிலுக்குரியது.

**பிரமன் - 69 :** திருமூலர்பால் திருமந்திர உபதேசங் கேட்ட எழுவருள் ஒருவர்.

**341 :** அச்சுதன். அழிவில்லாதவனாகிய திருமால்.

**பிரமன் செய் பாசம் - 3013 :** படைப்புக்கடவுளாகிய பிரமன் ஆன்மாவை உலகில் பிறக்கச்செய்வதற்கான சஞ்சித வினை.

**பிரளயம் - 362 :** ஆன்மாக்கள் அனைவரும் கறங்கும் சகடமும் போன்று சுழல்கின்ற நிலையிலிருந்து சற்றுக் களைப்பாறச் சர்வ சங்காரச்செயல் புரிவது.

**2231 :** பிரளயாகலர்.

**பிராகாமியம் - 683 :** விருப்பம்போல் தடையின்றி எல்லா இன்பங்களையும் பெற்றிருத்தல். அட்டசித்திகளில் ஒன்று.

**பிராணன் - 2005 :** உயிர்.

**பிராணாயாமம் - 552 :** வளிநிலை. இரேசகம், கும்பகம், பூரகம் என்னும் மூவகையாய்ச் சுவாசத்தை அடக்கியாளும் யோகமுறை.

உந்தியிலிருந்து எழும் இடைகலை, பிங்கலை என்னும் இருவகை நாடிகளின் வழியாகச் செல்லும் காற்றினைப் புறத்தே செல்லாமல் தடுத்து அகத்தே சுழுமுனை நாடி வழியாகச் செல்லும்படி நிறுத்தும் பயிற்சி.

**பிராத்தி - 679 :** எல்லாப் பொருளையும் தன்பால் தருவித்தல்.

**பிரிக்கின்ற விந்து - 1782 :** சிவனையும் சீவனையும் வேறாம்படி செய்கின்ற மாயை.

**பிரைச்சதம் எட்டு - 549 :** அட்டாங்க யோகம்.

**பிறப்பிலி - 25 :** பிறப்பில்லாத சிவபெருமான். 'பிறவா யாக்கைப் பெரியோன்' என்பது சிலப்பதிகாரம் (இந்திரவிழவூரெடுத்த காதை - 169).

**பிறவா உருவான் - 38 :** என்றும் பிறவாத யாக்கையை உடைய இறைவன் (சிவபெருமான்) யாக்கையில் பிறவாப்பெரியோன் (அருபி). (சிலம்பு. இந்திர விழவூரெடுத்த காதை 169. அடியார்க்கு நல்லார் உரை). தாயின் வயிற்றிற் பிறவாதவ னுமாகிய சிவன்.

**பிறவாப்பெரும்பயன் - 132 :** மீண்டும் பிறவாமைக்குக் காரணமாகிய பெரும்பயன். மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமைக்கேதுவாகிய நெறிப்பயன்.

**பின்னை வினை - 2610 :** ஆகாமியம். ஏறுவினை

**பீசம் - 105 :** அனைத்தையும் தோற்றுவிக்கும் மூலப்பொருளாக விளங்கும் சிவபெருமான்.

**புகுகின்ற பத்தெட்டு - 457 :** தூலபூதம் ஐந்து, புலன் ஐந்து, நுண்ணுடல் தத்துவம் எட்டு ஆகப்பதினெட்டு. பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆகிய வாயுக்கள் பத்தும், காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், துன்பம், அகங்காரம் ஆகிய எட்டும் என்றும் கூறுவர்.

**புட்செய்து மேயும் நிலம் ஐந்து - 2025 :** சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்து.

**புண்ணியம் - 26 :** நல்வினை.

**புத்தி - 2123 :** குணதத்துவத்தில் தோன்றி, சாத்துவிகம் மிக்கு ஏனைய குறைந்தமைந்து விடயங்கள் தோறும் சிறப்பு வகையால் விளக்கி, அவ்விடயங்களை நிச்சயிக்கும் கருவி. நிச்சயித்த பின்னர் அந்த விஷய வடிவாய ஞானமாய் நின்று ஆன்மாவிற்குப் புலனாய் அடுத்துத் தோன்றும் போக்கியமாகும். புண்ணிய பாவங்கட்குப் பற்றுக்கோடாய்த் தன்மம் முதலானவற்றிற்கு இடமாய் விளங்குவது.

**புத்திரர் ஐவர் - 386 :** சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், மால், அயன் என்னும் ஐந்து பேர்கள்.

**புரம் - 2961 :** தூல, சூக்கும காரண தேகமான புரங்கள்.

**புராணன் - 308 :** பழமைக்கெல்லாம் பழமையானவனாக விளங்கும் சிவபெருமான்.

**புராதரர் - 1077 :** அனாதியான ஆன்மாக்கள்.

**புராதனி - 1051 :** தொன்மையானவள் : பழையோள்.

**புரி - 2508 :** பரமானந்தம்.

**புரியட்டகாயம் - 2123 :** சூட்சுமசரீரம். ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம், புத்தி, மனம், அகங்காரம் ஆகிய எட்டும் கூடியது. சூக்கும உடல்.

**புருடன் - 2142 :** தத்துவ தாத்துவிகங்களோடு (தொண்ணூற்றாறு தத்துவம் எனக்கூறப்படுவன) கூடி வினைப்போகங்களை நுகர்வதற்குத் தக்க ஆன்மாவின் நிலை.

**புருடார்த்த சித்தி - 1491 :** அறம் பொருள் இன்பப்பேறு (தர்மார்த்த காமப்பேறு).

**புருடார்த்த நன்னெறி - 1898 :** அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கையும் பயக்கும் சிறந்த நல்லநெறி.

**புலம் ஐந்து - 2025 :** நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் ஆகிய ஐம்பூதங்கள்.

**புலமையின் நாற்றம் இல் புண்ணியன் - 3036 :** செயற்கையால் உண்டாகும் அறிவாலாகிய வாதனை ஒன்றும் இல்லாத அறவடிவினனாகிய சிவபெருமான்.

**புலித்தோலினன் - 271:** தாருகாவனத்து முனிவர் ஏவிய புலியைக்கொன்று அதன் தோலை அரையிற் கட்டிய சிவபெருமான். 'புலித்தோலை அரைக்கசைத்து' என்பது திருமுறை (சுந்தரர் - *7- 24- 1*).

**புவலோகம் - 1905 :** பூவுலகத்திற்கு மேலமைந்துள்ள ஒளியுலகு.

**புவனங்கள் எட்டு - 1722 :** அட்டமூர்த்தி வடிவான உலகங்கள்.

**புவனம் - 385 :** பிரபஞ்சம் - பல்லுலகத்தொகுப்பு.

**புவனாபதி - 75 :** புவனங்கட்கெல்லாம் தலைவியாக விளங்கும் பராசத்தி.

**2837:** உலகநாதன்.

**புவனாபதி அண்ணல் - 397 :** உருத்திரன்.

**புவனாபதிச்சக்கரம் - 1307 :** புவனை என்பது சத்திக்குரிய பெயர்களில் ஒன்று. புவனையாகிய சத்திக்குரிய மந்திரம் புவனாபதிச்சக்கரம் எனப்படும்.

**புள் ஐந்து - 2025 :** மெய், வாய், கண், மூக்கு செவி என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்து (உருவகம்).

**புறம் - 300 :** பிற சமயங்களுக்குரிய நூல்கள்.

**புன் ஞானத்தோர் - 1669 :** சிற்றறிவினோர்.

**புனிதன் - 24 :** இயல்பாகவே பாசங்களின் நீங்கித் தூய்மையுடைய உடம்பினனாகிய சிவபெருமான்.

**பூ - 817 :** சகத்திர தளமலர்.

**பூசணி - 2869 :** சிவம் (உருவகம்). பூசணிப்பூ.

**பூசை - 517**: பூக்களை இட்டு இறைவனை வழிபடுவது. இதனைப் பூஜை என்பர். பூக்களைக்கொண்டு செய்யப்படும் வழிபாடாதலின் பூசெய் என்பது பூசை எனவாயிற்று என்பர்.

**பூஞை - 2891**: (பூனை) - அதர்மம் (உருவகம்).

**பூதக்கண்ணாடி - 2986** : ஊனக்கண் பார்வை.

**பூதசயம் - 2151** : ஐம்பூத வெற்றி. பூதசுத்தி என்றும் கூறப்படும்.

**பூதம் - 455** : நிலம், நீர், தீ, வளி, வான் என்னும் ஐந்து பூதங்கள்.

**பூதாந்தம் - 1422** : பூதங்களின் முடிவு; தத்துவமுடிவு.

**பூதி - 1662** : விபூதி. திருநீறு.

**பூதி சாதனம் - 1427** : திருநீறு பூசுவதாகிய சைவ சின்னம். விபூதி மார்க்கம்.

**பூமிசையான் - 386** : தாமரை மலரில் விளங்கும் நான்முகன்.

**பூமேவு நான்முகன் - 237** : உந்திக்கமலத்திடைப் பொருந்திய பிரமன்.

**பூரகம் - 568** : பதினாறு மாத்திரை கால அளவு இட நாசித்துவாரத்தில் காற்றினை உள்ளுக்கிழுத்தல்.

**பூரண குகைச்சமாதி - 1902** : முடிவின்பின் எய்தும் பயன்.

**பூரணம் - 1433** : குறைவிலா நிறைவாம் சிவம்.

**பூரணர் - 1422** : பூரணப்பொருளை அடைந்தவர்.

**பூரணி - 402** : முழுநிறைவுடையவள்.

**பூரி (பூரித்தல்) - 571**: இடைகலை, பிங்கலை வழியாகக் காற்றை இழுத்து நிரப்பல். பூரகம் செய்தல்.

**பூவகம் - 1717 :** சகத்திர இதழ்த் தாமரை.

**பூழ் - 2891 :** (காடை) குரோதம் முதலியன.

**பெடை வண்டும் ஆண் வண்டும் - 2902 :** சிவமும் சத்தியும்.

**பெத்தத்தர் - 496 :** அதிகார மலபத்தராகிய விஞ்ஞானகலர்.

**பெத்தம் - 228 :** ஆன்மா பாசத்தால் கட்டுண்டநிலை. மலக்கட்டு.

**பெருமான் - 39 :** பெருமையிற் சிறந்த சிவன்.

**பேசும் எழுத்து - 2158 :** வைகரி வாக்கு: பிரணவத்திலுள்ள பேசும் எழுத்தாகிய அகார உகாரங்கள்.

**பேதசகலன் - 2227 :** தனு கரண புவன போகங்களோடு கூடிய தன்மையால் பகுத்துணர்த்து நுகரும் பேதத்தையுடைய சத்தொடு கூடிச் சத்தாயும் அசத்தொடு கூடி அசத்தாயும் விளங்கும் சகலன்.

**பேதம் - 2343 :** வேறுபாடு. உடலுக்கும் உயிர்க்கும் உள்ள வேறுபாடு. (உடல் சடமாயும் உயிர் சித்தாயும் இருப்பது போன்ற வேறுபாடு).

**பேதாபேதம் - 2343 :** (பேதம் அபேதம்). பேதமும் அபேதமும் (வேற்றுமையும் ஒற்றுமையும் ) ஆக உணரும் நிலை.

**பேதித்த அண்டம் - 2297 :** ஒன்றோடொன்று மாறுபடுவனவாகிய நிலவண்டம். நீரண்டம், தீயண்டம்,வாயுவண்டம், ஆகாய அண்டம் ஆகியன.

**பேதித்தநாலு - 1981 :** வேறுபட்டுத் தோன்றும் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி ஆகிய நான்கு வாக்குக்கள்.

**பேர் ஒன்று - 1815 :** சூக்குமப் பஞ்சாக்கரமாகிய பிரணவம்.

**பேர் கொண்ட பார்ப்பான் - 519 :** பெயரளவில் உள்ள பார்ப்பான். (வேதாகம நெறி வழிச்செல்லாத பார்ப்பான்) —

**பேரின்பம் - 123 :** உலப்பிலா ஆனந்தமாய வீடு பேற்றின்பம். சிற்றின்பத்திற்கு மாறானது.

**பேறான ஐவர் -2263 :** சுத்தவித்தை, மகேசுரம், சதாசிவம், விந்து, நாதம் ஆகிய ஐந்து.

**பேறான பாவனை - 1434 :** கைவல்யம் தரும் சிவோகம் பாவனை.

**பொடியாடி - 271:** தூய வெண்ணீற்றில் ஆடிய மெய்யுடைய சிவபெருமான். 'காடுடைய சுடலைப்பொடி பூசி', 'மெய்யெல்லாம் வெண்ணீறு சண்ணித்த மேனியன்' - என்பன திருமுறை வாசகங்கள் (சம்பந்தர். 1-1-1; திருநாவுக்கரசர். 4-5-1).

**பொது - 118 :** கூத்தப்பெருமான் திருநடஞ்செய் தில்லைச் சிற்றம்பலம் சிதாகாசப் பெருவெளி எனப்படும்.

**பொய்கை - 434 :** அமிர்த தடாகம். பொய் + கை எனக்கொண்டு நிலையில்லாத செய்கை முறைகள் எனக்கூறுவாருமுளர்.

**பொய்செய் புலனெறி ஒன்பது - 2603 :** உடம்பின் கண்ணுள்ள நவத்துவாரங்கள் :ஒன்பது வாயில். கண்ணிரண்டு, காதிரண்டு, மூக்குத்துளை இரண்டு, வாய், எருவாய், கருவாய் ஆகிய ஒன்பது துவாரங்கள்.

**பொய்யான போதாந்தம் ஆறாறு - 2235 :** நிலைபேறில்லாத மண் முதல் நாதம் ஈறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்கள்.

**பொழி புனல் - 2920 :** பெருகுகின்ற சிவானந்தம்.

**பொழில் ஏழு - 19 :** ஏழு உலகங்கள். பூலோகம், புவர் லோகம், சுவர்க்கலோகம், சனலோகம், தபோலோகம்,மகாலோகம், சத்தியலோகம் என்பன ஏழு மேலுலகம் என்றும், அதலம், விதலம், சுதலம் ,தராதலம், மகாதலம், இரசாதலம், பாதாளம் என்பன ஏழு கீழுலகம் என்றும் கூறப்படும்.

**பொற்கயவாரணம் - 1044 :** அழகிய ஆழமான கோழி. கோழி வடிவில் வட்டமாக அமையும் வர்த்துல குண்டம்.

**பொற்றாளுலகம் - 1251 :** அழகிய திருவடியாகிய வீட்டுலகம்.

**பொறி முப்பது - 467 :** ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு. புருடன் ஒழிந்த வித்தியாதத்துவம் ஆறு ஆக முப்பது தத்துவங்கள்.

**பொன்னம்பலம் - 887 :** பொற்சபை.

**பொன்னாற்சிவசாதனம் - 1427 :** பொன்னாலியன்ற கண்மணிமாலை (உருத்திராக்கமாலை) புனைவது.

**பொன்னான மந்திரம் - 906 :** திருவைந்தெழுத்து.

**போக்கும் வரவும் - 393 :** அழிப்பும் படைப்பும் ஆகிய தொழில்கள்.

**போக சரவோட்டம் - 1937 :** போக காலத்தில் அமையும் பிராண இயக்கம்.

**போகின்ற எட்டு - 457 :** நுண்ணுடல் தத்துவங்கள் எட்டு. அவையாவன சுவை, ஒளி, ஊறு ஓசை , நாற்றம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய எட்டு.

**போகுமுடம்பு - 1710 :** சூக்கும உடம்பு.

**போசன விதி - 1884 :** உணவு பற்றிய நெறி.

**போதகத்தான் - 7 :** அன்பர்களின் நெஞ்சமாகிய தாமரை மலரில் வீற்றிருக்கும் சிவபெருமான்.

**போதகன் -2997 :** அறிவுமயமான சிவகுருநாதன்.

**போதம் புணர்போதம் - 2343 :** ஆன்மாக்கட்கு இயற்கையானமையும் அறிவும், கல்வி முதலிய செயற்கையானமையும் அறிவும்.

**போதவெறும் பாழ் - 2455 :** சுத்த ஞானஒளி (ஞானமாகிய வெறும் ஒளி).

**போதன் - 2017 :** போதத்தை உடைய அறிஞன். சிவஞானத்தை அனுபவத்தில் கண்டவன்.

**போதா இலிங்கப்புணர்ச்சி - 1754 :** ஞானமயமான இலிங்கப் புணர்ச்சி. விந்து நாதக்கூட்டு.

**போதாதி போதம் - 402 :** (போதம் அதிபோதம்) சிற்றறிவும் பேரறிவும்.

**போதாந்தம் - 225 :** ஆறந்தங்களில் ஒன்று. அறிவின் முடிந்த முடிவு. ஓங்கார பிரணவம்.

**2370 :** ஆன்ம விசாரணையின் முடிவில் விளங்குவது.

**போதாலயம் - 1492 :** அறிவாலயம்.

**போது கருங்குழல் - 2692 :** பேரரும்பு சூடிய கருங்குழலையுடைய பராசத்தி (அருள்).

**போம் வழி - 2056 :** இறப்பு உண்டாதற்காம் வழி.

**போழ்வினை - 1867 :** பிராரப்தம்.

**மகாவாக்கியம் - 2326 :** பெருமொழி. 'அது நீயாகிறாய்' என்னும் பொருளுடைய தத்துவமசி என்னும் வாக்கியம் . பெரும்பொருட் கிளவியாகிய திருவைந்தெழுத்து என்றும் கூறப்படும்.

**மகிமா - 676 :** மலை போன்று பெரிதாதல்; எண் சித்திகளில் ஒன்று.

**மகுடம் - 63 :** இறைவனருளிய நவ ஆகமங்களில் ஒன்று.

**மகேசுவர பூசை - 1857 :** நடமாடுங்கோயிலாக விளங்கும் அடியார்களுக்குச் செய்யும் பூசை.

**மங்கலி - 402 :** மங்கலப்பொருளாக விளங்குபவள்.

**மங்கையர் - 576 :** சூரியகலை, சந்திர கலைகளால் இயங்கும் பிராணவாயு.

**மங்கையும் மாரனும் - 1191 :** சத்தியும் சிவமும்.

**மஞ்சனம் - 289 :** திருமஞ்சனம். திருமுழுக்கு. அபிடேகம் செய்தல். உபலக்கணத்தால் இறைவனுக்குச் செய்யும் சோடசோபசாரத்தைக் குறிக்கும்.

**மடம் ஏழு - 101 :** திருக்கயிலாய பரம்பரையில் வந்த ஏழு திருமடங்கள். அம்மடங்களின் தலைவர்கள் வருமாறு: காலாங்கர், அகோரர், மாளிகைத்தேவர், நாதாந்தர், பரமானந்தர், போகதேவர், திருமூலர்.

**மடவன்னம் - 2006 :** அறியாமையோடு கூடிய சீவன்.

**மண்டலம் ஐந்து - 623 :** பூமண்டலம், சலமண்டலம், அக்கினி மண்டலம், வாயு மண்டலம், ஆகாய மண்டலம். இவற்றிற்கு முறையே மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி ஆகியன தானங்களாகும்.

> **1646 :** தமிழ் மண்டலம் ஐந்து, பஞ்ச திராவிடம் என்று வழங்கப்படுவனவான தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், மராட்டிரம் என்னும் ஐந்து தேசங்கள். மராட்டிரம் நீக்கித் துளுவம் சேர்த்துங் கூறப்படும். மண்டலம் என்பதனை மண்தலம் எனக் கொண்டு பூமியிலுள்ள ஐந்து கண்டங்கள் என்றும் கூறுவர். தமிழகத்தின் பிரிவுகளாகிய சேர பாண்டிய சோழ தொண்டை கொங்கு மண்டலங்கள் என்றும் கொள்ளப்படும்.

**மண்டலம் மூன்று - 612 :** சூரிய, சந்திர, அக்கினி மண்டலங்கள்.

**மண்ணளந்தான் - 13 :** மாவலிச்சக்ரவர்த்தி அளித்த மூன்றடி மண் பெறவேண்டி, மூவுலகை ஈரடியால் அளந்து கொண்ட திருமால்.

**மண் மதிகாலங்கள் மூன்று - 875 :** உலகத்தாரால் மதிக்கப்பட்ட இறப்பு,நிகழ்வு, எதிர்வு ஆகிய முக்காலங்கள்.

**மணிவண்ணன் - 104 :** நீல வண்ணனாகிய திருமால்.

**மத்திய சாக்கிராவத்தை - 2167 :** மத்தியமாகிய புருவ நடுவில் சீவன் சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைப்பட்டு நிற்கும் நிலை. அவை சாக்கிரத்தில் சாக்கிரம், சாக்கிரத்தில் சொப்பனம், சாக்கிரத்தில் சுழுத்தி, சாக்கிரத்தில் துரியம், சாக்கிரத்தில் துரியாதீதம் ஆகும். இவை விழிப்புநிலையின் வேறுபாடுகள்.

மத்தியாலவத்தை என்பது உயிர் சாக்கிரத்தானத்தில் மட்டும் நிற்கும் நிலை. அங்கு உயிர் சாக்கிரத்தில் சாக்கரம், சாக்கிரத்தில் சொப்பனம், சாக்கிரத்தில் சுழுத்தி, சாக்கிரத்தில் துரியம், சாக்கிரத்தில் துரியாதீதம் என ஐந்து நிலை எய்தும்.

**மதி 335 :** சந்திர மண்டலம்.

**358 :** சந்திரன்.

**669 :** மதிமண்டலத்தமுது.

**மதிஞர் - 51 :** திருவடி ஞானம் கைவரப்பெற்ற நுட்பமதியுடைய சான்றோர்.

**மதிமேதினி - 1901 :** சந்திர மண்டலம்.

**மதியமும் ஞாயிறும் - 710 :** இடகலையும், பிங்கலையும்.

**மதிவட்டம் - 740 :** துவாத சாந்தம்.

**மதுக்கொன்றைத்தாரான் - 2950 :** தேன்பிலிற்றும் கொன்றை மாலையினை அணிந்துள்ள சிவபெருமான்.

**மந்ததரம் - 1518 :** அறிவு நிலையில் மிக்க மட்டமான தன்மையைப் பெற்றிருப்பது. சத்திநிபாதம் அமைவதற்கான பக்குவநிலை நான்கனுள் மிகவும் கீழ்நிலையிலுள்ள படியாகும்.

**மந்தம் - 1514 :** அறிவுநிலையில் மட்டமான தன்மையைப் பெற்றிருப்பது. சத்திநிபாதம் அமைவதற்கான பக்குவ நிலைகளில் கீழ்நிலைப் படியாகும்.

**மந்திரசாதக போதம் - 1575 :** மந்திரங்களைப் பயில்வதற்காம் அறிவு.

**மந்திர சுத்தி - 1845 :** விசேட தீட்சையால் எய்தும் சுத்தி.

**மந்திரம் - 69 :** ஆற்றல்மிக்க மந்திர வாசகம். 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி' என்பது தொல்காப்பியம் (பொருளதிகாரம் - 481).

**2045 :** மறைமொழி உண்மை.

**மந்திரம் ஆறியல்பு - 1285 :** சக்கரத்தில் எழும் மந்திரத்தின் ஆறியல்புகள். அவை: தம்பனம், மோகனம், உச்சாடனம், வித்துவேடனம், மாரணம், வசியம் ஆகும்.

**மந்திரம் ஒன்று - 2801 :** பிரணவ மந்திரம்.

**மந்திரம் ஓரெழுத்து - 533 :** ஓரெழுத்து மந்திரமாக விளங்கும் பிரணவம்.

**மந்திரமாமாயை - 2242 :** மந்திர வடிவமான மகாமாயை. பிரணவ சொருபிணியாகிய மகாமாயை என்றும் கூறப்படும்.

**மந்திரமாலை - 86 :** திருமந்திரமாலை எனப்படும் ' திருமந்திரம்' ஆகிய நூல். மந்திரமாலை சிபஞ்சாக்கரம் எனலுமாம்.

**மயன் - 302 :** மாயன் என்பதன் விகாரம். திருமால்.

**மயேசுரநிந்தை - 537 :** மயேசுவரனைப் பூசிப்பவராகிய அடியார்களைப் பழிப்பது.

**மரகத மாணிக்க ரேகை - 2670 :** பசிய மரகதத்தில் செந்நிற மாணிக்கம் இடப்பெற்றபோது தோன்றும் ஒளி.

இது குரு உபதேசத்தால் சீடனுடைய தன்மை மாறி விளங்குவதற்கு உவமையாகக் காட்டப்பட்டது.

**மருள் - 334 :** மயக்கம் - அறியாமை. தானல்லாத தத்துவங்களைத் தானென்றுணரும் மயக்கவுணர்வு.

**மலங்கள் ஐந்து - 118 :** ஆணவம், கன்மம் , மாயை என்னும் மூன்று மலங்களோடு மாயேயம், திரோதாயி என்னும் இரண்டினையும் கூட்ட மலங்கள் ஐந்து வகைப்படும்.

**மலசுத்தி - 1845 :** சமய தீட்சையால் எய்தும் சுத்தி.

**மலம் - 118 :** ஆன்மாக்களை அனாதி முதல் செம்பிற் களிம்பு போலப் பற்றி நிற்கும் குற்றங்கள். அவை ஆணவம், கன்மம் , மாயை என்று மூவகைப்படும்.

**மலம் மூவகை - 2230 :** ஆணவம், கன்மம் , மாயை என்னும் மூன்று மலங்கள்.

**மலர் - 197 :** மலர்கள். புற, வழிபாட்டிற்குரிய எட்டு மலர்கள் : புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை என்பன.

அகவழிபாட்டிற்குரிய எட்டு மலர்கள் : கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு ஆகிய பண்புகளாகும். ‘எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி, மட்டலரிடுவார்’ என்பது திருமுறை. (திருநாவுக்கரசர். *5-54-1*).

**மலருறை மாதவன் - 1531 :** *(மலர் + உறை+மாது+அவன்)* ஆயிர இதழ்த்தாமரை மலரில் வீற்றிருக்கும் உமையம்மை நாயகனாகிய சிவபெருமான்.

**மலரோன் - 13 :** திருமாலின் திருவுந்தித் தாமரைப்போதில் தோன்றி விளங்கும் நான்முகன் - பிரமன்.

**மலைமகனார் மகள் - 347 :** இமவான் மகளாகிய பார்வதி. யோகம் வல்லார் இதனைச் சிரசின் இடப்பாகத்தில் விளங்கும் சிற்சக்தி எனக்கூறுவர்.

**மவுனம் - 1896 :** வாக்கும் மனமும் தொழிலின்றி நிற்கும் நிலை.

**மழை - 2920 :** விஷய சம்பந்தம்.

**மழைபொழி தையல் - 10 :** அருட்சத்தியாய் விளங்கி உலகில் மழையினைப் பெய்விக்கும் உமாதேவி.

**மறப்பசுவாய் நின்ற மாய நன்னாடன் - 2939 :** அறியாமை மயமாய்ப் பொய்யான தூலதேகமுடைய சீவன்.

**மறம் - 300 :** அறத்திற்கு மாறான பாபம்.

**மறவன் - 2523 :** சிவபெருமான்.

**மறை ஓதி - 55 :** வேதங்களை ஓதியருளிய சிவபெருமான்.

**மறைமாறும் (புலன்) - 140 :** ஆன்மாவைத் தம்வயப்படுத்திய ஐம்புலன்களும் அது திருவடி ஞானமெய்திய நிலையில், ஆன்மாவின் வழியே நிற்றல். உலக போகமாகிய சிற்றின்ப நாட்டமுடைய ஐம்புலன்கள் சிவபோகமாகிய பேரின்ப நாட்டமுடையவையாதல்.

**மன்மனம் - 620 :** தூல சூக்கும உடம்புகள் இரண்டிலும் பிராணவாயுவொடு கலந்திருக்கும் மனம்.

**மன்றில் தனிக்கூத்து - 74 :** இறைவன் சிற்சபையிலாடும் ஆனந்தப் பெருநடனம்.

**மன்றாடி - 2400 :** மன்றத்தில் நடனமிடும் சிவபெருமான்.

**மனக்கோயிற் சிராபரன் - 1760 :** அடியார்களின் உள்ளத்தைத் தலைமைத் தானமாக - கோயிலாகக்கொண்டு எழுந்தருளும் சிவபெருமான்.

**மன பவனங்கள் - 1854 :** மனமும் பிராணவாயுவும்.

**மனவாசகம் கெட்ட மன்னன் - 2575 :** மனத்தையும் வாக்கையும் கடந்து விளங்கும் மன்னனாகிய சிவபரம்பொருள். 'மாற்றம் மனம் கழிய நின்ற மறையவன்'

**மனவாதித்தன் - 1988 :** மனமண்டலத்தில் விளங்கும் சூரியன்.

**மனவிளக்கு - 2018 :** ஆன்மா.

**மனாதி - 597 :** மனம் சித்தம் புத்தி அகங்காரம் ஆகிய அந்தக்கரணங்கள்.

**மனாதிகள் - 2138 :** மனம், சித்தம், புத்தி அகங்காரம் ஆகிய நான்கு அந்தக்கரணங்கள்.

**மனாதீதம் தோய்வித்தல் - 426 :** மனம் அதீதத்தில் சென்று சேட்டையின்றி இருக்கச்செய்தல்.

**மனு - 2184 :** மந்திரம் . ஏழுகோடி மந்திரங்களாகும். நம, சுவாகா, ஸ்வதா, ஹீம்பட், பட், வவுஷம், வஷட் என்பன மந்திரங்கள்.

**மனோமயன் - 1555 :** மனத்தினை உடம்பாகக்கொண்டு அங்கு உறைபவன்.

**மனோலயம் - 620 :** மனம் ஒடுங்குமிடம். (பரசிவம் - திருவடி).

**மனோன்மணி -402 :** சதாசிவநாயகி.

**1046 :** சதாசிவ சத்தியாகி நினைப்பவர் மனத்தில் நிலைத்து விளங்குபவள்.

**மாசில் துரியம் - 2296 :** இந்திரியங்களையும் அந்தக் கரணங்களையும் செயற்படாது அழித்திடும் நிலை. குற்றமற்ற துரியநிலை. சாத்துவிகம் முதலிய முக்குணங்களையும் மாயுமாறு செய்த அருட்குணம் மேலோங்கி நிற்கும்நிலை நிர்க்குணமாகும். இது பேருறக்கமாகிய துரியநிலை.

**மாதவர் - 47 :** சிறந்த தவத்தினையுடைவர்கள்.

**மாதுகுலாவிய வாள்நுதல் பாகன் - 16 :** அழகு விளங்குகின்ற ஒளிசேர் நெற்றியையுடைய உமாதேவியை இடப்பாகத்திற் கொண்ட சிவபெருமான். 'நீலமேனி வாலிழை பாகத் தொருவன்' என்னும் சங்க இலக்கியம் (ஐங்குறு நூறு - கடவுள் வாழ்த்து - 1).

**மாது நல்லாள் - 629 :** குண்டலினி சத்தி.

**மாதேவன் - 490 :** தேவ தேவனாகிய சிவபெருமான்.

**மாமணிகண்டன் 373 :** நீலகண்டனாகிய சிவபெருமான்.

**மாமலம் -313 :** மூலமலமாகிய ஆணவமலம்.

**மாமாயை மாயையின் வீடும் - 329 :** அசுத்தமாயை ஒழிவது போலவே மகாமாயையும் ஒழியும். திருவருளால் மயக்கத்தின் நீங்கியோர்க்கு, நில முதலாகிய அசுத்தமாயைத் தத்துவங்கள் அகலும். அங்ஙனம் அகன்றார்க்குச் சுத்தமாயையிலுள்ள தத்துவங்களும் அகலும். மாயையின் என்பதில் 'இன்' ஐந்தனுருபு ஒப்புப்பொருளில் வந்தது.

**மாயம் - 90 :** உலகத்தோற்றத்திற்கு முதற் காரணமாகிய சுத்தம், அசுத்தம், பிரகிருதி என்னும் மாயைகள்.

**226 :** தனு கரண புவன போக வடிவங்களாகக் காட்சியளிக்கும் மாயா காரியம்.

**மாயன் -14 :** கரிய திருமேனியையுடைய திருமால். மாயோன் எனத் தொல்காப்பியம் கூறும். மாயங்கள் வல்ல திருமால் எனவும்படும்.

**165 :** மாயைக்கு ஆதாரமாகிய சிவபெருமான்.

**மாயா உபாதி - 2014 :** மாயையின் காரியமாகிய தனு கரண புவன போகங்களால் உண்டாகும் துன்பம்.

**மாயாப்படலம் - 1817** : ஆணவத்தைப் போக்குதற்காகக் கூட்டப்பட்ட மாயையும் அதன் காரியங்களாகிய மாயேயங்களும்.

**மாயாவழி - 2056** : இறவாநெறி.

**மாயாவிருத்தம் - 25** : மாயைக்கு மறுதலையாகிய ஞானம். அழிவில்லாத ஞானம் எனவும் கொள்ளப்படும்.

**மாயாள் கிளைகூட்ட - 460** : மாயாசத்தி தத்துவக் கூட்டத்தினைச் சேர்த்தளிக்க.

**மாயேயம் - 2229** : காமியப்பயனை அடைவதற்காக அளிக்கப் பெற்ற தனு கரண புவன போகங்கள்.

**மாயை - 2192** : காணப்படும் உலகப் பொருள்களின் முடிந்த முதற்காரணம். மா - ஒடுங்குதல், யா - வருதல், எல்லாப் பொருள்களும் எதன்கண் ஒடுங்கி எதிலிருந்து தோன்றுமோ அது மாயை எனப்படும். மாயா என்னும் வடசொல் மாயை எனப்பட்டது என்பர். மாய் (மாய்தல்), ஆய் (ஆதல்) என்று பொருள் விளக்கி இச்சொல்லைத் தமிழ்ச்சொல் எனவும் கூறுவர்.

மாயை அரிசியைச் சார்ந்துள்ள தவிட்டினைப் போன்றது. மாயை சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை என மூன்று வகைப்படும். இவற்றுள் சுத்தமாயை அசுத்தமாயை ஆகிய இரண்டும் நித்தியம். பிரகிருதி மாயை அசுத்தமாயை யிலிருந்து தோன்றியதால் அநித்தியமானது.

**மாயையின் முப்பால் - 2419** : சுத்தம், அசுத்தம், சுத்தாசுத்தம் என்னும் மூன்று பகுதி. இதனைச் சிவதத்துவம், வித்தியாதத்துவம், ஆன்மதத்துவம் என்னும் மூன்று பகுதி எனவும் கூறுவர்.

**மாயோதயம் - 399** : சாதாக்கியம், மகேசுவரம், சுத்தவித்தை எனும் மூன்று. இவை சுத்தமாயையின் காரியமாகும்.

**மார்க்கங்கள் - 1227** : வழிகள். சமய நெறிகள்.

**மார்க்கங்கள் ஆறு - 2782 :** அறுவகைச்சமயங்கள்.

**மார்க்க சைவம் - 1427 :** திருமூலர் வகைப்படுத்திய சைவ சமய வகைகளில் மூன்றாவதாக அமைந்தது.

திருமூலரின் இப்பிரிவுகளைப் பின் வந்த சித்தாந்த சாத்திரங்கள் பின்பற்றவில்லை. இப்பிரிவுகள் திருமூலர் கருத்திற்கு ஏற்றவை அல்லவென்று கருதுவாருமுளர்.

திருநீறு, உருத்திராக்கம் முதலியன அணிதல் போன்றவற்றோடு சரியை முதலிய சைவ நெறிகளில் பழகி ஞானம் பெறுவது மார்க்க சைவம் என்பர். இதனைப் பிறவாறும் விளக்குவர்.

**மார்கழி - 614 :** மார்கழி என்று கூறப்படும் மாதமுடிவு. மார்கழி ஏற்றம் அருணோதயம் என்பர்.

**மாரணம் - 1000 :** ஒருவனை மந்திரத்தால் இறக்கச்செய்யும் வித்தை.

**மாரன் - 1191 :** சிவன்.

**மால் - 62 :** திருமால் . சிவ பரம்பொருளின் உருவத் திருமேனி நிலைகளில் ஒன்று. காத்தல் தொழிலுக்குரியது.

**மாலாங்கன் - 69 :** திருமூலர்பால் திருமந்திர உபதேசங் கேட்ட எழுவருள் ஒருவன்.

**மாளிகை மூன்று - 2479 :** தூல, சூக்கும, காரணம் என்னும் மூவகை உடல் (உருவகம்).

**மாற்கு மலம் நான்கு - 2183 :** திருமாலுக்கு ஆணவம், கன்மம், மாயை, திரோதாயி ஆகிய நான்கு மலங்கள் உள்ளன.

**மான் - 385 :** அசுத்த மாயை. நித்தியமாய், வியாபகமாய், அருவமாய்ப் பிரளய காலத்தில் ஆன்மாக்களுடைய கன்மங்களுக்கு

உறைவிடமாய், ஆன்மாக்களுக்குச் சுத்தாசுத்தமும், அசுத்தமுமாகிய தனு கரண புவன போகங்கள் தோன்றுவதற்கு முதற்காரணமாய் மயக்கஞ் செய்வதாயிருப்பது.

**2123 :** மனம். வாதனை பற்றி நிகழும் சங்கற்ப விகற்பமாம். தொழிற்பாடுகளையுடைய கருவி. ஒருவன் ஒன்றை முன் காட்ட அறிதற்கும், அறிந்தபின் அதுபோல்வதைக் காணும் போது உணர்தற்கும் ஏதுவாகியது.

**மானன் - 691 :** சிவன். மானனாய் என்பதனை விளியாக்கியும் உரைப்பர்.

**மீதொழிபு - 2813 :** கனவு நனவு நிலையில் எய்தும் இன்பத்திற்கும் வேறாக, இரண்டும் கடந்த அப்பால் நிலையில் அனுபவிக்கும் ஆனந்தம்.

**மீன் - 2031 :** ஐம்பொறி (உருவகம்).

**முக்கண்ணி - 1175 :** மூன்று நயனங்களையுடைய தேவி.

**முக்கரணம் - 2485 :** மனம்,வாக்கு, காயமம் ஆகிய மூன்று கருவிகள்.

**முக்காணி - 2892 :** மூலாதாரமாகிய முக்காணி நிலம்.

**முக்காத ஆறு - 2916 :** தாமதம், இராசதம், சத்துவம் ஆகிய ஆறுகள் மூன்று காலங்கள்.

**முக்காலம் - 127 :** இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்கள்.

**முக்குண நிர்க்குணம் - 2296 :** முக்குணமாவது சாத்துவிகம், இராசதம், தாமதம் ஆகிய மூன்று குணங்கள். நிர்க்குணமாவது குணமற்ற தன்மை.

**முக்குணமூடு - 615 :** தாமச, இராசத, சாத்துவிகம் என்ற முக்குணங்களாகிய மறைப்பு. (இருள்).

**முக்குற்றம் - 2435 :** காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்று குற்றங்கள். காமம் = ஆசை (விழைவு); வெகுளி = சினம் (வெறுப்பு); மயக்கம் = அறியாமை (அவிச்சை).

**முகம் அஞ்சு - 1135 :** சதாசிவ மூர்த்தியின் ஐந்து முகங்கள். அவை உச்சிமுகம் ஈசானம், கிழக்கு முகம் தற்புருடம், தெற்கு முகம் அகோரம், வடக்கு முகம் வாமதேவம், மேற்கு முகம் சத்தியோசாதம் ஆகிய ஐந்துமாம்.

**முகூர்த்தம் - 796 :** ஒன்றரை மணிக்காலம் கொண்ட நேரம்.

**முச்சதுரத்தது - 627 :** முக்கோணமும் நாற்கோணமும் உள்ளது.

**முச்சதுரம் - 1145 :** மூலாதாரம்.

**முச்சூனிய தொந்தத்தசி - 2488 :** தற்பதம், தொம்பதம், அசிபதம் ஆகிய முப்பதமும் நீங்கிய பெருநிலை.

**முச்சொரூபத்து வீடுறல் - 2478 :** சிவ, பர, சிவ நிலைகளில் முத்தியடைவது.

**முச்சொரூபம் - 1594 :** தூல, சூக்கும, காரண உடம்புகள்.

**2478 :** சிவ சொரூபம், பரசொரூபம் , சிவசொரூபம் ஆகிய மூன்று சொரூபங்கள்.

**முத்தண்ட ஈர் அண்டம் - 3004 :** முத்தியடைவதற்கு அடிப்படை ஏதுவாக விளங்கும் பெருமைமிக்க சிவலோகம்.

**முத்தர் - 125 :** மலம் நீங்கி முத்தி இன்பத்தினை உணர்ந்தவர்.

**1440 :** சீவன்முத்தர்.

**முத்தலை மூங்கில் - 2917 :** (முத்தினைச் சிந்துகின்ற மூங்கில் ) முத்தியினைத் தரும் சிவவொளி.

**முத்தாந்தம் - 497 :** சாயுச்சியம். முத்தியாகிய முடிவு.

முத்தி - 235 : விடுபடுகை. வீடுபேறு. திருவடிப்பேறு.

2255 : ஆன்மா மலக்கட்டின் நீங்கி நிற்கும் வீடுபேற்று நிலை.

முத்திகள் எட்டு - 2737 : அட்டமூர்த்திகள் இலயமடையும் எட்டு நிலை.

முத்தி சித்தது - 496 : சுத்த சிவமேயாவர்.

முத்திபேதம் - 2864 : வீடுபேற்றின் வகை.

முத்திரானந்தம் - 2398 : சாம்பவி முதலிய முத்திராப் பியாசத்தாலாகிய இன்பம்.

முத்திரை - 550 : மனக்கருத்தைக் கைவிரல்களால் குறியீடாகப் பயன்படுத்திக் காட்டப் பயன்படும் அடையாளங்கள்.

முத்திரை பேதம் - 1892 : கருவி கரண அறிவை மாற்றி முதல் நிலைக்குச் செல்லுவதற்குரிய உபாய வகை. சாம்பவி கேசரி என்பன முத்திரைப் பேதமாகும்.

முத்திரை மூன்று - 1612 : சாம்பவி, கேசரி, பைரவி ஆகியன முத்திரைகளாகும்.

முத்தீ - 344 : ஆகவனீயம் , காருகபத்தியம் ,தட்சிணாக்கினி என்னும் மூன்றுவகைத் தீயாகும்.

2477 : தாபத்திரயம் எனப்படும் மூவகைத்துன்பங்கள். தன்னைப்பற்றியும் , பிறரைப்பற்றியும், தெய்வம் பற்றியும், வரும் மூன்றுவகைத் துன்பங்கள்.

முத்துரியம் - 2466 : சிவதுரியம், பரதுரியம், சிவதுரியம் என்னும் மூன்று துரியங்கள். சீவதுரியமாவது கேவல நிலையில் உண்டாகின்ற சாக்கிரம் முதலிய மூன்றையும் கடந்து அடையும் நிலை. பரதுரியமாவது சகல நிலையில் உண்டாகின்ற சாக்கிரம் முதலிய மூன்றையும் கடந்து அடையும்நிலை.சிவ துரியமாவது பரத்தின் நிலை போலச்சிவத்துக்கு நின்மலத்தில் அடையும் நிலை.

**முதல் - 455 :** புருடன்.

**முதலிரண்டு - 1704 :** ஈரிதழ்த் தாமரையாகிய ஆக்ஞா சக்கரம்.

**முப்பத்தாறு - 125 :** சைவாகமங்கள் கூறும் முப்பத்தாறு தத்துவங்கள். அவை : சிவதத்துவங்கள் ஐந்து, வித்தியாதத் துவங்கள் ஏழு, ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கு ஆக முப்பத்தாறுமாகும். சிவதத்துவங்கள் சிவம் , சத்தி, சதாசிவம், ஈசுவரம், சுத்த வித்தை என்பன. வித்தியா தத்துவங்கள் காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என ஏழு. ஆன்ம தத்துவங்கள், சித்தம், புத்தி, மனம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கும், செவி, மெய், கண், நாக்கு, மூக்கு (சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம்) என்னும் ஞனேந்திரியம் ஐந்தும், மொழி, கால், கை, எருவாய், கருவாய்(வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம்) என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்தும், ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்(சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்) என்னும் தன் மாத்திரைகள் ஐந்தும், நிலம், நீர், தீ, வளி, விசும்பு (பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்) என்னும் பூதங்கள் ஐந்தும் ஆக இருபத்து நான்கு.

**முப்பத்து மூவர் - 803 :** பன்னிரு ஆதித்தர், பதினோரு உருத்திரர், எட்டுவசுக்கள், மருத்துவர் இருவர் ஆகிய முப்பத்து மூவர். பன்னிரு சூரியர் : தாத்ரு, சக்கரன், அரிமயன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகன், திவச்சுவான், பூடன், சவித்ரு, துவட்டன். பதினொரு உருத்திரர் : மாதவன், சிதன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன். எட்டுவசுக்கள் : அனலன், அனிலன் , அபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன். இருமருத்துவர் : அசுவனி தேவர்.

**முப்பதம் - 225 :** பிரணவப் பெருமந்திரத்திலுள்ள அகார, உகார, மகாரங்கள் ஆகிய மூன்று சொற்கள் என்றும், தத்துவமசி (அது நீ ஆகிறாய்) என்னும் மகாவாக்கியத்திலுள்ள தத், த்வம், அசி ஆகிய மூன்று சொற்கள் என்றும் கொள்ளப்படும்.

2437 : தத்துவமசி என்னும் மூன்று பதங்களுடைய மகாவாக்கியம். மூன்று பதங்களையும் தற்பதம், தொம்பதம், அசிபதம் என்று வழங்குவர். தொம்பதம் ஆன்மாவுக்குரிய தென்றும், தற்பதம் பரத்திற்குரியதென்றும், அசிபதம் ஆன்மாவும் பரமும் பொருந்தியதற்குரியதென்றும், இம்மூன்றையும் உணர்ந்தவன் பராபரமாவான் என்றும் கூறப்படும்.

2505 : அகர உகர மகரமாகிய பிரணவம். ஓம் என்னும் பிரணவத்தில் அகாரம் சீவனையும், உகாரம் பரத்தையும், மகாரம் சிவத்தையும் குறிக்கும். சிவாய என்பதில் சிகாரம் சிவத்தையும், வகாரம் பரத்தையும், யகாரம் சீவனையும் குறிக்கும்.

**முப்பதும் முப்பதும் முப்பத்தறுவர் - 154 :** தொண்ணூற்றாறு தத்துவங்கள். அவை உருவக நடையால் உயர்திணையாகக் கூறப்பட்டுள்ளன. சிவதத்துவம் 5, வித்தியாதத்துவம் 7, ஆன்ம தத்துவம் 24, இவை முப்பத்தாறு தத்துவங்கள். பஞ்சபூத காரியங்கள் 25, வசனம் முதலியன 5, வாயு 10, நாடி 10, வாக்கு 4, ஏடனை 3, குணம் 3 ஆக அறுபதும் தாத்துவிகம் எனப்படும். இவ்விரு வகைகளும் முப்பத்தாறும் அறுபதுமாகக் கூடித் தொண்ணூற்றாறாகின்றன. தாத்துவிகம் தத்துவத்தொடு தொடர்புடையது. அதனால் அவற்றையும் தத்துவங்களாகக் கொண்டு தொண்ணூற்றாறு தத்துவங்கள் என்று கூறும் மரபுண்டு. தாத்துவிகம் 60 வருமாறு: பிருதுவியின் கூறு மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை 5; அப்புவின் கூறு நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை 5: தேயுவின் கூறு ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல் 5 வாயுவின் கூறு ஓடல், நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல் 5; ஆகாசத்தின் கூறு குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் 5; நாடிகள் 10 இடகலை, பிங்கலை, சுழிமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புருடன், சங்குனி, வைரவன், குருதை; வாயுக்கள் 10 பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருதரன், தேவதத்தன், தனஞ்சயன்; ஏடனை 3 அர்த்த ஏடனை, புத்திர வேடனை, தாரவேடனை; வாக்காதி 5 - வசனம், கமனம், தானம், விசநகம், ஆனந்தம்; குணம் 3 - சத்துவம்

இராசதம், தாமதம்; வாக்கு 4 - சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி ஆக 60.

**முப்பரம் - 2445 :** அக்கினி , சூரியன், சந்திரன் ஆகிய மண்டலங்களில் ஆன்மா நிற்கும் நிலை.

**முப்பால் - 399 :** சுத்த மாயை, அசுத்த மாயை , பிரகிருதி மாயை எனும் மூன்று பகுதி.

**முப்பாழ் - 2495 :** மாயைப்பாழ், போதப்பாழ்; உபசாந்தப்பாழ் ஆகிய மூன்று பாழ். இவை மாயைப்பாழ், சிவப்பாழ், வியோமப்பாழ் எனவும் கூறப்படும். ஆன்ம தத்துவம் கடந்து நிற்றல் மாயைப்பாழ் என்றும், ஆன்ம போதம் சுழல நிற்பது சிவப்பாழ் என்றும், உபசாந்த நிலையில் பரவெளியில் நிற்பது உபசாந்தப்பாழ் என்றும் கருதப்படும்.

**2825 :** மேலுள்ள முப்பாழ் பிரமதுரியத்தில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்றின் நிகழாமையாகிய மூன்று பாழ். (அபாவம்).

**2834 :** மாயை, மாமாயை, பிரகிருதி மாயை ஆகிய மூன்று.

**முப்பாழ் கெட்ட முத்தி - 2135 :** ஆணவம் , கன்மம், மாயை என்னும் மூன்றுமான உடம்பு கெட்டுச் சிவசாயுச்சியம் பெறும்நிலை.

**முப்புரம் - 343 :** மூன்று கோட்டைகள். வித்துன்மாலி, தாரகாக்கன், கமலாக்கன் என்னும் மூன்று அசுரர்கள் சிவனை நோக்கித் தவஞ்செய்து, இரும்பு, வெள்ளி, பொன்னால் தனித்தனி அமைந்தனவும் எங்கும் பறந்தியங்க வல்லனவுமாகிய மூன்று கோட்டைகளைப் பெற்றுப்பின், விண், மண் ஆகிய உலகில் வாழ்வோர்க்குப் பெருந்துன்பம் செய்தனர். துன்புற்ற தேவர்கள் வேண்டுகோட்கிரங்கிச் சிவபெருமான் போர் ஆயத்தத்துடன் சென்று அம்முப்புரங்களையும் தன் புன்னகையால் எரித்தழித்தனன் என்பது புராண வரலாறு. இது நடந்தது திருவதிகை என்னும் தலத்தில் என்பர். முப்புரம் எரித்தல் என்பது இறைவன் ஆன்மாக்களின் மும்மலங்களை அழித்தலைக்

குறிக்கும் என்பது கருத்து. இதனைத் திருமூலர் 'முப்புரமாவது மும்மலகாரியம்' என்று வெளிப்படையாக விளக்கியுள்ளார். இவ்வாறு பிற வீரட்டச் செயல்களையும் வெளிப்படையாகக் கூறாவிடினும் அவையும் ஆருயிர்கட்கு இறைவன் செய்யும் அருட்செயல்களாகக் கொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

**முப்புரம் செற்ற பிரான் - 348 :** திரிபுரங்களை அழித்த சிவபெருமான்.

**முப்பேதம் - 1429 :** கர்மம், உபாசனை, ஞானம் என்று ஆகமங்கள் அமையும் மூன்று வகை வேறுபாடுகள்; சைவம் , ரௌத்திரம், ஆரிடம் என்னும் மூவகை கூறப்படும்.

**மும்மல காரியம் - 343 :** ஆன்மாக்களைப் பற்றி நிற்கும் ஆணவம் , கன்மம், மாயை என்னும் மும்மலங்களை இறைவன் தன்திருவருள் திறத்தால் அழித்தருளும் செயல்.

**மும்மலம் - 116 :** ஆன்மாக்களை அநாதியே பற்றி நிற்கும் மூன்று மலங்கள். அவை: ஆணவம், கன்மம், மாயை எனப்படும்.

**மும்முத்தி - 2474 :** சிவமுத்தி, பரமுத்தி, சிவமுத்தி ஆகிய மூன்று முத்திகள்.

**முலை - 1974 :** உந்தி முதல் மார்பு வரை நெருப்பாகும். உடம்பில் பஞ்சபூதங்களின் நிலை கூறுங்கால் கூறப்படுவது.

**முழு நீர்க்கள் - 324 :** முழுதும் நீர்மயமான மதுபானம்.

**முற்பதம் - 1421 :** யோகத்திற்கு முந்திய பதங்களாகிய சரியை, கிரியை நிலைகள்.

**முன்கட்டு - 1432 :** அநாதியாக அமைந்துள்ள ஆணவப்பிணிப்பு.

**முன்னி - 2152 :** ஆகாயம். சத்தம் மட்டும் உள்ளது.

**முன்னைவினை - 2610 :** பழவினை - சஞ்சிதம்.

**மூங்கை - 1496 :** வாய் மட்டும் பேசாதிருக்கும் நிலை.

**மூடம் - 241 :** அறியாமை. அஞ்ஞானம்.

**மூத்தான் இளையான் - 2873 :** சந்திரகலையும், சூரியகலையும்

**மூர்த்தி - 590 :** பாம்பின் வடிவுள்ள குண்டலிசத்தி.

**2152 :** வாயு. சத்தமும் பரிசமும் கொண்டது.

**மூலத்தனல் - 669 :** மூலாதாரத்திலுள்ள குண்டலினி.

**மூலத்துவாரம் - 345 :** மூலாதாரம்.

**மூலம் - 93 :** சூக்குமமான பிரணவம்.

**மூலன் - 68 :** ஆக்குலம் மேய்த்த மூலன் என்னும் இடையன். திருமூலதேவர். மூலாதாரத் தானத்தில் விளங்கும் உருத்திரன் என்றும் கொள்ளப்படும்

**மூவகை - 2234 :** கேவலத்திற்கேவலம், சகலத்திற் கேவலம் , சுத்தத்திற் கேவலம் ஆகிய மூன்று நிலை.

**மூவகைச் சீவவர்க்கம் - 492 :** விஞ்ஞானகலர் - ஆணவமலம் மட்டுமே உடைய ஒரு மலர்; பிரளயாகலர் - ஆணவம், கன்மம் ஆகிய இரண்டினை உடைய இருமலர்; சகலர் - ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றும் உடைய மும்மலர்.

**மூவடி தாவென்றான் - 376 :** மூன்றடி நிலம் தருக என்று மாவலியிடம் கேட்ட திருமால்.

**மூவணை ஏர் - 2872 :** இடை, பிங்கலை, சுழுமுனை ஆகிய மூன்று ஏர்.

**மூவயின் ஆன்மா - 2169 :** சகலர், பிரளயாகலர், விஞ்ஞான கலர் என மூன்று வகைப்படும் ஆன்மாக்கள். இவர்களில் சகலரைப்

பிறவிக் குருடர் என்றும், பிரளயாகலரை இடையில் குருடானவர் என்றும், விஞ்ஞானகலரைக் கண்ணுடையவர் என்றும் கூறுவதுண்டு. உவமைப்படுத்தி இவ்வாறு கூறப்படுவர்.

**மூவர் - 6 :** படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்கட்கு முறையே உரிய அயன், அரி, அரன் என்னும் முதன்மைத் தேவர் மூவர்.

**மூவர்க்கு மூத்தவன் - 7 :** படைத்தல் முதலிய முத்தொழில்களில் ஒவ்வொன்றற்கேயுரிய பிரமன் முதலிய மூன்று தேவர்க்கும், முழு முதலாய்ச் சிறந்து விளங்கும் சிவபெருமான்.

**மூவர்கள் - 2731 :** பிரமன், விட்டுணு, உருத்திரன் ஆகிய மூவர்.

**மூவாயிரம் தமிழ்- 99 :** மூவாயிரம் தமிழ் மந்திரங்களைக் கொண்டு விளங்கும் திருமந்திரநூல்.

**மூவெழுத்து - 885 :** மகாரங்கூடிய அகார உகாரம். இதில் மகாரம் மாயையைக்குறிக்கும்.

**மூவேழ் குரவர் - 1859 :** கடந்த இருபத்தொரு தலைமுறையிலுள்ள மூதாதையர். மூத்த ஏழு குரவர்கள் என்று கொண்டு, அம்பிகை குரு, கந்தகுரு, கணாதிப குரு,லக்குமி குரு, வாணிகுரு, சண்டகுரு, விட்டுணுகுரு ஆகிய ஏழு குரவர் என்பர்.

**மூவேழாங்கரன் - 706 :** இருபத்தொரு வகையாய ஏழு கிரணமுள்ள சூரியன். பரசிவனைக்குறித்தது.

**மூன்றாந்துரியம் - 2473 :** சிவதுரியம்.

**மூன்றினில் அஞ்சு - 2784 :** மும்மண்டலங்களிலும் அமையும் பஞ்சப்பிரம சொரூபம்.

**மூன்று - 1 :** குரு லிங்க சங்கமம் ஆகிய மூவகைத் திருமேனிகள். சிவபெருமானுடைய ஆக்கல், அளித்தல்,அழித்தல் என்னும் முத்தொழில் குறித்து, அவற்றை முறையே அயன், அரி, அரன் ஆகியோர் புரிய அருள் செய்து நிற்கும் நிலையினைச் சுட்டுகின்றது.

இறைவனுடைய இச்சை, ஞான, கிரியை ஆற்றல்களைச் சுட்டுவதாகவும், இராசதம், தாமதம், சத்துவம் என்னும் முக்குணங்களைச் சுட்டுவதாகவும் கொள்ளப்படும். (குறிப்புமொழி).

756 : மூன்று நாடிகள். பூரக, ரேசக, கும்பகங்கள்.

2239 : காலபரம், வியோமம், பரம் ஆகிய மூன்று. சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம் என்றும் விளக்கப்படும்.

மூன்று கரணம் - 473 : மனம், புத்தி, அகங்காரம்.

மூன்று நின்றார் - 323 : முயன்று நிற்பவர்கள். (முயன்று என்பதன் விகாரம்).

மூன்றுபடி மண்டலம் - 2445 : மூன்றுவகையாகவுள்ள அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம் ஆகியன. உடம்பில் மூலாதாரம் முதல் நாபிவரை அக்கினி மண்டலம் என்றும், நாபிமுதல் கண்டம் வரை சூரிய மண்டலம் என்றும், கண்டம் முதல் துவாத சாந்தம் வரை சந்திர மண்டலம் என்றும் கொள்ளப்படும்.

மூன்று மடக்கு - 728 : இரேசக, பூரக, கும்பகம் ஆகிய மூன்று. மூலாதாரம் சுவாதிட்டானமாகிய பிரம கிரந்தி, மணிபூரகம், அனாகதமாகிய விட்டுணுக்கிரந்தி விசுத்தி, ஆக்ஞையாகிய உருத்திரகிரந்தி என்னும் மூன்று.

மூன்றுள மண்டலம் - 1187 : காலம், நியதி, கலை என்றும், அக்கினி, சூரிய, சந்திர மண்டலங்கள் என்றும் கூறப்படும்.

மூன்றுள வாழைகள் - 2916 : சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியாகிய மூன்று வாழைகள் (உருவகம்).

மூனச்சுழுனை - 2736 : மூன்று நாடிகள் கூடும் இடத்திலுள்ள நல்ல சுழுமுனை.

**மெய் எனும் கோயில் - 116 :** உடல். 'காயமே கோயிலாக' என்பது திருமுறை. (திருநாவுக்கரசர். 4-76-4). 'உள்ளம்பெருங்கோயில்' என்பது திருமூலர் வாக்கு. (திருமந்திரம் - 1823).

**மெய்ஞ்ஞானச்சோதி - 91 :** உண்மையான அறிவுமயமாகிய ஒளி.

**மெய்ஞ்ஞானம் - 92 :** உண்மையான சிவஞானம்.

**மெய்ப்பொருள் - 52 :** இறை, உயிர், தளை (பதி, பசு, பாசம்) என்னும் அழியாத மெய்ப்பொருள். 'பொன்னும் மெய்ப்பொருளும் தருவானை' என்னும் திருமுறை கருதி மெய்ப்பொருள் சிவஞானத்தினைக் குறிக்கும் என்றலுமாம். (சுந்தரர் -7-59-1).

**மெய்ப்போகம் - 334 :** உண்மையான திருவடி உணர்வு.

**மேகங்கள் ஏழு - 2738 :** ஆவர்த்தம், புட்கலம், சங்காரம், ஆசவனம், நீர்க்காரி, சொற்காரி, சிலாவருடம் ஆகிய ஏழு.

**மேதாதி ஈரெட்டு - 1070 :** அகரம் முதல் உன்மனை ஈறாகவுள்ள பதினாறு கலைகள் என்றும், மேதை முதலிய பதினாறு தத்துவங்கள் என்றும் கூறுவர்.

**மேரு - 619 :** புருவ மத்தியிலுள்ள சுழுமுனையினுச்சி.

**மேல்பாலவன் - 338 :** மேல்திசைக்குத் தலைவனான வருணன.

**மேலைத்துரியம் - 2176 :** மேலான துரியநிலையான திருவருட்சத்தியொடு கூடிய சிவம். கீழைத்துரியம் ஆன்மா.

**மேலைத்துவாரம் - 345 :** பிரமரந்திரம் எனப்படும் மேல் துவாரம்.

**583 :** ஆக்ஞா சக்கரத்திலுள்ள சுழுமுனைத்துவாரம்.

**மேலைப்பிரணவம் - 2675 :** மகாகாரணப்பிரணவம். இது வேதாந்த நெறியிற் செலுத்துவதாகும்.

**மேலைவாசல் - 623 :** பிரமரந்திர வழி (உச்சித்துளை வழி).

**மேனிகள் ஐந்து - 2218 :** பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகிய ஐந்து திருமேனிகள்.

**மோகனம் - 998 :** மயங்க வைத்தல் .

**மோனச்சமாதி - 1906 :** உறக்கமில்லாத யோகத்தில் உறங்கி நிற்றல்.

**2936 :** மோனத்தில் ஒடுங்கும் நிலை. சகச நிட்டை.

**மோனதிசை 1426 :** வாய்வாளாதிருக்கும் மௌன நிலை.

**மோனமதாம் மொழி - 1481 :** மோனநிலை சித்திப்பதான குரு உபதேச மொழி.

**மோன முத்திரை - 1900 :** மனம் தொழிற்படாத முத்திரை.

**யவ்வென்ற பொற்கை - 2797 :** யகாரமாகிய பொன் போன்ற கை.

**யாமள ஆகமத்தாள் - 1169 :** சத்தி வழிபாட்டு முறைகளைக் கூறும் யாமளாகமத்தின் கண் விளங்குபவள்.

**யாமளம் - 63 :** இறைவனருளிய நவ ஆகமங்களில் ஒன்று யாமளாகமம். இது தந்திர சாத்திரம் .

**யாமள வாகமம் - 1169 :** ஒன்பது ஆகமங்களில் ஒன்றாகிய யாமள ஆகமம். சாமளாகமம் எனவும் படும். சத்தி பூசையைப் பற்றிக்கூறும் ஒரு தந்திர நூல்.

**யானை முகத்தன் - (விநாயகர் காப்பு) :** யானை முகத்தினைக் கொண்ட விநாயகப்பெருமான். மூத்தபிள்ளையார் எனப்படுவர். யானைமுகம் பிரணவ வடிவிலமைந்து ஞானமயமாய் விளங்கும் தன்மையினை உணர்த்துகின்றது.

**யோக அபிடேகம் - 1466 :** யோக நெறியில் அபிடேக தீட்சை. அதாவது யோகத்தில் சித்தி பெறுவது. எண்வகைச் சித்திகளும் கை கூடுமை

**யோகச்சமயம் - 1466 :** யோக நெறியில் சமய தீட்சை. அது பலவகை யோக நெறிகளைப் பயில நினைத்தலாகும்.

**யோகச்சமாதி - 1490 :** சகமார்க்கம்.

**யோக நிர்வாணம் - 1466 :** யோக நெறியில் நிருவாண தீட்சை. அதாவது சிவன் தோன்றப்பெறுவது.

**யோக பூசை - 1444 :** இதயத்தில் சிவபரம்பொருள் ஒளிதந்து நிற்றலை அறிவது.

**யோகம் - 1457 :** சைவ சமயங்கூறும் முத்திநெறி நான்கனுள் மூன்றாவதாக அமைந்தது. அந்நான்கும் ச்ரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகும். இது செறிவு என்றும் கூறப்படும். இதனைச் சகமார்க்கம் என்பர். புலனடக்கி, உச்சுவாசம், நிச்சுவாசங்களை நெறிப்படுத்தி, இறைவனை உடலினுள்ளே கண்டு தியானித்தல். அட்டாங்கயோகம் என்னும் இது, அகத்தொழிலாக அருவத் திருமேனியை அகத்தே கண்டு வழிபடுவது.

இதன் பயன் சிவசாரூபமாகிய பதமுத்தியாகும். இது யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் என்று நால்வகைப்படுத்தி விளக்கப்படும்.

**யோகர் - 1446 :** யோகநெறி ஒழுகுபவர்.

**யோக விசேடம் - 1466 :** யோகநெறியில் விசேட தீட்டை ; அஃதாவது, அட்டாங்க யோகநெறிவழி நிற்றல்.

**யோகாந்தம் - 2370 :** ஆறந்தங்களில் ஒன்று. இயமாதி எண்வகை உறுப்புக்களால் அமையும் யோகநெறியாலெய்தும் முடிவு.

**யோகினி சத்தி - 1170 :** யோகினி சத்திகள் பன்னிரண்டாகும். அவையாவன: விக்கியா, ரேசிகா, மோசிகா, அமிர்தா, தீபகா,

ஞான, ஆபியாயநி, வியாபிநி, மேதா, வியோமா, சித்திருபா, இலட்சுமி.

யோனி - 45 5 : பெண்ணின் கருவாய்.

464 : சுரோணிதம்.

யோனிகள் - 2351 : சிவவர்க்கங்கள்.

ரீங்காரம் - 901 : ஹ்ரீம். மாயைக்குரிய பீசமந்திரம்.

ரேசகம் - 568 : முப்பத்திரண்டு மாத்திரை கால அளவு வலப்பக்க நாசித்துவாரத்தில் காற்றை மெதுவாக விடுதல்.

லகு - 674 : (இலகிமா) பஞ்சினைப்போல் இலேசாதல்.

லிங்கம் - 455 : ஆண் உறுப்பு : இலிங்கமாகிய உருவுடம்பிற்கு வாயிலாம் வித்து. சுக்கிலத்தைக் குறித்தது.

வகை எட்டும் நான்கும் - 2531 : ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும் மனமும் புத்தியுமாகிய பன்னிரண்டு.

வகையெட் டேமாய் நின்ற ஆதிப்பிரான் - 2531 : நிலம், நீர், தீ, வளி, வான், ஞாயிறு, திங்கள், இயமானன் ஆகிய எட்டு மூர்த்தமாய் விளங்கும் சிவபெருமான்.

வசித்துவம் - 688 : தத்துவங்களில் கலந்திருத்தல்.

வசியம் - 1001 : கவர்ந்திழுத்தல்.

வட்டங்கள் ஏழு - 768 : ஆதார சக்கரம் ஆறும் மேலுள்ள மதிமண்டலமும் ஆகிய ஏழு.

வட்டம் - 767 : பிரணவம்.

1745 : ஆக்ஞை.

**வடபால் தவமுனி - 338 :** சத்திர யாகம் என்னும் யாகம் செய்துகொண்டிருந்த மித்திர முனி.

**வதுவை - 2152 :** அப்பு . (நீர்) சத்த, பரிச, ரூப, ரசம் ஆகிய நான்குடையது.

**வயிணவர் - 2179 :** திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயத்தோர் வைஷ்ணவர்.

**வயிந்தவம் - 1923 :** விந்து காரியம். விந்து நாதம் கலை ஆயவற்றின் கூட்டால் விளைவதாய், அகாராதிகலைகளாயும், நிவிர்த்தாதி கலைகளாகவும் பஞ்சக் கிருத்தியத்திற்கு அடிப்படையாய் ஐவகை வாக்குக்களும் தோன்றுவதற்குக் காரணமாக இருப்பது.

**2250 :** சுத்தமாயை.

**வயிந்தவம் ஒன்பான் - 1923 :** விந்து மாயா காரியமான ஒன்பது. சிவபேதம் ஒன்பது. பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன், நாதம், விந்து, சத்தி, சிவம் ஆகிய ஒன்பது.

**வயிரவச் சக்கரம் - 1291 :** வயிரவர் சிவபெருமானுடைய கோப மூர்த்தங்களில் ஒன்று. பகை முதலிய இடையூறகல இவரை வழிபடுவது மரபு. இவருக்குரிய மந்திரச் சக்கரம் வயிரவச் சக்கரம் எனப்படும்.

**வயிரவன் - 1292 :** சிவபெருமானுடைய கோப மூர்த்தங்களில் ஒன்று.

**வயிரவி - 1075 :** பயிரவி. வயிரக்கடவுளின் சத்தி.

**வராக முகத்தி - 1072 :** வராக முகத்தோடு கூடிய வ்ராகி.

**வருத்தம் இரண்டு - 1094 :** சூலம், யோனி என்னும் இரண்டு முத்திரைகள்.

**வரும் வழி - 2056 :** பிறப்பு உண்டாதற்காம் நெறி.

**வரை - 720 :** புருவ மத்தி.

**வரைகள் - 623 :** மூலம் முதற்கூறப்படும் துவாதச தானங்கள் : அகர முதல் உன்மனி ஈறாகவுள்ள கலைகள் பன்னிரண்டு.

**வரையுரை மாட்சி - 2954 :** எல்லையற்ற பெருமை; சிவன் தன்னை உணர்ந்து சிவத்தொடு பொருந்தி விளங்குவதே எல்லையற்ற பெருமையாகும்.

**வல்லார்கள் - 311 :** திருவருள் பெற்று வல்லவர்களாய் விளங்குபவர்கள்.

**வல்லி - 293 :** திருவருள். சத்தி (குண்டலினி).

**வலக்கை - 801 :** பிங்கலை.

**வழுதலை - 2869 :** கத்திரிவிதை. யோகாப்பியாசம். (உருவகம்).

**வள்ளல் தலைவி - 1183 :** பரசிவ நாயகி.

**வள்ளன்மை நாதன் - 328 :** வேண்டுவார்க்கு வேண்டுவதெல்லாம் வழங்கும் வள்ளற்பெருமானாகிய சிவபெருமான்.

**வளியறிவாளர் - 410 :** பிராணாயாமப் பயிற்சியுடையார்.

**வன்னம் - 2184 :** எழுத்து. 51.

**வன்னி - 738 :** அக்கினி வடிவனாகிய சிவன்.

**2152 :** தீ. சத்தம், பரிசம், ரூபம் ஆகிய மூன்றுடையது.

**வன்னி எழுத்து- 1256 :** ஏரொளிச் சக்கர எழுத்து. அவை : வ, ச, ஷ, ஸ ஆகும்.

**வன்னிக்கிறை - 23 :** தீக்கு அதிபதியாகிய அக்கினிதேவன்.

**வனம் - 2663 :** தத்துவக்கூட்டம்.

**வாக்கு மனாதிகள் - 410 :** வாக்கு, பாதம், பாணி, பாயுரு,உபத்தம் ஆகிய ஐந்து கன்மேந்திரியங்களும் மனம், சித்தம், புத்தி, அகங்காரம் ஆகிய நான்கு அந்தக்கரணங்களும்.

**வாசவன் பீடம் - 534 :** இந்திரனுடைய ஆட்சி பீடம்.

**வாசாமகோசரம் - 2380 :** வாக்கு மனாதிகளுக்கு எட்டாதநிலை. மாற்றம் மனம் கழிய நிற்கும் நிலை.

**வாணி - 616 :** அனாகதம். நாதந்தோன்றுமிடம்.

**வாதுளம் - 63 :** இறைவனருளிய நவ ஆகமங்களில் ஒன்று வாதுளாகமம். இதனைச் சிவர், மகாகாளர் கேட்டனர்.

**வாமத்தோர் - 314 :** சத்தி வழிபாடியற்றும் சாக்தேயர்.

**வாயு ஏழு - 738 :** பஞ்சப்பிராணனும் இடைகலை, பிங்கலையுமாகிய ஏழு.

**வாயு பத்து - 2174 :** பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆகிய பத்து வாயுக்கள்.

**வாரசரம் - 790 :** வார நாள்களில் உயிர்ப்பின் ஓட்டம் அமையுமாறு.

**வாரணி - 402 :** 1. கச்சணிந்த (2) வாரணமுடையாள். பிரணவ சொரூபி. காத்தலைச் செய்பவள்.

**வாலை - 358 :** இளம்பெண். தக்கன் மனைவி. இனம்பற்றித் தக்கன் வேள்விக்கு வந்த ஏனைய பெண்களையும் சுட்டும்.

**வாவென்றணைத்த கை - 2797 :** வருக என்றணைத்த கரம். வா என்னும் எழுத்தைச் சுட்டும்.

**வாழாச்சங்காரம் - 429 :** வாழ்வினைக் கொடுக்காத சங்காரம்.

**வாழும் எழுத்தஞ்சு - 3000 :** வாழ்வினை நல்கும் திருவைந்தெழுத்து.

**வான் நீர் அருவி - 589 :** பரமாகாயத்திலுள்ள சந்திர மண்டலத்திலிருந்து பொழியும் அமுத தாரை.

**வானவராதி - 371 :** தேவர்களுக்குத் தலைவனான சிவபெருமான்.

**வானில் எழுத்து - 954 :** பரமாகாயத்தில் விளங்கும் பிரணவம்.

**வானோர் தலைவி - 2354 :** தேவர்களாலும் ஆய்ந்துணர்தற்கரிய பராசத்தி. ஆகாய ரூபிணியாகிய சத்தி என்றும் கூறப்படும்.

**வானோருலகம் - 265 :** ஒளிமயமான தேவருலகம்.

**விகிர்தன் - 236 :** பலவேறுபட்ட உருவமுடைய சிவபெருமான். பல்வேறு விளையாட்டுடையன் எனலுமாம்.

**விகிர்தன் நாம் என்கின்ற நீதி - 596 :** தம்மைத்தவிர வேறு பிரமப்பொருள் இல்லை என்கின்ற தர்மம்.

**விசுவக்கிராசம் - 2587 :** விசுவம் = உலகம், பிரபஞ்சம்; கிராசம் = கவளம். உலகினை விழுங்குதல்.

**விசேடம் - 1450 :** விசேட திக்கை. பஞ்சாட்சர தியானம் செய்து அகப்புறத் தூய்மை அடைவது.

**விஞ்ஞான கன்மத்தர் - 499 :** மேலான ஞான கன்மத்தைப் புரிபவர்கள்.

**விஞ்ஞானர் - 494 :** ஒரு மலமுடையார் அவர் நால்வகைப்படுவர்:

*1) மும்மலத்துள் அழுந்தாது அதிகார மலம் மாத்திரமுடைய அணுசதாசிவர் என்னும் பெயரொடு சாதாக்கியத்திலிருப்பவர். (பிரணவர், சாதாக்கியர், தீர்த்தர், காரணர், சுசீலர், ஈசர், சூக்குமர், காலர், தேகேசுவரர், அங்குசு ஆகிய பதின்மர்).*

2) மகேசுவர தத்துவத்தில் வசிக்கும் அட்டவித்தியேசுவரர் (அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, சீகண்டி, சிகண்டி ஆகிய எண்மர்).

3) மந்திரேசுவர் என்னும் பெயர் கொண்டு சுத்த வித்தையில் வசிப்பவர் (யாகாதிகளால் நம, சுவாஉறா, சுவதா, வௌஷட், வஷட், பட், உறீம் எனும் ஏழு முடிவுகளைக்கொண்ட மந்திர உபாசனையில் வந்த மந்திர மகேசுவரர்).

4) மெய்ஞ்ஞானர் - ஆணவ வாசனையும் விட்டு நின்றவர்.

**விட்ட எழுத்து விடாத எழுத்து - 918 :** பிரணவத்தில் நாதம் நீங்கிய ஏனைய எழுத்துக்கள். இவற்றை முறையே 'உறம்', 'ஸம்' என்றும், வ, சி என்றும் குறிப்பிடுவர்.

**விட்ட இலக்கணை - 2566 :** ஆன்மா அறிவுப்பெருவெளியாம் வியோமத்தில் போதல். போக்குவரவற்ற ஆன்மா போகும் என்பது விட்ட இலக்கணை.

**விட்டம் - 799 :** புருவ நடுவிடம்.

**விட்டும் விடாத இலக்கணை - 2566 :** ஆன்மா சத்தம் முதலியவற்றைக் கேட்டல் முதலியன செய்யும் என்பது விட்டும் விடாத இலக்கணையாம். கேட்டல் முதலியவை செவி முதலிய பொறிகளுக்கேயன்றி ஆன்மாவுக்கில்லை யாதலின் அதனை ஒரு வகையில் விடுத்தும், செவி முதலியவற்றைக் கேட்டல் முதலியனவற்றில் செலுத்தி நிற்றலால் ஒருவகையில் விடாதும் ஆன்மாவைக் கொள்ளுதலால் விட்டும் விடாத இலக்கணையாகும்.

**விடயம் - 231 :** ஐம்புலனுகர்ச்சி.

**விடாத இலக்கணை - 2566 :** ஆன்மா உபசாந்தத்தில் பொருந்தும் என்பது விடாத இலக்கணை. நிலையிலாப் பொருளாகிய உலகியற் செயலற்று நிலையுடைப் பொருளாகிய சிவச்செயலுற்று ஒடுங்குவதனைக் குறிப்பதால் விடாத இலக்கணை.

**விண் - 113 :** பரமாகாயம். சிவவுலகம்.

**315 :** இறையருள் வெளி.

**விண்ணளந்தான் - 13 :** ஆகாயத்தை அளாவி அளந்தறிந்து விளங்கும் சூரியன்.

**வித்தில் எழுந்த பெருமுளை - 3025 :** விதையாகிய உடம்பில் தோன்றிய பெரிய சித்த வைராக்கியம் என்னும் முளை.

**வித்து - 1964 :** தானிய விதை.

**2069 :** பிறவிக்கு ஏதுவான வினைகள்.

**வித்தைத்தலையவள் - 1059 :** ஸ்ரீவித்தியா தேவி.

**விதி - 2848 :** கன்ம பலனாக அனுபவிக்குமாறு இறைவனால் விதிக்கப்பட்ட கட்டளை.

**விந்து- 106 :** சுத்தமாயை. ஒளிநிலை. ஞானசத்தி. சிவபெருமானுடைய நவந்தருபேதங்களில் ஒன்று.

**382 :** இறைவன் கிரியாசத்தி ஒன்றானே சுத்தமாயையைக் காரியப்படுத்தப் பொதுவகையில் சங்கற்பித்து நிற்கையில் சத்தி எனப்பெயர் பெற்று நிற்பன். அந்நிலையில் சுத்தமாயை இரண்டாம் விருத்திப்பட்டு அவனுக்கு இடமாக நிற்றலால் அவ்விரண்டாம் விருத்தி சத்தி என்னும் தத்துவமாய் நிற்கும். பைசந்தி விந்து எனவும்பெயர் பெறும். அதனால் அதற்குப் பற்றுக் கோடாகிய தத்துவமும் விந்து என்று கூறப்படும்.

**1959 :** 1) (சந்திரமண்டலத்திலுள்ள) ஒளி. 2) உடலில் தோன்றிய வீரியம்.

**1993 :** விந்து, அபர விந்து பரவிந்து என்று இருவகைப்படும். அபரவிந்து பரநாதமாகி, அதிலிருந்து நிவர்த்தி, பிரதிட்டை,

வித்தை, சாந்தி, சாந்தியாதீதை ஆகிய ஐந்து கலையாகத் திருவருள் விளக்கமுற்றது.

விந்து தூலமாகிய அபரநிலையில் வீர்யம் என்றும் சூக்குமமாகிய பரநிலையில் ஒளி என்றும் ஆகிறது.

**விந்து சயம் - 1937 :** விந்துவைக் காத்தலால் உண்டாகும் செயம்.

**விந்துத் தனிநாதம் - 708 :** ஒளிமயமான நாதாந்தம்.

**விந்து திகழும் அகாரம் - 731 :** மகா மாயையினின்று தோன்றும் அகாரம்.

**விந்துற்பனம் - 1923 :** விந்துவின் தோற்றம்.

**விமானம் - 1718 :** திருக்கோயிற் கருவறையின் மேல் கட்டப்படும் கோபுரம். விமானம் தூல லிங்கம் எனப்படும்.

**வியாக்கிரம் - 121 :** மேலான சொல். உபதேச மொழி. இதனை மேலான இடம் என்றும் அது விழித்திருந்தும் ஒன்றையும் பற்றாது நிற்கும் சுத்த சாக்கிரம் என்றும் கூறப்படும்.

**2276 :** சாக்கிரம். பெரிய வியாக்கிரம் = பரசாக்கிரம்.

**வியாக்ரமர் - 67 :** இறைவனாகிய நந்தியம்பெருமானிடம் உபதேசம் பெற்ற எண்மருள் ஒருவர். தில்லையில் இறைவன் ஆடும் எல்லையில் ஆனந்தக் கூத்தினைக்கண்டு விளங்கும் ஒருமுனிவர். புலிக்கால் முனிவர்.

**வியாத்தி - 2236 :** அகண்டமான பொருளில் உள்ளடங்கியிருத்தல்.

**வியோகம் - 2454 :** வீடுபேறு; ஒழிவு.

**வியோகி - 1903 :** உடலிலிருந்து உயிர் பிரிந்தவன்.

**விரதம் - 144 :** இன்ன அறம் செய்வேன் என்றும், இன்ன பாவம் ஒழிவேன் என்றும் தம் ஆற்றலுக்கேற்ப வரைந்து கொள்வன.

**விரிசுடர் மூன்று - 442 :** விரிந்த சுடராக விளங்கும் அக்கினி, சூரியன், சந்திரன் ஆகிய மூன்று.

**விலை - 3012 :** பிறப்பிற்கு ஏதுவாகிய வினை.

**விளக்கு - 2816 :** *1)* ஆன்மா, (2) சிவ ஒளியாகிய ஞானம்.

**விளக்குடையான் கழல் - 2816 :** ஞான ஒளியுடைய சிவபெருமானுடைய திருவடி.

**விளக்கும் சுழியகம் - 1108 :** சாக்கிரத்தானமாகிய ஆக்கினாச்சக்கரம்.

**விளக்கொளிச்சக்கரம் - 1359 :** யாவற்றையும் விளக்கும் ஒளியாகிய நவாக்கரி சக்கரம்.

**விளங்கனி - 315 :** விளாம்பழம். உருவக நடையால் சிவபரம்பொருளைக் குறிக்கும்.

**வினைக்கடல் தீர்வுறுதோணி - 258 :** வினைகளாகிய கடலிலிருந்து ஆன்மாக்களைக் கரையேற்றுதற்குரிய தோணியாகிய இறைவன் திருவடி (உருவகம்). 'பிறவிப்பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்' என்பது திருக்குறள். 'தோணியாகிய சோற்றுத்துறையர்' என்பது திருமுறை. (திருக்குறள் - கடவுள் வாழ்த்து - *10 :* திருநாவுக்கரசர் *-5-33-7).*

**வினைத்துயர்ப்போகம் - 314 :** ஊழ்வினையால் உண்டாகும் துன்பங்களைத் துய்ப்பதாகிய அனுபவம்.

**வினையறு சீவன் - 2472 :** நின்மலனான ஆன்மா.

**வினோதகர் ஈரெண்மர் - 2888 :** தசவாயுக்கள் (இரண்டு + எண்மர்). அவை *:* பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆகிய பத்து.

**வீசம் -1958 :** விதை (பீஜம்).

**வீணாத்தண்டு - 588 :** சுழுமுனை.

**வீரசுவர்க்கம் - 2996 :** வீரர்கள் அடையும் சுவர்க்கம். வாழ்த்த வல்லவர்கட்கு இறைவன் திருவடி வீரசொர்க்கமாக அமையும்.

**வீரம் - 63 :** இறைவனருளிய நவ ஆகமங்களில் ஒன்று வீராகமம். இதனைத் தேஜஸ், பிரஜாபதி ஆகியோர் கேட்டனர்.

**வீரர் - 370 :** வீரபத்திர தேவர்.

**வெண்டலை மாலை விரிசடையோன் - 521 :** வெள்ளிய தலைமாலையைத் தரித்துள்ளவனும். விரிந்த சடைமுடியை உடையனுமாகிய சிவபெருமான்.

**வெள்ளர் - 2900 :** சிவானந்தப்பெருக்குடையவர்.

**வெள்ளிமலை அமராபதி - 367 :** வெள்ளி மலையில் விரும்பி உறையும் இடப வாகனனாகிய சிவபெருமான் (அமர்+ஆ+பதி).

**வெள்ளுயிர் - 418 :** மலங்கள் அகன்ற உயிர்.

**வெளி - 1818 :** ஆகாய சொரூபமான சிவம்.

**2235 :** பரமாகாசம். சிவாகாயம்.

**வெற்பு ஏழு - 2755 :** கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி ஆகிய ஏழு.

**வெறுமனம் -2964 :** எதனையும் நினையாத வெறும் உள்ளம். இந்திரிய சுகங்களாகிய உலக விஷயங்களில் ஈடுபடாத சித்தம்.

**வேங்கடநாதன் - 190 :** வேகும் இயல்புடைய உடலுக்குத் தலைவனானவன்.

**வேங்கடம் - 190 :** வெந்தழியும் உடம்பு.

**வேட்கை - 229 :** ஆசை. கொலையினை உடன்படும் வேள்வியினைச் செய்தல் எனலுமாம்.

**வேடநெறி - 240 :** ஒருவன் மேற்கொண்ட கோலத்திற்குத் (வேடம்) தக்கவாறு ஒழுகும் ஒழுக்கம்.

**வேதக்கண்ணாடி - 2986 :** ஞானக்கண்.

**வேதங்கள் ஐந்து - 2730 :** இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய வேதங்களோடு பாரதத்தையும் சேர்த்து ஐந்து வேதங்கள் என்று கூறப்பட்டுள்ளது.

**வேதத்திரி - 2578 :** இருக்கு, யசுர், சாமம் என்னும் மூன்று வேதங்கள்.

**வேதத்தின் அந்தம் - 1602 :** வேதத்தலைதரு பொருளாகிய இறைவன்.

**வேதப்பகவனார் - 2447 :** நாத தத்துவத் தலைவராகிய சதாசிவ மூர்த்தி.

**வேதம் - 51 :** சமய முதல் நூல். இருக்கு முதலாக எண்ணப்படும் நால் வேதங்களைக் குறிக்கும் என்பர். திருநான்மறை முடிவாம் மூவர் தமிழைக் குறிக்கும் என்றும் கொள்வர்.

**வேத முதல்வி - 1161 :** பிரணவ சொரூபியாக விளங்குபவள்: வேதங்கட்கெல்லாம் முதன்மையாக விளங்குபவள்.

**வேதனை வட்டம் - 1044 :** வேதன் + ஐ + வட்டம். மறைகட்கெல்லாம் தலைவனாகிய பிரமனுக்கும் தலைவனாக விளங்கும் சிவரூபமாகிய ஆகாயத்தின் வடிவான வட்டம்.

**வேதா - 52 :** வேதமோதும் பிரமன்.

**வேதாந்தக் கூத்தன் - 190 :** மறைமுடிவாய் விளங்கும் கூத்தப்பெருமான்.

**வேதாந்த போகம் - 1⌒4 :** வேதத்தின் முடிவான உபநிடதங்களால் உணரப்படும் மெய்ஞ்ஞானம்.

**வேதா ந்தம் - 54 :** ஆறந்தங்களில் ்ன்று. வேதத்தின் முடிந்த நிலை: உபநி_தம்.

> **1422 :** சுத்த சைவ சித்தாந்தமே வே, ா ;தமாகும என்பது திருமூலர் கருத்து.

**வேதாந்தம் ஆறு - 1449 :** காபிலம், காணாதம், பாதஞ்சலம், அட்சபாதம், வியாசம், ஜைமினீயம் ஆகிய ஆறு.

**வேதியன் - 52 :** வேதத்தை உரைக்குமவன்.

**வேந்தனுட்கு ஆறிலொன்று - 244 :** மக்கள் செய்யும் தொழிற்ப பனில் ஆறில் ஒரு பாகம் அரசனைச் சாரும். அவ்வாறே அவர்கள் செய்யும் அற, மற வினைகளின் பயனிலும் ஆறில் ஒன்று அரசனைச்சாரும்.

**வேமத்துள் அங்கி - 222 :** வேமம், அங்கி என்பனவற்றிற்கு முறையே நெய்யும் தறி, ஆடைஎனக்கொண்டு தறியில் நெய்யப்படும் ஆடை (இழை) மென்மை நீங்கி வன்மையடைதல் என்று கொள்வர். இந்நிலையில் இத்தொடர் உவமையாகும்.

**வேலைத்தலைவி - 1161 :** படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் பஞ்சக்கிருத்தியங்கள் இயற்றும் ஈசுவரி.

**வேழம் - 2034 :** யானை - ஐம்பொறிகள் (உருவகம்).

**வேறங்கம் - 55 :** இறைவனைத் தன்னில் ஒரு கூறாகிய அங்கமாகக் கொள்ளாமல் வேறுபட்ட அங்கமாகக் கருதல்.

**வைகரி ஆதி - 2007 :** வைகரி, மத்திமை, பைசந்தி, சூக்குமை ஆகிய வாக்குக்கள்.

**வைத்த சங்காரம் - 425 :** ஆன்மாக்கள் இளைப்பாறுதற்பொருட்டு, பண்டே வைக்கப்பட்ட ஒடுக்கம். சாக்ராதீதநிலை.

**வைத்தவன் பதி - 430 :** சிவபெருமான் உறைகின்ற ஆலயம்.

**வைராக்கியம் - 1585 :** பிரபஞ்ச வெறுப்பு : விடயங்களில் பற்றற்ற தன்மை.

# பின்னிணைப்பு - I

## திருமந்திரப்பாடல் எண்முதற்குறிப்பு

### கடவுள் வாழ்த்து - ஐந்து கரத்தனை

1. ஒன்றவன்
2. போற்றிசைத்தின்
3. ஒக்கநின்றானை
4. அகலிடத்தார்
5. சிவனொடொக்கும்
6. அவனையொழிய
7. முன்னையொப்பாய்
8. தீயினும்
9. பொன்னாற்புரிந்திட்
10. தானே இருநிலம் . . . தடவரை
11. அயலும்
12. கண்ணுதலான்
13. மண்ணளந்தான்
14. கடந்து நின்றான்
15. ஆதியுமாய்
16. கோதுகுலாவிய
17. காயம் இரண்டும்
18. அதிபதி
19. இதுபதி
20. முடிவும்
21. வானப்பெருங்
22. மனத்தில் எழுகின்ற
23. வல்லவன்
24. போற்றிசைத்தும்
25. பிறப்பிலிபிஞ்ஞகன்
26. தொடர்ந்து நின்றானைத்
27. சத்தி எனத்
28. இணங்கி நின்றான்
29. காணநில்லாய்
30. வானின்றழைக்கும்
31. மணகத்தான்
32. தேவர்பிரான்நம்
33. பதிபல
34. சாந்துகமழும்
35. ஆற்றுகிலா

36. அப்பனை
37. நானும்நின்
38. பிதற்றொழி
39. வாழ்த்தவல்லார்
40. குறைந்தடைந்
41. சினஞ்செய்த
42. போயரன்
43. அரனடி
44. போற்றி என்பார்
45. விதிவழி
46. அந்திவண்ணா
47. மனையுள்
48. அடியார்பரவும்
49. பரைபசு
50. குடுவன்
51. வேதத்தை
52. வேதம்
53. இருக்குரு
54. திருநெறியாவது
55. ஆறங்கமாய்
56. பாட்டும்
57. அஞ்சன
58. அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்
59. பண்டிதராவார்
60. அண்ணல் அருளால் அருளும்திவ்
61. பரனாய்ப் பராபரங்
62. சிவமாம்
63. பெற்றநல்
64. அண்ணல் அருளால் அருளும் சிவா ...எண்ணிலி
65. மாரியுங்
66. அவிழ்க்கின்ற
67. நந்தி அருள்
68. நந்திஅருளாலே நாத.
69. மந்திரம் பெற்ற
70. நால்வரும்
71. மொழிந்தது
72. எழுந்து நீர்
73. நந்தி இணையடி
74. செப்புஞ்
75. இருந்தவக்
76. சதாசிவந்
77. மாலாங்கனே
78. நேரிழை
79. சேர்ந்திருந்தேன்
80. இருந்தேன் இக்
81. பின்னைநின்
82. ஞானத்தலைவி
83. செல்கின்ற
84. சித்தத்தின்
85. நான்பெற்ற
86. பிறப்பிலி நாதனை
87. அங்கிமிகாமை
88. அடிமுடி
89. பெற்றமும்
90. ஞேயத்தை
91. விளக்கிப்
92. நந்தி அருளாலே மூலனை
93. இருக்கில்
94. பிதற்றுகின்றேன்
95. ஆரறிவார்
96. பாடவல்லார்
97. மன்னிய வாய்மொழி
98. தத்துவ ஞானம் உரைத்
99. மூலன் உரை . . . ஞாலம்
100. வைத்தபரிசே
101. வந்தமட
102. கலந்தருள்
103. அளவில்
104. ஆதிப்பிரானும் அணி

105. ஈசன் இருக்கும்
106. சிவன் முதல்...ஒன்றாகும்
107. பயன் அறிந்
108. ஓலக்கஞ்
109. வானவர் என்றும்
110. சோதித்த
111. பரத்திலே
112. தானொரு கூறு
113. விண்ணின்றி
114. களிம்பறுத்தான்
115. பதி பசு பாசம் எனப்
116. வேயின்
117. சூரிய காந்தமும்
118. மலங்களைந்தாம்
119. அறிவைம்
120. ஆமேவு
121. வித்தைக்
122. சிவயோகமாவது
123. அளித்தான்
124. வெளியில்
125. சித்தர் சிவலோகம்
126. முப்பதும் ஆறும்
127. இருந்தார்
128. சோம்பர்
129. தூங்கிக்கண்டார்
130. எவ்வாறு
131. மாணிக்கத்துள்ளே
132. பெற்றார்
133. பெருமை
134. புரையற்ற
135. சத்த முதல்
136. அப்பினிற்
137. அடங்குபே
138. திருவடியேசிவ
139. தெளிவு குருவின்
140. தானேபுலன்
141. சந்திப்பது
142. போதந்தரும் எங்கள்
143. மண்ணொன்று கண்டீர்
144. பண்டம் பெய்
145. ஊரெலாங்
146. காலும் இரண்டு
147. சீக்கை
148. அடப்பண்ணி
149. மன்றத்தே
150. வாசந்தி
151. கைவிட்டுநாடி
152. பந்தல்
153. நாட்டுக்கு
154. முப்பதும் முப்பதும்
155. மதுவூர்
156. வைச்சகல்
157. ஆர்த்தெழு
158. வளத்திடை
159. ஐந்து தலைப்பறி
160. அத்திப்
161. மேலும்முக
162. கூடங்கிடந்தது
163. முட்டை
164. இடிஞ்சில்
165. மடல்விரி
166. குடையுங்
167. காக்கை
168. அருளும்
169. இயக்குறு
170. தன்னது
171. ஈட்டிய
172. தேற்றத்
173. மகிழ்கின்ற
174. வாழ்வும்
175. வேட்கை மிகுத்தது
176. உடம்பொடுயிரிடை

177. கிழக்கெழுந்
178. ஆண்டு பலவும்
179. தேய்ந்தற்
180. விரும்புவர்
181. பாலன்
182. காலை எழுந்தவர்
183. பருவூசி
184. கண்ணதுங்
185. ஒன்றிய . . . உடனுற
186. எய்திய
187. தழைக்கின்ற
188. ஐவர்க்கொருசெய்
189. மத்தளி
190. வேங்கட
191. சென்றுணர்
192. மாறுதிருத்தி
193. துடுப்பிடு
194. இன்புறு வண்டிங்
195. ஆம் விதி
196. அவ்வியம்
197. பற்றாய
198. கொல்லிகு
199. பொல்லாப்
200. கொலையே
201. ஆத்த
202. திருத்திவளர்த்
203. பொருள்கொண்ட
204. இலைநல
205. மனைபுகுவார்கள்
206. இயலுறும்
207. வையகத்
208. கோழை
209. புடைவை
210. பொய்க்குழி
211. கற்குழி
212. தொடர்ந்தெழு
213. அறுத்தன
214. வசையில்
215. ஆகுதி
216. அணைதுணை
217. போதிரண்
218. நெய்நின்
219. பாழி
220. பெருஞ்செல்வம்
221. ஓண்சுடரானை
222. ஓமத்துள்
223. அங்கி நிறுத்தும்
224. அந்தணராவோர்
225. வேதாந்தங் கேட்க விருப்பொடு
226. காயத்திரி
227. பெருநெறி
228. சத்தியமுந்தவம்
229. வேதாந்தங்கேட்க விரும்பிய
230. நூலுஞ்
231. சத்தியம் இன்றித்
232. திருநெறியாகிய
233. மறையோரவரே
234. அந்தண்மை
235. வேதாந்த ஞானம்
236. ஒன்றும் இரண்டும் ஒருங்கிய நன்
237. தானே விடும்
238. கல்லா அரசனும்
239. நாள்தோறும்
240. வேடநெறி
241. மூடங்கெடாதோர்
242. ஞானமிலாதார்
243. ஆவையும்
244. திறந்தரு
245. வேந்தன்

246. கால்கொண்டு
247. தத்தஞ்
248. அமுதூறு
249. வரையிடை
250. ஆர்க்கும்
251. தாமறி
252. யாவர்க்குமாம்
253. அற்றுநின்
254. அழுக்கினை
255. தன்னை அறியாது
256. துறந்தான்
257. தான்தவஞ்
258. திளைக்கும்
259. பற்றது வாய்
260. எட்டி பழுத்த
261. ஒழிந்தன
262. அறம்அறியார்
263. இருமலுஞ்
264. பரவப்
265. வழிநடப்
266. கனிந்தவர்
267. இன்பம்
268. கெடுவது
269. செல்வங்
270. அன்பு சிவம்
271. பொன்னைக்கடந்
272. என்பே
273. ஆர்வம்
274. என்னன்
275. தானொருகாலம் சயம்பு
276. முன்படைத்
277. கருத்தறு செம்பொன்
278. நித்தலுஞ்
279. அன்பினுள்
280. இகழ்ந்ததும்
281. இன்பப் பிறவிக்கியல்வது
282. அன்புறு
283. புணர்ச்சியுள்
284. உற்றுநின்
285. கண்டேன்
286. நம்பனை நானா
287. முன்பு
288. ஈசன் அறியும்
289. விட்டுப்
290. குறிப்பறிந்
291. சுற்றறி
292. நிற்கின்ற
293. கல்வியுடையார்
294. துணையது
295. நூலொன்று
296. ஆய்ந்துகொள்
297. வழித்துணை
298. பற்றது பற்றிற்
299. கடலுடை
300. அறங்கேட்டும்
301. தேவர் பிரான்தனைத்
302. மயன்பணி
303. பெருமான்
304. ஈசன் அருளும்
305. வழுப்பமுங்
306. சிறியார்
307. உறுதுணையாவ
308. புகழநின்
309. வைத்தணர்ந்
310. கல்லாதவருங்
311. வல்லார்கள்
312. நில்லாநிலை
313. கில்லேன்
314. நில்லாது
315. விண்ணினின்
316. கணக்கறிந்
317. கல்லாதமூடரை

318. கற்றுஞ்
319. ஆதிப்பிரான்அம
320. நடுவுநின்றார்க்கன்றி
321. நடுவு நின்றான் நல்ல
322. நடுவு நின்றார் சிலர்
323. தோன்றிய எல்லாந்
324. கழுநீர்ப்
325. சித்தம் உருக்கிச்
326. காமமுங்
327. வாமத்தோர்
328. உள்ளுண்மை
329. மயக்குற்
330. மயங்குந்தியங்
331. இராப்பகல்
332. சத்தியை
333. சத்தன் அருள்
334. தத்துவம் நீக்கி
335. யோகிகள்
336. உண்ணீர் . . . குரவன்
337. நடுவுநில்லாதிவ்
338. அங்கி உதயம்
339. கருத்துறை
340. கொலையிற்
341. எங்கும் பரந்தும்
342. எங்குங் கலந்தும்
343. அப்பணி
344. முத்திக்
345. மூலத்துவாரத்துமூ
346. இருந்த
347. அடிசேர்வன்
348. திரிகின்ற
349. ஆழிவலங்
350. தாங்கி இருபது
351. உறுவது
352. ஓடிவந்தெல்லாம்
353. தந்தை
354. சந்திசெயக்
355. அப்பரிசேயயனார்
356. அப்பரிசே அயன்
357. அலர்ந்திருந்
358. அரிபிரமன்
359. செவிமந்திரஞ்
360. நல்லார்
361. தெளிந்தார்
362. கருவரை
363. அலைகடல்
364. தண்கடல்
365. சனமக்கவல்
366. பண்பழி
367. மால்போதகன்
368. சக்கரம் பெற்று
369. கூறது
370. தக்கன்றன்
371. எலும்புங் கபாலமும் ஏந்தி
372. பிரமனும்
373. ஆமேழுலகுற
374. ஊனாய்
375. நின்றான் . . . அண்டத்துள்
376. சேவடியேத்துஞ்
377. தானக்
378. ஆலிங்கனஞ்
379. வாள்கொடுத்
380. ஊழிவலஞ்செய்
381. ஆதியோ
382. நாதத்தில்
383. இல்லது
384. தூரத்திற்
385. மானின்கண்
386. புவனம்
387. புண்ணியன் நந்தி
388. நீரகத்
389. உண்டுலகேழும்.

390. ஓங்கு
391. காரணன்
392. பயன்எளி
393. போக்கும்
394. நின்றுயி
395. ஆகின்ற தன்மையில்
396. ஒருவன் ஒருத்தி
397. புகுந்தறி
398. ஆணவச்சத்தியும்
399. உற்றமுப்
400. ஆகாயமாதி
401. அளியார்
402. வாரணி
403. நின்றது . . . இயங்கும்
404. ஒருவனுமே
405. செந்தாமரை
406. தேகுந்திசை . . . பிறவி
407. ஓராயமே
408. நாதன்
409. அப்பரிசென்
410. ஆதித்தன் சந்திரன்
411. புகுந்து நின்றான் வெளி
412. தானே திசையொடு . . . உடலுயிர்
413. உடலாய்
414. தேடுந்திசை . . . மரபு
415. தானொரு காலர்
416. அன்பும் அறிவும்
417. உற்று
418. உள்ளுயிர்ப்
419. தாங்கருந்
420. அணுகினுஞ்
421. அங்கிசெய்திசன்
422. இலயங்கள்
423. பதஞ்செய்யும் பாகும்
424. கொண்டல்
425. நித்தசங்காரம் உறக்கத்து
426.. நித்தசங்காரம் இரண்டு
427. நித்தசங்காரங்கருவிடர்
428. நித்தசங்காரமும்
429. பாழே முதலா
430. தியவைத்தார்
431. உள்ளத்தொருவனை
432. இன்பப்பிறவி படைத்த
433. இறையவன்
434. காண்கின்ற
435. தெருளும்
436. அரைக்கின்றருள்
437. ஒளித்துவைத்
438. நின்றது . . . இயங்கி
439. ஒருங்கிய பாச
440. மண்ணொன்று . . . இவ்வண்ணம்
441. எட்டுத்திசையும் எறி
442. உச்சியில்
443. குசவன்
444. விடையுடை
445. உகந்துநின்
446. படைத்துடை
447. ஆதிபடைத்தனன்
448. அகன்றான்
449. உண்ணின்ற
450. ஆரும்
451. ஆக்குகின்றான்
452. அறிகின்ற
453. இன்புறு
454. கருவை
456. பூவின்
457. போகின்ற எட்டு
458. ஏற
459. ஏயங்கலந்த
460. கர்ப்பத்துக்

461. என்பால்
462. பதஞ்செய்யும் பால்
463. ஒழிபல
464. சுக்கிலநாடி
465. போகத்துள்
466. பிண்டத்தில்
467. இலைப்பொறி
468. இன்புற்றிருவர்
469. அறியீருடம்பினில்
470. உடல்வைத்த
471. கேட்டுநின்
472. பூவுடன்
473. எட்டினுள்
474. கண்ணுதல்
475. அருளல்ல
476. வகுத்த
477. மாண்பது
478. ஆண்மிகில்
479. பாய்ந்தபின்
480. பாய்கின்ற
481. மாதா
482. குழவியும்
483. கொண்டநல்வாயு
484. கோல்வளை
485. உருவம் வளர்ந்திடும்
486. இட்டான்
487. இன்புற
488. குயிற்குஞ்சு
489. முதற்கிழங்காய்
490. ஏனோர் பெருமைய
491. பரத்திற்கரைந்து
492. சத்திசிவன் விளையாட்டல்
493. விஞ்ஞானர் நால்வர்
494. விஞ்ஞானர் கேவலத்
495. இரண்டாவதில்
496. பெத்தத்தசித்
497. சிவமாகி ஐவகைத்
498. விஞ்ஞானர் ஆணவ
499. விஞ்ஞான கன்மத்தால்
500. ஆணவந்துற்ற
501. திலமத்தனையே
502. கண்டிருந்
503. கைவிட்டிலேன்
504. ஆவன ஆவ ...இளங்கிளை
505. கோல
506. ஈவது
507. ஆமாறறியான்
508. மண்மலை
509. உள்ளத்தின் உள்ளே உளபல
510. தளியறி
511. உள்ளத்தின் . . . ஒருவனை
512. அறிவார் அமரர்கள்
513. கடலிற்
514. கலந்தது
515. தாவரலிங்கம்
516. கட்டுவித்தார்
517. ஆற்றரு
518. முன்னவனார்
519. பேர் கொண்ட
520. எம்பெருமான்
521. அண்டமொ
522. வெய்தான் . . . புகழும்
523. நந்தி எழுந்து
524. அதோமுகங் கீழண்ட
525. அதோமுக மாமலர்
526. தெளிவுறு
527. முளிந்தவர்
528. அப்பகை
529. போகமும் மாதர்
530. பெற்றிருந்

531. ஓரெழுத்தொரு பொருள்
532. பத்தினி
533. மந்திரம் ஓரெழுத்
534. ஈசனடியார்
535. சன்மார்க்கசற்
536. கைப்பட்ட
537. ஆண்டான்
538. ஞானியை
539. பற்றிநின்றார்
540. ஓலக்கஞ்
541. ஞானம் விளைந்தவர்
542. வல்வகை
543. ஓடவல்லார்
544. தாமிடர்ப்
545. அறிவார் அமரர்தலை
546. தார்சடை
547. உடையான்
548. அருமை வல்லான்
549. உரைத்தன
550. செய்தஇயம
551. அந்நெறி இந்நெறி
552. இயம நியமமே
553. எழுந்துநீர்
554. கொல்லான்
555. ஆதியை
556. தூய்மை
557. தவஞ்செபஞ்
558. பங்கய
559. ஓரணை
560. துரிசில்
561. ஒக்க அடியிணை
562. பாதமுழந்
563. பத்திரங்
564. ஐவர்க்குநாயகன்
565. அரியனல்லன்
566. புள்ளினும்
567. பிராணன்
568. ஏறுதல்
569. வளியினை
570. எங்கே
571. ஏற்றி
572. மேல்கீழ்
573. வாமத்தில்
574. இட்டதவ்
575. புறப்பட்டுப்பு
576. கூடம்எடுத்
577. பன்னிரண்டானை
579. நாபிக்குக்
580. மூலத்திரு
581. நாசிக்கதோ
582. சோதி
583. மூலத்துவாரத்தை
584. எருவிடும்
585. ஒருக்கால்
586. புறப்பட்டவா
587. குறிப்பினின் . . . நீங்கி
588. கோணுமனத்தை
589. மலையார்
590. மேலைநிலத்தினான்
591. கடைவாசலைக்
592. கலந்த
593. வாய்திற
594. வாழலுமாம்
595. நிரம்பிய
596. முன்னம்
597. அரித்த
598. வருமாதி
599. கண்ணாக்கு
600. ஒண்ணாநய
601. ஒருபொழுது
602. மனத்து
603. எண்ணாயிரத்

